பலம்பொருந்திய வாள்முனையில் விஜயமும்
(ஆன்கும்-) ஆக்கும்பெருமை ஸல்கீர்த்திகளை
சம்பாதிக்கின்ற சந்தானபாக்கியத்தில்
அழகேறின சந்தானலக்ஷ்மியும் வளப்பம்
பொருந்தின நவதான்னிய அவர்ண்ண நத்-
-ன விபவ, ஸமிர்த்தமான ராஜ்ஜியத்தி-
-னில் தனலக்ஷ்மியும் இப்படி பாக்கிய
லக்ஷ்மி, கல்விலக்ஷ்மி, தானலக்ஷ்மி, வீ
ரியலக்ஷ்மி, தைரியலக்ஷ்மி, விசய
லக்ஷ்மி, ஸந்தானலக்ஷ்மி, தனலக்ஷ்மி,
என்ற அஷ்டலக்ஷ்மிகள் ஸ்திதிக்க
ப்படாநின்ற ஹேபிதாவே
யேனைநின்பணி— எ.து

உமது உத்தரவான கல்பனை எதொரு
விதமோ அவ்விதமும் செய்யலாம் நிமிஷ
நிமிஷமாக மாறிமாறி உமது சித்தனையில்
உதிக்காநின்ற ஆக்கரஹங்கள் தே-
-வரீர் சொல்லாதபடிக்கு தெரிந்து நி-
-றைவேற்றத்தக்கதாக
ஆனதின்பணி— எ.து

உம்முடைய ஆக்கரஹத்துக்கு தகுந்ததான
விதமல்லாமல் உமக்குஇஷ்டமல்லாதபடிக்கு
யாதொரு கிர்த்தியங்களும் உமது காருண்
ணியத்தினால் அடியனுக்கு செய்யகூடு
மோபிதாவே.

அவதாரிகை

என்றிப்படி ராமன்சொல்ல தெசரதனும் சந்தோஷித்து சுமந்த்ரரை வரவழைத்து பட்டாபிஷேகத்துக்குள்ள ஒருக்கங்க-ளெல்லாம் செய்விக்கவும் கௌசலையும் சுமித்திரயும் விஷ்ணு க்ஷேத்திரத்தில்செ-ன்று விரதமிருக்க வசிட்டரிடத்தில் தெ-சரதன்சொல்லி ராமனுக்குவேண்டிய உறுதிகளை போதிக்கும்படி அனுப்ப அவரும் ராமனைக்கண்டபோது ராமன் நமஸ்காரம் செய்யவும் பிடித்து அருகிருத்திசொல்

## மந்தரைசூழ்ச்சிப் படலம்

கவி.

ஒல்கலில் தவத்துத்தமனேதுநூல்
மல்குகேள்வியவள்ளலிராமனே
புல்குகாதல்புரவலன்போர்வலாய்
நல்கும்நாணிலம் நாளைநினைக்கரோ (1)

(இ-ள்) வாராய்ராம வாராய் ராகவ உன்னுடயவைபவத்தைஆலோசினைசெய்தால் (ஒல்கலில்-எ-து) சலனமில்லாமல்ஏகாக்-கிரமானசராயி, தீர்க்ககாலம் தபஸை செய்து லட்சியபிராப்தியடையாநின்ற தவஸீசுவரர்களான உத்தமோத்தர்க-ளைன்று வைதீகர்களால்பிரபாஷணை ஞ்செய்துவரப்பட்ட

(மல்குகேள்விய-எ.து) நெருங்கியகே-ள்வியாகிய ஸாஸ்த்திரங்களிலும் நிபுண-

-ஞகியும் வேதங்களுக்கும் அதிகாரியாகிய
ஹேராகவ: உண்ணிடத்தில்

(புல்குகர்தல்—எ-து) காதலென்னும் பெரி-
-யவால்சல்லிய முள்வைஞயி ராஜாதிராஜ-
-ஞகி போரில் பராக்கிரமசாலியாகி, சோ-
-பிக்கிற தேசாதி சக்கரவர்த்தியானவர்

(நல்கும் நாணிலம்—எ-து) நாளையத்தினம்
விசாலமான இந்த ராஜ்ஜியத்தை பரிக்-
-கவேண்டின அதிகாரத்தை உண்ணிடத்தி-
-ல் அபிஷேகம் செய்து பாரமேற்பிக்கும்
ராகவ: ஆனதினல் ஒரு ராஜாவானவர் செய்-
-யவேண்டிய ராஜநீதிகளை நீயும் குருகுலவா-
-சத்தில் கிரஹிக்கவேண்டியவைனைன்று வந்-
-தாலும் பிரத்யேகமாக உண்ணிடத்தில் உப-
-தேசிக்கவேண்டியதும் நீ தரிக்கவேண்டி-
-யதும் என்னவென்றல்

கவி.

கரியமாலினுங்கண்ணுதலானினும்
உரியதாமரைமேலுறைவோனினும்
விரியும்பூதமொரைந்தினுமெய்யினும்
பெரியரந்தணர் பேணுதி உள்ளத்தால்(2)

(இ-ள்) மூர்த்தித்திரயங்களை
பிரம்ம, விஷ்ணு, மஹேசுவரன், என்-
-னும் மூர்த்திகள் வகைபேதம் அதி-
-ல் ரக்ஷாசதுரன நாராயணரே தெய்வ-

-மென்றும் மங்களமூர்த்தியாகிய பரமசி-
-வரே தெய்வமென்றும்

(உரியதாமரை—எ-து) உரியதென்னும்
நாராயணஸ்வாமியானவருடைய நாபி-
-ஸரோஜத்திலிருந்து மேலெழும்பி ஸத்தி-
-யலோகநிவாஸியாயி சிருஷ்டியென்னும்
கருமத்தை செய்யாநின்ற பிரம்மதேவ-
-னையாரக்கிலும் ஸ்தூலமாயும் சூட்சும-
-மாயும் விகஸிதமாகிய

(விரியும்பூத—எ-து) சப்த, ஸ்பரிச, ரூ-
-ப, ரச, கந்த, மென்ற தன்மாத்திரைகளோ-
-டு கூடியும் ஒன்றிலொன்று லேனமாயும்
ஒன்றிலொன்று வித்தியஸ்தமாயும் கா-
-ணாநின்ற பிறுதுவி, அப்பு, தேயு, வாயு, ஆ-
-காசமென்று சொல்லாநின்ற பஞ்சபூ-
-தங்களிலும் மெய்யாகிய சரீரத்திலும்
ஸஞ்சனமான ஸத்தியத்திலும்

(பெரியஅந்தணர்-எ-து) மேன்மைபட்ட-
-து யேதென்றல் அந்தணர்களை பிராம்-
-மணர்களென்று மனதில் நிச்சயிக்க
வேண்டும் கேட்டயோராகவா

"அந்தணரென்போரறவோர் மற்றெ
வ்வுயிர்க்குஞ் செந்தண்மைபூண்டொழுகலில்"

பிராமமணர்கள் மற்றுஞ்ஜீவராசிகளுக்கு
"லோகோஸமஸ்த்தே சுகினோபவந்து"
முன்சொன்ன நியமபிரகாரம் அவரை
சேவைசெய்யுமாயிருந்தால் திருமூர்த்-

-திகிரியும் உலகத்தேயும் ஸேவனஞ்-
-செய்து ரக்ஷிக்காதென்ற தன்மையாகிய
மென்று தெரிந்துகொள்வாய்ராகவா:
கவி.
அந்தணாளர்முனியவுமாங்கவர்
சிந்தையாலருள்செய்யவுந்தேவரில்
நொந்துளாரையுநொய்துயர்ந்தோரையும்
மைந்தவெண்ணவரம்புமுண்டாங்கொ
(இ-ள்) அந்தணரென்று [லோ(9)
சொல்லாநின்றபேர்கள் யாரென்னில்
"ஜன்மனால் ஜாயதேசூத்திரா
கர்ம்மணா ஜாயதே துவிஜ: வேதபா-
-ரங்கிதோ விப்பராஞ பிரம்மதியா-
-நீது பிராம்மண:
என்றசுருதிவாக்கியபிரகாரம் ஒரு
பிராமணப் பெண்ணானவள் பிரசவி-
-க்கும்போது பிராம்மணாகபிறக்கி-
-றதில்லை அவன்சூத்திரன்தான் அனந்த-
-ரம் ஸல்கர்ம்மங்களான ஜாதககர்ம்மம்
உபநயனம் முதலான ஸம்ஸ்காரகர்ம-
-ங்களினால் துவிஜனென்னும் பிராம்-
-மணபுனர்ஜன்மமானதைலபிச்சுயர்-
-க்கு வேதம் காயத்திரிமுதலாகிய
வேதோச்சாரணங்களைசெய்து
அதினுடைய அர்த்தியனம் சேர்த்து
மாக விப்பரன் என்னும் ஸ்தானம்

வஹித்து அநுபவராகிகளுகிஸத்-
-குருலாபத்துவாரால் சிரவணமன
ஞதி ஸாக்ஷாத்காரமாயிதன்னுயி-
-ரைப்போல் மன்னுயிரென்றெண்ணும்
விவேகமுள்ளவனுயி பிரம்மஞானி
ஈசுவரனென்றும் உலகமென்றும் தானெ-
-ன்றும் உண்டானபேதாபேதமில்லாமல்
நிறைந்நின்றயாதொருவனே அவனே
பிராம்மணனென்று நிர்வசிக்கலாம்
அப்பேர்ப்பட்ட
(அந்தணர் — எ-து) மஹாம-
-னஸ்க்கர்களாயிசோபிக்கா
-நின்ற பிராம்மணர்களுடைய
கோபத்துக்கும் அச்சொல்லா-
-நின்ற மஹாத்மாக்களுடைய
(சிந்தையாலருள் — எ-து)
சிந்தையாகிய மனதில் கிருபை
கூர்ந்து சந்தோஷிக்கவும் செய்-
-யுமாயிருந்தால் தேவரானதெ-
-ய்வத்தன்மையில் எத்திசேர்ந்து
இந்திரனுக்கு ஸமானமாயி
வாழ்விக்கப்பட்டவன் நகுஷன்
என்றமஹாராஜாவுபெரும்பாம்பாக
பூமியில் அதுபதிச்சதும் ஸப்தரிஷி
களானவர்கள் சாபத்தைஏற்பட்டவன்

ஹரிச்சந்திரன் பிதாவாகிய திரிசங்கு-
-வானவன் விசுவாமித்திரனென்னும்
கௌசிகருடைய அனுக்கிரஹத்-
-தினால் தனதாகிய ஒருசொர்க்கம-
-ண்டலத்தில் எத்திசேர்ந்துமோ-
-சனமடைந்தார் இப்படி பிராம்மண-
-சாபம் பிராம்மணருடைய அனுக்கி-
-ரஹம் முதலானவைகளால் புண்ணி-
-யபாபங்களை சம்பாதிக்கின்ற
பேர்கள்

(மைந்தவெண்ண — எ-து)
எண்ணிஆலோசனைசெய்யாநின்ற
காலத்தில் பதிதியில்லாமல் நிரவதி
யாகிவுமென்றறிந்துகொள்ளுவாய்
சிஷியனே. கவி-

யாரொடும்பகை கொள்ளிலனென்றபின்
போரொடுங்கும் புகழொடுங்காது தன்
தாரொடுங்கல்செல்லாது அதுதந்தபின்
வேரொடுங்கெடல் வேண்டலுண்டாகுமோ (4)

(இ-ள்) வாராய் ராமவாராய் ராகவா!
அநுகூல பிரதிகூல சாஹசரியம் ஹே-
-துகமாக, காமக்ரோதாதிகளான வி-
-காரங்கள் உல்பவிக்கும் ஏதுபோல-
-ன்றால் "புலியுமனுகூலமாமெனிலிட்ட-
-மாம் பகைசெயின்

புதல்வரெனினும் வெறுப்பாம். உலகத-
-னிலிருவரையுமல்லாத புல்லாதி, உதாஸீ-
-னமதனுல்" என்ற அருதியிருந்ததிலும்
தனக்கனுகூலப்பட்டது மாம்ஸபுக்கான
புலியென்றிருந்தாலும் சிநேகித்து வள-
-ர்த்தப்படும் பகையென்னும் துரோஹ-
-த்தை செய்யுமென்றால் பீஜசந்தியான
புத்திரனென்றுவந்தாலும் உபேக்ஷிக்க-
-ப்படும். அனுகூலபிரதிகூலமில்லாத,புல்
மரம்முதலானவைகளில் உதாஸீனமனோ-
-பாவமும் ஏற்படும் ஒரு ராஜாவென்றால்
யாதொருபேர்களிடத்திலும் வகைபேத-
-மில்லாதபடிக்கு ஸமபாவனையாயி பி-
-ரஜைகளை ரட்சிக்க வேண்டும்
(யாரொடும்-எ.து) யாதொருவரிட்-
-த்திலும் பிரதிகூலம் அகம்பாவமில்லா-
-மலும் விரோதியல்லாமல் சிநேஹபூர்வம்
ஸம்ரட்சணை செய்தால் அந்தராஜாவுக்கு
(போரொடுங்கும்-எ.து)
போராகியயுத்தமில்லாதபடிக்கு வந்து
சேரும் காலத்ரயத்திலும் தீராத, ஸல்கீ-
-ர்த்தி அனுபவப்படும்
(தாரொடுங்கல்-எ.து) தன்னுடைய ராஜ்ஜி-
-யஸம்ரட்சணைக்காக நிலைநிறுத்தா-
-நின்ற சமூஹங்களுக்கும் திரவ்வியங்களுக்கும்

பாவியில் நாசமில்லை

(வேரொடுங்கெடல்—எ-து) இன்னன் இனி-
-யான் நிமித்தமாக வம்சமே அற்றது உலகமே
நசிச்சது என்றுண்டான பராதிகளான
ணைதன்ணியதையும் பிரஜைகளுக்கு
வரவில்லையேராகவ:

கவி.

உமைக்குநாதற்குமோங்கு புள்ளூர்திக்கும்
இமைப்பினட்டமொரெட்டுடையானுக்கும்
சமைத்த தோள்வலி தாங்கினராயினும்
அமைச்சர்சொல்வழியாற்றுதலாற்றலே (5)

(இ-ள்) உமாமகேசுவரியான பார்வதீ-
-நாதனாகின பஞ்சாட்சரவைபவராகி, பஞ்-
-சகிருத்தியபராயணராகி, பஞ்சபாபவி-
-மோசிதராகி; பஞ்சானனதோஜோமயராகி
பஞ்சபாணசலபஹுதாசனநேத்திரராகி
சோபிக்கப்பட்ட பரமேஸ்வரசுவாமிக்கும்
ஓங்கி உன்னதமான வாயுமண்டலமெங்கும்
பறந்து ஸஞ்சரிக்காநின்ற கருடாள்வார்பேரில்
இருந்து ஸஞ்சரிக்காநின்ற லோகரட்சா-
-சதுரனாகி கோடிசூரியபிரகாசமான சு-
-தர்சனமென்னும் சத்துருநிக்கிரஹயோக்-
-கியமான சக்கிரபாணியான நாராயணசு-
-வாமிக்கும்

(இமைக்கும்—எ-து) இமைத்து உன்மீலன

நிமிலமையென்னும் அவஸ்த்தையோடுகூடின
எட்டுகுணங்களோடும் சதுர்முகங்களோடும் கூடி-
-ன ஸிருஷ்டிகர்த்தாவான பிர்ம்மதேவருக்கும்

(சமைத்ததோள் — எ-து)

தங்களால் சுயமேவ செய்யாதன்ற சம்-
-ஹாரம், ரட்சைக்ஷ, ஸிருஷ்டி, இத்தியாதிக-
-ளை செய்யத்தக்க புஜபலபராக்கிரம-
-சாலிகளென்றுவந்தோரும்

(அமைச்சர் — எ-து) அமைச்சரென்னும்
அமாத்தியர்களான மந்திரிமோர்கள்சொ-
-ல்லப்பட்ட உபதேசத்தைக்கேட்டு
செய்வதே ராஜாக்களுக்கு சக்தி-
-யென்று தெரிந்து வந்தியர்களாகிய, கு-
-லவிருத்தன், வயோவிருத்தன், சாஸ்திர-
-விருத்தன், ஞானவிருத்தன், தனவிரு-
-த்தன், என்னும் பரிபூர்ணமான தன்னி-
-யர்களோடுகூடியவனை மந்திரிகளோடு
சுவீகரித்து ராஜாங்கம் செலுத்துவதே
ராஜாவுக்கு பூஷணமென்று தெரிந்துகொள்

ராகவ- கவி-

தூமகேது புவிக்கெனத்தோன்றிய
வாமமேகலை மங்கையரால்வரும்
காமமில்லையெனிற்கடுங்கேடெனும்
நாமமில்லை நரகமுமில்லையே (6)

(இ-ள்) தூமகேதுவென்னும்நட்சத்திரம்

உதயமான காலத்தில் உலகத்துக்கே நாசமாகிலும் என்று எல்லாபேர்களும் அந்த தூமகேதுவை வெறுக்காநின்ற தன்மையைப்போல

(வாமமேகலை—எ-து)

இந்த பூமண்டலத்தில் மேகலையாகிய ஆபரணமான கடக, கடிசூத்திர, காஞ்சி, குங்கலுபரணாதி பூஷணங்களான, கு-ங்குமபங்க, களங்கித தேஹிகளையும், தும்ங்கபயோதர சாருசரீரிகளையும், நூபுரகாஞ்சிரணல்பதபாதகளையும், பு-ருஷவர்க்கங்களைத்தன்னிடத்தில், வ-சீகரிக்கும் யௌவ்வனயுக்தகளையி, சோபிக்காநின்ற ஸ்த்ரீகளிடத்தில் செல்லாநின்ற விகாரமானதை தனதாக சுவிகரிக்கவேணும்மென்றும் புருஷர்க-ளுக்கு வராநின்ற சேதோவிகாரமேகலை அந்தமலினசித்தவிருத்தியான ஒன்றை தியகிக்கவேணும் அந்த

(காமமில்லையென்ற—எ-து) இந்தவி ஷயசுகங்களில் ஒருவனுக்கு அதிக-மாக, ஆஸக்தியில்லையென்றும் எல்லாம் தியாசம், தியாகம், யென்ற மனோபாவம் உ-ண்டென்றுவருமாயிருந்தால் அந்தமனக்-கருத்துள்ளவனுக்கு ரோகபாணதையென்னும்

சத்துருபிடனமென்னும் ஐதிகங்களான
சங்கடங்கள் என்றுள்ள.

(ராமமில்லை — எ-து) அந்த துர்க்கடா
வஸ்த்தைகளின் பேர்போலுங்கிடையாது
மரணாந்தரம் அந்த விரக்தனைவனுக்கு
நரகமென்னும் அவஸ்தையும் வரபோகிறதி-
-ல்லை. என்று நீ அறிந்துகொள் ராகவா

அவதாரிகை

என்றிப்படி வசிட்டர் ராமனுக்கு உறுதிகள்
கூறி மஞ்சனமாடச்செய்து தெர்ப்பயிலிருத்தி
தெசரதனிடம் செல்லவும் வசிட்டர் அபிஷே-
-கமண்டபத்தில் சென்று அபிஷேகத்துக்கு
வெண்டிய சடங்குகளை செய்ய ஒருங்கவும்
இப்பால் சுமந்திரனும் சூரியோதயம் ராமனுக்கு
பட்டாபிஷேகமென்று வள்ளுவரையழைத்து
பேரிகைமுழக்கவும் - தசரதன்னகர் அலங்-
-கரிக்க. மந்தரை இவன் சூண்டி விண்டிவில்-
லிலே சிறியகல்வைத்தெறிந்து நோவச்செய்யும்
பழிக்குப்பழி மீளுவேனென்று கைகேயினிடம்
சொல்

கவி.

ஆடவர்நகையுற வாண்மைமாசுறத்
தாடகையெனும்பெயர்த்தையலாள்பட
கோடியவரிசிலையிராமன் கோமுடி
சூடுவநாளையாம் சுகத்தினல்லரோ (7)

(இ-ள்) சரணம்தாயே தேவரீரும் உமது கணவ-

-ஞான மஹாராஜாவின் வரவை பார்த்து அதிவ-
-திக்காநின்ற ஒருவியோ? இந்த அரண்மனையில்
நடக்காநின்ற, குதந்த்ரங்களொன்றும் தேவரீர்
தெரிந்ததில்லையோ தாயே தெரியவேண்டினதாகி-
-லும் யோதென்றல்

(ஆடவர் –) ஆடவரென்னும் புருஷவர்க்கங்கள்
யாதொருவன் காணுமாயிருந்தாலும் பரிஹா-
-சமானபாவனையோடுகூடி மந்தஹாஸிக்கும்
பொருட்டாகவும் ஆண்மையாகின பௌருஷ-
-த்துக்கு களங்கம் பாதிக்க

(நாடகையெனும் – எ-து) நாடகையென்று
சொல்லாநின்ற ஒருத்தி மரணமடைந்து
விஷபாண மெய்து ஸ்த்ரீவதம் நடத்தின-
-வனோ ராமன். குருமுகத்திலிருந்து, வித்திய-
-களை அப்பியஸித்து, அந்த குருவானவன்,
ஏற்பித்து கொடுக்காநின்ற, ஆயுதங்களையும்
வித்தைகளையும், அவீகரித்து, தான் குருவான-
-வரிடத்தில், அதர்ம்மங்களான, பிரம்மஹத்தி,
மாதுருஹத்தி, பிதுருஹத்தி, சிசுஹத்தி,
ஸ்த்ரீஹத்தி, கோஹத்திமுதலான பாபகர்-
-ம்மங்களை செய்யமாட்டேனென்ற சத்தி-
-யஞ்செய்து வில்வாங்கினவன் அதைசெய்-
-யாமல் ஸத்தியதர்ம்மங்களுக்கு விபரீதமாக

(கோடியவரிசிலை – எ-து) வில்லை வளைத்து
ஸ்த்ரீவதம் செய்து ... சரிக்காநின்றருவனோ

ராமன் அவனுக்கு கோமுடியென்னும் பரமாதிகா-
-ரமான ராஜபட்டத்துக்கு வேண்டின கிரீடத்தை
(சூடுதல்நாளையாம்·எ·து·) சூடப்படுதல் அடுத்த தினம்
சூரியோதய காலத்திலாகிலும் சுபமாக செய்ய
கூடினதென்று தேவரீர் தெரிந்ததில்லையோ தாயே·

வாராய் மந்தரையே இந்த சந்தோஷ வா-
-ர்த்தையை என்னிடம் வந்து சொன்ன உனக்கு
இதோ ஒருமுத்துமாலையைத் தந்துகொள்கிறேன்

தாஸி· ஓஹோ தாயே நீரும் இதில் சந்தோஷ
முள்ளவளோ· உம்முடைய மாலையை இரண்டு
துண்டமாக செய்து உன்புறோபாகத்தில் எறிந்து
கொள்கிறேன் இத்தோ· கவி·

வேதனைக்கொருத்தியாள் வெகுண்டுநின்வயின்·
பேதயைப்பித்தினிற் பிறந்தசேயொடும்
நீதுயர்படுக நாளைடிதுன் மாற்றவள்
தாதியர்க்காட்செய த்தரிக்கிலேனரோ· (௪)

(இ·ள்·) கஷ்டம் கஷ்டம் தாயே இந்தராமகுமாரனு-
-க்கு பட்டாபிஷேகஞ்செய்யாநின்ற காரியத்தில்
நீரும்மிகுந்த சந்தோஷமடைந்தீரே· உம்முடைய
மாலையும் வேண்டாம் யாதொன்றும் வேண்டினதில்லை·
இந்த அரண்மனையிலுண்டான சகலமானபேர்·
-களுக்கும் நகரவாசிகளுக்கும் உனக்கும் எல்லாம்
சந்தோஷம் மனோவேதனைக்கு ஒரேஒருவியாகி-
-ய மந்தரையாகிய நான் மட்டும் அவசேவி
த்துவிட்டதில்லையோ தாயே·

உனது பரிசான மாலையை உபேக்ஷிக்கும் கா-
-லையில் நீர் பலவித ஆசையத் தோடுகூடி என்னை
பார்த்து விரலியெடுத்து பார்க்கிறயே கஷ்-
-டம் கஷ்டம்

(பேதையைப்பித்திநிற் — எ·து) பேதையெ-
-ன்னும் ஒன்றுக்கும் பிடியாத விவரமில்லாத
வளோடீ! அதோ பித்தென்னும் பூர்வகாலஸ்மர-
-ணையில்லாமல் பிராந்தியடைந்தவளோடீ!
நின்னில் பிறக்காதன்ற புத்திரனுக்கு ராஜ்ஜி-
-யஸ்தானங்கொடுக்கவேணுமென்று சொல்லினற்-
-பித்து உன்னை தசரதமஹாராஜாவுக்கு விவா-
-ஹஞ்செய்து கொடுத்தவரே கேகைய ராஜா-
-வான உன் பிதாவாகும்- அதைவிஸ்மரிச்சு
விட்டதோ தாயே "நின் பிறந்த சேயாகும்"
நீர் பத்துமாதக்காலம் கர்ப்பத்தில் சுமந்து
உம்மிடத்தில் ஜெனிக்கப்பட்ட உன் புத்தி
ரனான பரதனுக்கு பூர்வகாலவாக்தத்தங்
களை உபேக்ஷிதமாகசெய்து அந்த பரதனைவன்
ராமனுக்கும் தீகைஞசூல்லியயானவனுக்கும்
நிரந்தரமாக தாஸிய கிர்த்தியங்களைச்செ-
-ய்ய அவர்சொன்னபடி கேட்டு சங்கடப்படத்-
-தக்க சந்தோஷமுள்ளவளைன்று வந்தாயே
மந்தரையான நான் தீர்க்ககாலம் உமது சே-
-வனஞ்செய்து ஒரு ராணியின் தோழியென்ற
பதவியைவிட்டு உன்னுடைய விரோதியாகின

கௌசலயே மஹாராணி அவனுடைய தாசி-
-யே கைகேயி அந்த

(தாதியர்-எ-து) அந்த விதமான தா-
-ஸிகளுக்கு தாஸியாய் அவர் சொற்படி
கேட்கும்படியாக ஸஹிக்கப்பட்டவளல்ல-
-கேட்டீரோ தாயே! அதினால் நாம் பெறுந்தச-
-ங்கடமுள்ளவள் கேட்டீரோ தாயே!-

வாராய் தோழி மந்தரையே நீ என் பேரில்
கோபித்தும் ஸங்கடப்படும் சொல்ல கார-
-ணம் என்ன? ஆத்தாரார்த்தம் தெரிந்ததில்ல
யே ஸ்திரீயே

எல்லாம் சொல்லலாம் எப்பாகாரமென்றால்

கவி.

செவந்தவாய்ச் சீதையுங்கரிய செம்மலும்
நிவந்தவாசனத்தினி திருப்ப நின்மகன்
அவந்தனாய் வெறுநிலத்திருக்கலானபோ
துவந்தவாறென்கிதற்குறுதியாதின்றே (4)

(இ-ள்.) செவந்த கோவைபழம் போல் சுந்த-
-ரமாகிய வாயோடுகூடின சீதையென்றுண்டான
ஸ்திரீ ரத்னவும் கரிய செம்மலென்னும் நீலமேக-
-ஸ்யாமளவர்ணனாயி, அதிகோமள சரீரனாகி
சோபிக்கிற ராமகுமாரனும்

(நிவந்தவாசன — எ-து) எல்லா ஆந்தியங்களையும்
எல்லாபேர்களினும் செய்யிக்க தக்கதான
பரமாதிகாரமுள்ளவனாயி பரமபிரதானமாகின

ராஜ்ஜிய சிஹாசனத்தில் இருக்குமாயிருந்-
-தால் நின்மகன் உன்னிடத்தில் ஜெனிக்காநின்ற
புத்திரன் பரதன்

(அவந்தனை — எ-து) மஹாராணியாகின கைகே-
-யி புத்திரனைன்றே மஹாராஜாவினுடைய
குமாரனைன்றே உண்டான ஒருபந்துவும் இல்-
-லாதபடிக்கு வெறும்பாமரனைப்போல் ஸ்-
-தானமானங்களில்லாமல் இருக்கவேண்டிவரும்
அந்தவிதமாக வெறும் அடர்ந்தவியாவியில்
வாரானென்ற காலத்தில்

(உவந்தவாறு — எ-து) நீசந்தோஷப்பட
க்காரணமென்ன? என்னவாகிலும் இதற்கு
நிவாரணமாக்கும் ஏதோவென்று ஆலோசனை
செய்யாதவளாக வந்துவிட்டீரே தாயே

கவி.

சரதமிப்புவியெலாந் தம்பியோடுமிவ்
வரதனேகாக்குமேல் வரம்பில்காலமும்
பரதனுமிளைவனும் பதியினீங்கிப்போய்
விரதமாதவஞ்செயவிடுதனன்றரோ (10)

(இ-ள்.) நாளையத்தினம் சுபமுகூர்த்தத்தில்
ராமனுக்கு பட்டாபிஷேகம் நிறவேறுமாயிருந்தால்
சரதமென்னும் நிஸ்சயமாயும் இந்த உலகமெ-
-ல்லாம் தனது தம்பியாகின லட்சுமணனை சஹா-
-யமாகசேர்த்து

(வரதனே—) எல்லாபேர்களுக்கும் கைமாறு-
-கருதாமல் தானதர்ம்மங்களை செய்யப்பட்ட
வரதானுதல்பரனை ராமகுமாரனே காத்து

அதினைப்படுத்துமாயிருந்தால் பதியில்லாத காலம்-
-வரைக்கும் அவரிடத்திலிருந்து பாக்கியமே கி-
-டையாது அப்படி வருமாயிருந்தால்

(பரதனுமிளைவலும்—எ-து) பரதனை உன்புத்-
-திரனும் அவனோடுகூடி ஸந்த தஸஹ சாரியாயி
செல்லாநின்ற சத்துருக்கினனும் இந்த பட்டண-
-த்துக்கு வாராதபடிக்கு பதியான பட்டணம் விட்டு
சென்று

(விரதமாதவஞ்செய—எ-து) விருதானுஷ்
டானங்களுக்கு அநுயோக்ஞியமான தீர்த்ததீ-
-ரங்களிலோ தபோவனங்களிலோ சொல்லிவி-
-டுகிறதாகிலும் நன்மையான காரியம் கேட்டிரோதாயே
இன்னும் பரதகுமாரன் ராஜ்ஜியம் பரிப்பானே-
-யானால் அவனுக்கு ராமனை பார்க்கிலும் எ-
-தேது குணங்களுண்டென்றால்

கவி-

கல்வியுமிளமையுங் கணக்கிலாற்றலும்
வில்வினை யுரிமையு மழகும் வீரமும்
எல்லையில் குணங்களும் பரதற்கேயது
புல்லிடை யுகுத்தமு தேயும் போலின்றே (11)

(இ-ள்) தாயே கேளும் கல்வியாகிய
ஸர்வோபரி உயர்ந்த வித்தையென்றுண்டான
அழில்லியமாகின ஸம்பத்தும் இளமையாகின
யௌவ்வனமும் கணக்கெண்ணும் திட்டப்-
-படுத்த அசாத்தியமான வீரபராக்கிரமங்களும்
(வில்வினை—எ-து) வில்லெடுத்துசெய்யாநின்ற

உரிமையாகின சாதுரியங்களும் அழகான -
சௌந்தரியமும் வீரமாகிய பௌருஷங்களும் இ-
-ப்படிமஹோல்கமாவாகிய ஒருவனுக்கு வேண்-
-டின ஷெட்குணங்கள்

"விபதி தைரிய மதாப்பியுதயே க்ஷம:
ஸபதிவாக்படுத, யுதிவிக்ரம யஸஸி, சாபி
ரதிர் வியசனம் சுருதௌ பிறகிருதி
ஸித்தமிதம் ஹிமஹாத்மனம்"

என்றதியமவசால், விபத்தான ஆபத்தில் தை-
-ரியமும், அப்பியுதயமான புரோகதியென்னும்
லக்ஷியத்துக்குச் செல்லாருன்றகாலத்தில் அ-
-துகளையெல்லாம் ஸஹிக்காருன்ற க்ஷமையும்,
ஸதஸுகளிடத்தில் சகலமானபேர்களும்
சுவிகரிக்காருன்ற வாக்மித்துவம், யஸசா-
-னஸல்கீர்த்தியில் ஆக்கிரஹவும், வித்தையில்
பூர்ண்ணதைக்கு வேண்டின மோஹவும் இப்படி
உண்டான ஆறுகுணங்களாகின

(எல்ஸெயில் - எ-து) சாமாண்ணியம் ஒருபேருனு-
-க்கு வேண்டின எல்லா குணங்களும் பாதனை
உமது குமாரனுக்கல்லாமல் மற்றோர்க்கும் இல்ல-
அதுகளையெல்லாம் விருதாவிலக்கிநீரெவி

(புல்லிடை - எ-து) அமிர்தாகின மிருதஸஞ்-
-ஜீவினியென்னும் ஸித்தௌஷதத்தை அதி-
-னுடைய குணங்களை தெரியாமல் புல்லில் உபே-
-க்ஷிக்கப்பட்டவளைபோலெயல்லவோ நீ உ-
-பேக்ஷித்துவிட்டாய் தாயே! உன் புத்திரனுக்கு
வேண்டின அதிகாராவகாசமுள்ளதும் ராஜாவ

வாக்தத்தம் செய்ததுமாகின உன்மகனுக்கு
ராஜாவென்னும் ஸ்தானத்தை நீ வாங்கி கொ-
-டுக்கவேண்டினவளல்லவோ தாயே!

வாராய் துஷ்டயே கூனி. கவி-

வெயின்முறைக்குலக்கதிரவன்முதலிய மேலோர்.
உயிர்முதற்பொருடிறம்பினுமுறை திறம்பாதோர்.
மயின்முறைக்குலத்துரிமையை மனுமுதல்மரபை
செயிருறப்புலச்சிந்தையாலென் சொனய் தீயோய் (12)

(இ-ள்) எடி மந்தரையே கேளு! ஆதபோ-
-ஷ்ணங்களை ஜொலிப்பிக்கிறான்ற உஷ்-
-ணகிரணங்களுக்கு அதிபதி, திவாராத்-
-திரங்களென்னும் காலபேதங்களை நியமித்-
-திக்கானன்றவராகி, உலகதீபமாகி, உலக-
-ஸக்ஷிஸாகி, ஸமஸ்த்தமான உலகங்களுக்
கெல்லாம், உச்சிநேர்நடுவாக ஒன்றரை
க்கோடிமேல் எழுலக்ஷத்தில்பரம் அச்சான-
-துக்காசரயமாக, ரதநேமி, பரிமாறி, மான-
-ஸோத்தரோபரிரதம்நடத்தி, அருணன் ஸா-
-ரதியாகி, ஜயனென்றும் அஜயனென்றும், வி-
-ஜயனென்றும், ஜிதபிராணனென்றும், ஜித-
-க்குரோதனென்றும், ஜிதேந்திரியனென்றும்,
மனோஜவனென்றும் ஸப்தசுவங்களான எழு
பச்சைக்குதிரைகளை பூட்டாநின்ற ரதோபரிஆ-
-ரோஹணஞ்செய்து அமராபதியிலிருந்து, ஸம்-
-யமனியென்னும் நகரத்துக்குமேலாகபதிஷ்டைந்து

நாழிகைக்கிடையாக வருகிறபோது கர்-
-ம்மபூமியான பாரதகண்டவாசிகளுக்கு
மத்தியான்ன காலமென்னும் இடைவே
ளையாக கொடுத்து அவிடத்திலிருந்து பதி-
-னைந்து நாழிகைக்கிடையாக இரண்டுகோ-
-டிமேல் முப்பத்தியேழு லக்ஷத்தி எழுபத்தி
ஐயாயிரம் யோசனை மானசோத்தரோபரி
தேர்செலுத்தி வருணராஜதானபுரிக்கு —
நேராக வருகிறபோது பாரதகண்டவாசிக
ளுக்கு ஸாயான்னகாலம் அங்கேயிருந்துபுற
ப்பட்டு பூர்வோக்தமாக சொல்லாநின்ற சம-
-யவும் தூரவும் ஸஞ்சரித்து ஸோமராஜதா-
-னபுரிக்கு நேராக வருகிறபோது பாரதகண்ட
வாசிகளுக்கு அர்த்தராத்திரியாகவும்,
அங்கேயிருந்துபுறப்பட்டு இரண்டுகோடிமேல்
முப்பத்தியேழு லக்ஷத்திஎழுபத்தையாயிரம்
யோசனைதேர்நடத்தி சொர்க்கராஜபுரியான
அமராபதிக்குநேராகவருகிறபோது பாரதக-
-ண்டவாசிகளுக்கு பிரபாதகாலமாயும் இப்-
-படி பிரபாத, மத்தியான்ன, ஸாயன்னமென்னும்
காலபேதங்களை நிச்சயிக்கும் முறைமையோடு
கூடி சோபிக்காநின்ற சூரியதேவனுடைய வம-
சமே இந்தசூரிய கோத்திரம் அந்தசூரியகோ-
த்திரத்திலுண்டான ராஜாக்களும் இக்ஷ்வாகு
முதற்கொண்டுண்டான பெரியோர்களும்

உயிராகின பிராணனையெல்லாம் தியஜி-
க்குமாயிருந்தாலும் ரக்ஷிக்கலாமென்றுண்டான
நியமமிருந்தாலும் தனது பிராணரக்ஷைக்காக
ஸத்தியத்தை லங்கிக்காதபேர்களென்று
நீதெரிந்துண்டோ மந்திரையே

(மயின்முறை-எ-து) மயிலாகிய பட்சி-
-கள் ஆணும் பெண்ணும் இணைசேர்ந்து அதில்
பெண்மயிலுக்கு உற்பவிக்கப்பட்ட பறை-
-வைகளான சந்ததிகளுக்கு முன்னே
ஜனிக்கப்பட்ட முறைத்தைக்கு கூட்டை-
-ன்னும் சினைகள் கிரீடம்போல் தோ-
-ன்றி அவனை அந்த பறவை ஸமு-
-ஹத்துக்கு ராஜாவாக வாழப்பட்டவன்
அத்தன்மை போலாகிலும் மனுவாகி-
-ய வைவெல்சுத மனுவினிடத்தில் உ-
-ற்பவிக்காதென்ற சூரியவம்சபாரம்
பரியம் ஒருராஜினைக்கு முந்தவன்
ராருபரிக்கப்படும் ஆனதினால் ராம
குமாரனை ராஜாவாக வாழ்விக்கலா-
-மென்று அவரோதிக்குமாயிருந்தால்
அதுவே நடக்கும்

(சையிருப்புல-எ-து.)
வந்திரிஸ்சயத்துக்கு சலன-
-மில்லை- அந்த முன்னோர்களின் வழு-
-க்கத்துக்கு "சையிரு" ப்ரமாணத்த-
-க்காதா

துஷ்டே நிந்தியமான, துர்விசாரமுள்ளவளே.
நீசொல்லாநின்ற வார்த்தைகளை கேட்டு
நான் அனுஸரிக்குமென்றே நினைந்தாய்.
தீயைபோலுண்டானபயங்கரியே.

கவி.

எனக்குநல்லையுமல்லைநீயென்மகன் பரதன்.
தனக்குநல்லையுமல்லையத்தருமமே நோக்கில்.
உனக்குநல்லையுமல்லை வந்தூழ்வினை தூண்ட.
மனக்குநல்லன சொல்லினை மதியிலாமனத்.
தோய். (13)

(இ-ள்.) எடி கூனி இந்தவிதமாகக்கொண்-
-டு சொல்லுமாயிருந்தால் நானங்கீகரி-
-க்கப்படுமென்றே நினைத்தாய். நீஎனக்கு
வேண்டப்பட்டவளல்லை என்மகனை
ராமன் அவன்மாதாவைபார்க்கிலும் எ-
-ன்னை சிநேகிக்கப்பட்டவன். உத்தமபு-
-த்திரன். அவனைஅயோக்கியனென்று நி-
-ந்தனையாக சொல்லிவிட்டாயே. நான்
பெற்றெடுத்து வளர்மை செய்யாநின்ற பர-
-தனை தனதுபிதாவைபார்க்கிலும் ஆதரிக்கா-
-நின்ற ஒருவனே ராமன். அவனைபார்க்கிலும்
பரதனுகிலும் யோக்கியனென்று அவனை
ஸிலாகித்து சொன்னபடியினால் அந்தபரதன்
என்பிதுர் கிர்கமான கேகயபுரத்துக்கு
தம்பியானசத்துருக்கினனோடகூடி போக
ப்பட்டபரதன்

(தனக்கு நல்லையுமல்லை-எ-து.) அந்தபரதகுமா-
-னுக்கும் நீசுவீகார யோக்கியதை யுடை-
-யவனல்லை. திக்காரியான உனது சித்த
விர்த்திகளை இந்தவிதமாக வெளிப்படுத்-
-தாநின்றதை வெளிப்படுத்தினதினலெ தர்-
-மத்தை பார்த்தால்

(உனக்கு நல்லையுமல்லை-எ-து.) உனக்கும்
யாதொரு பிரயோஜனவும் அல்லாதபடிக்கு
திக்ஷணமேற்க்கபடாநின்ற உழவினையான
பூர்வகர்மபந்தங்கள் பிராரப்தம் உன்னை
நசிப்பிக்க நீ உத்தியமித்துவிட்டாயே கூனி.

(மனைக்கு நல்லென-எ-து.) உன் மனதில்
தோன்றிய பிரகாரம் சொல்லிவிட்டாயோ
புத்தியில்லாதவனே! உன்னிடத்தில் கோபம்
சஹிக்கவில்லையே கூனி. நீஇந்த அர-
-மனையில் வரகூடாது. உனது முகதர்சனமே
நான் காணாதபடிக்கு

கவி-

போதியென்னெதிர் நின்று நின்று நின்புன்
பொறிநாவை. சேதியாதிது பொறுத்தனைன்
புறஞ்சிவரறியில்- நீதியல்லவும் நெறிமு-
-றையல்லவும் நினைந்தாய் - தாதியாது-
லாலடங்கினேன் போதி சண்டாளி-
வேறொருபாடம்.
ஆதியாதலினறிவிலியடங்குதியின்றே. (14)

போடி என் கண்முன்னிலிருந்து நான் காணாதப-
-டிக்கு விதூரமாகபோக அல்பத்துவமாகின வா-
-சகங்களை சங்கோசமில்லாமல் சொன்ன உன்னு-
-டைய நாவை

(சேதியாதிது—எ-து) சேதிக்குமாயிருந்-
-தால் குற்றமில்லை- உனக்குவேண்டின சிட்சை
உன்நாக்கை நிச்சிதமாக அறுக்கத்தான் வே-
-ண்டும்- நான்மட்டும் கேட்டபோனதினால் பொ-
-றுத்து க்ஷமித்தேன்- நீநாக்கற்றவளாயி
வெளியில் செல்லுமாயிருந்தால் மற்றுமிவர்
இதை தெரியுமாயிருந்தால்

(நீதியல்லவும்—எ-து) இத்தனைகாலவும்
தாஸியமான ஸேவனத்தை நடத்தாநின்ற
ஒருவி வார்த்தையினால் சொன்ன குற்றத்துக்கு
நாக்கை முறித்தது சரியல்ல- ஒருதாஸி பெ-
-ண்ணாகியவளை ஒருராஞ்ஞியாகிய நான் தண்ட
னை செய்தது சரியானமார்க்கமல்லவென்று
க்ஷமித்தேன்

(தாதியாதலால்—எ-து) நீ ஒன்றுக்கும்
பந்தப்படாத்த ஒருதாஸியானதினால் வரா-
-நின்ற கோபத்தை என்னிடத்தில் நான்
அடக்கிவிட்டேன்- நான்பொறுத்தேன்- கண்
முன்னிலிருந்து போகுபோக, சண்டாளியே-

என்றிப்படி கோபிக்க காலில்
விழுந்து கூனிசொல்- கவி-

மூத்தவற்குரித்தரசெனு முறைமையினுலகம்
காத்தமன்னனில்லையென்றே கடல்வண்ணன்

ஏத்துநீண்முடிபுனைவதற்கிசைந்தனனென்றல்
மீத்தருஞ்செல்வம்பரதனை விலக்குமாறெவனோ (15)

(இ-ள்.) சரணமே சரணம் தாயே தேவரீர் ஆட்டிதுரத்தினபோது உம்மை விட்டு நீங்கி போகும்போது மந்தரையே நீபோகவேண்டாமெ-ன்று அடியேனுடைய பிடணியைபிடித்து தள்-ளுகின்றது - ஆனல் தேவரீர் சொல்லுகிறகாரியம் சரியாகிலும்-

(மூத்தவற்—) மூத்தவரான வயதில் முதிர்ந்த-வருக்கு ராஜ்ஜிம் பரிக்கிறதென்ற அதிகாரம் கூ-ரியவம்சராஜாக்களுடைய கிரமமாகிய சட்ட-மென்றுவருமாயிருந்தாலும் அது உலகவாசிகள் அனுஸ்மரிக்கிறதென்ற ஆசாரமென்றிருந்தாலும் அந்த சட்டத்தின்படி உலகவாசிகளெல்லாம் மு-றைமையாக சொல்லுவார்களேயானலும்

(காத்தமன்னனி—எ-து) இந்த அறுபதி னயிர சம்வல்சரம் பிரஜாவிருத்தபரிபாலன-ஞ்செய்து ரக்ஷிக்கப்பட்ட தசரதமஹாரா-ஜாவுக்குண்டான மூப்பில் எத்தனையோ ல-க்ஷவான இளைப்பமென்னும் சேறுப்பமுள்ளவ-னல்லவோ கடல்போல் தேஹகாந்தியுள்ளவ-னகின ராமகுமாரன். அப்போது மூத்தவனிரு-க்க இளையவன் ராஜ்ஜியம்பரிக்ககூடாது என்ற நியமமுண்டோ

(ஏத்துநீண்முடி—எ-து) எத்திஸர்வ ஜனாவும் ஆதரிக்கப்படாதென்ற தீர்க்ககால சரித்ரங்களுக்கு ஸாக்ஷியமாகிய அந்தகிரீட

மானதை, பரதகுமாரன் தரிப்பதற்கு ஞாய-
-மில்லை - ராமனைப்பார்க்கிலும் இளையவனென்று
தடஸ்த்தமென்றுவந்தால்

(மீத்தருஞ்செல்வம் - எ-து) பிதாவிருக்கிற-
-போது பிதாவுகொடுக்கப்பட்ட செல்வமான
பாக்கியங்கள் ராமனுக்கு பூஷணமென்று
வந்தால் ராமனிருக்கிறபோது பரதனுக்காக
கொடுத்தால் அந்த பாக்கியம் பரதனைவிட்டு
போகுமோ ஒருவன் கொடுத்தால் அந்த பாக்-
-கியத்துக்கு இன்னவன் இன்னான் அதிகாரம்
உள்ளவனென்று நியமமுண்டோ தாயே

கவி.

புரியுந்தன்மகற்கரசெனிற் பூதலமெல்லாம்
விரியுஞ்சிந்தனைக்கோசலைக்குடைமையாமென்
றில் - பரியுநின்குலப்புதல்வற்குமுனைக்குமிப்பார்
மேல் - உரியதென்னவன்றுதவியவொருபொருளை
ல்லால் - (16)

(இ-ள்.) தன்மகனாகிய ராமகுமாரனுக்கு
பூலோகமெங்கும் பரிகாரமன்று ராஜாங்கமான
அதிகாரமானதை கல்பிக்குமாயிருந்தால்

(விரியுஞ்சிந்தனை - எ-து) ஸந்தோஷத்தால்
மதிமறந்து அந்தகௌசலியயானவள் எல்லாம்
தனது உடைமையான அதிகாரமேயென்று அதிகா-
-ரமுள்ளவளாயி வருமாயிருந்தால்

(பரியுமந்நின் - எ-து) உனதுபிரியமுள்ள நீ

பாதுகாவல்செய்ய வேண்டின உனதுவம்சத்து-
-க்கும் உனது சந்ததிவிசேஷங்களுக்கும் இந்த
உலகத்தில்

(உரியதென்னவனுதவிய-எ-து) அந்தகௌச-
-லியயானவனுடைய தயாதாக்ஷண்ணியமாக
கொடுக்காநின்ற திரவ்வியமல்லாமல் மற்று
வனை ஏதாவதுமுண்டோ தாயே

கவி-

தூண்டுமின்னலும் வறுமையுந்தொடர்தரத்
துயரால்-ஈண்டுவந்துனையிரந்தவர்க்கிருநிதி
யவனை-வேண்டியீதியோ வெள்குதியோ
விம்மநோயால்-மாண்டுபோதியோ மறுத்தியோ
வெம்பவனம்வாழ்தி (17)

(இ-ள்-) கல்பகவிருக்ஷம்போல் கைமாறு
கருதாமல் தானதர்மங்களைசெய்யாநின்ற
உன்சமீபத்தில் தூண்டி நெருங்கின
இன்னலாகின சங்கடமும் வறுமையாகிய
தாரித்திரமும் பாதித்து துடர்ந்து துடர்ந்து-
-ண்டான துயரம் ஹேதுவாக அபயார்த்திகளான
பேர்கள் மஹாசக்கரவர்த்தியாகிய தச-
-ரதராஜனவுக்கு இஷ்டபத்தினியாகிய
உம்மை சரணம் பிராபித்து சங்கடத்தி
லிருந்து விமோசிதர்களாகலாமென்று
நினைந்து

(ஏண்டுவந்துனை — எ-து) இவிடத்தில் வந்துபாரதியை சொல்லினபேர்களுக்கு திரவியபேடமாகவோ வாக்குசகாயமாகவோ- ஒன்றும் அதிகாரமில்லாதநீ அவனை ரக்ஷிக்க "அவனைவேண்டியீதியோ" வே-
-ண்டி அவனிடம் அபேக்ஷித்து சகாயிக்கி-
-றயோ வெட்கமடைந்து அபராதமான ம-
-ஞ்சு சங்கடப்பட்டவனாகி।

(மாண்டு—) மரணமடைந்துபோகிறுயோ- இதுகாலவும்செய்துவராநின்றா எல்லாதான தர்ம்மங்களையும் உபேக்ஷிதமாக செய்துவிடுகிறுயோ எதொருபிரகாரம் நீ அதிவசிக்க போகிறுய் பணமில்லாதவ-
-ர் பிணமல்லவோ தாயே-

"நிர்த்தனஸிய மிருதகியஜ: என்றல்ல-
-வா திரவ்வியமில்லாத தரித்திரவாசிகள் உஜ்ஜீவித்திருப்பது மரணதுல்லியமதை,ய-
-ல்லவோ தாயே ஐயயோ கஷ்டமே கஷ்டம் தாயே.

கவி.

சிந்தைசெய்கையிற்றிகைத்துணையினிச்சில
நாளில்- தந்தமின்மையுமெளிமையுநிற்கொண்டு
திவிர்க்க- உந்தையுமன்னையுங்கிளைஞர் மற்றுங்
குலத்துள்ளோர்- வந்துகாண்பதுங்மாற்றவன்
செல்வமோமதியாய்- (18)

(இ-ள்-) நான் ஒவ்வொருவிதமாக

ஆலோசனைசெய்யாதொன்றகாலத்தில் உன்விஷ-
யத்தில் நினைந்து பயப்பட்டு மயக்கமடைந்த-
-வனாகவைத்து, ஒடுஒடுங்கினது இனியும் நானு
கள்க்குள்ளாக

(நந்தமின்மையு-எ-து)

உன்ராஜ்ஜியவாசிகளான பேர்கள் கேகயபுரவா-
சிகள் தாந்தாங்களுக்குண்டாகிய சங்க-
-டங்களினும் தாரித்திரத்தினும் உன்னை
க்கொண்டு சஹாயம் சுவீகரித்து தீர்க்க-
-லாமென்றெண்ணி வந்தாலும் வரும்-

(உந்தையுன்னை-எ-து) உன்தாய்தகப்பன்
பிதுருவம்சத்திலுண்டான உன்ஸஹோதர
வர்க்கங்கள், பந்துவர்க்கங்கள், உன்னு-
-டையகுலமாகிய கேகயபுரத்திலுள்ள பூர்-
-வபரிசயமுள்ளபேர்கள்

(வந்துகாண்பதுன்-எ-து) வந்துகாண
கூடின துரந்தம் உன்னுடைய, சங்கடமும்,
உன் மாற்றவளைன்னும் உனக்கு, பத்தசஹ-
-ருவாயும் உன்சக்களத்தியுமாகிய, கௌசலிய-
-யினுடைய பாக்கியத்தையோ, உன்னுடைய
இல்லாய்மையையோ என்றுநீ ஆலோசனை-
-யில்லாதவளாகி எதையாகிலும் காணவேண்டி-
-யது. அதற்க்குண்டான ஸந்தர்ப்பம் நாம்-
கொடுக்கலாமோவென்றும் சொல்லுவீர்தாயே-

கவி.

கெடுத்தொழிந்தனையுனக்கரும்புதல்வனைக்கிளர்நீர்
உடுத்தபாரகமுடையவனொருமகற்கெனவே
கொடுத்தபேரரசவன்குலக்கோமைந்தர்க்கும்
அடுத்ததம்பிக்குமாம்பிறர்க்காகுமோவின்றே.(19)

(இ-ள்.) ஆகையினால் உன்அருமைமகனாகிய பரத குமாரனை கெடுதிவரசெய்துவிட்டாய். கிளர்ந்து விளங்கப்பட்ட சரயூர்நதியானைத ஒருவஸ்திர-மாக

(உடுத்தபாரக—எ-து) உடுக்கப்பட்டபூமியை யுடைய அரசனாகிய தசரதராஜாவு அயோத்-தியா சாம்மராஜ்ஜியம் ஒருமகனை ராமனு-க்குமட்டும் என்றுதீருமானித்து

(கொடுத்த—எ-து) கொடுக்கப்பட்ட இ-ந்த அயோத்தியாராஜ்ஜியமாகிய பேரரசெ-ன்னும் பெரும்பாக்கியங்களெல்லாம் அவன் குலத்தில் பிறந்த ராஜபிள்ளைகளுக்கும் அவனை-

(அடுத்ததம்பிக்குமாம்-எ-து) அவனைஅடுத்தி-ருக்கும் தம்பியாகிய இலக்ஷ்வணுக்கும் ஆய் விடுமேயல்லாமல் மற்றொருவருக்கும்கிடைப்பதில்லை தெசரதராஜாவை பரதனும் சத்துருக்கினனும் இந்தராஜ்ஜியத்தில் இல்லாத சந்தர்ப்பம் பார்த்தும் மஹாராஜாவினுடைய இஷ்டபத்தினி யாகிவும் கைகேயிமாதாவென்று லோகபிரசி-த்தமாகிவும் அப்பேர்ப்பட்ட உம்மிடத்திலோ

உம்முடைய மகனாகிய பரதகுமாரனிடத்திலோ அல்-
-லது சத்துருக்கினனிடத்திலோ யாதொரு ஆலோ-
-சனையுஞ் செய்யாமல் அதும் நாளை சூரியோத-
-யம் என்ற திருமாணம் ஒரு மகனாகிய ராமனுக்கு
மட்டும் என்று நிச்சயித்து, இந்த மாணிக்கவி-
-மான கோபுர மண்டப பிறகார, பிராஜாதி, மணிம-
-யாகார ஸஹஸ்ரஸ்தம்ப, நிர்ம்மித சோப -
-யோடுகூடின அயோத்தியை ராஜ்ஜியபாரம்
வஹித்து திநுடைய அனந்தரம் ராமனும் லட்-
-சுமணனுக்கும் இந்த அதிகாராவகாசங்க
ளெல்லாம் ஆய்விடுமே தாயே-

அதோ வாராய் மந்தரையே- கவி-

அனைய தன்மையை அறிகிலேன் யென்னன்னையனையா-
-ய்- வினைநிரம்பிய மந்தரே நீமிக விரும்பி.
எனையுவந்தனையினியையென் மகனுக்குமனையா-
ன்- புனையுநீண்முடி பெறும்படி புகல்வமிப்பொ
ழுதே- (௨௦)

(இ-ள்.) வாராய் மந்தரையே! இந்த மஹா-
-ராஜாவை தந்திர பூர்வகமாக ராமனுக்கு ரா-
-ஜ்ஜியத்தை கொடுத்து என்னையும் மகன்
பரதகுமாரனையும் சதிமோசஞ்செய்வாரெ
ன்று உண்டான தன்மைகளை ஒன்றும் நான்
அறிந்தவளல்ல- என்னைப்பெற்றுவளர்
மை செய்யப்பட்ட என் அன்னையாகிய

மாதாவுக்கு அனையொப்பாகியவாராய் மந்தரை-
-யே-

(விணைநிரம்பிய—எ-து) இந்தவிதம் கலகம் நிறைந்த இதிலுண்டான வினைகளாகிய சூட்-
-ச்சிகளையும், குதந்தரங்களையும், தந்தரங்-
-களையும் ஒன்றும் நான் தெரியாதவைகளை யெல்லாம் நீதெரிந்து என்பேரில் மிகுந்தவி-
-ருப்பமான வால்சல்லியமுடையவளாயி

(எனையுவந்தனை—எ-து) கேகயராஜ்ஜி-
-யத்திலிருந்து என்மாதாவும் பிதாவுமெல்லாம் உன்னிடத்தில் கைகேயி சௌந்தரியவதியென்-
-றும் முன்பின் யாதொரு ஆலோசனையும் இல்-
-லாதவளாகிலும் ஆனதினால் அவளுக்கு தக்-
-ந்த சந்தர்ப்பத்தில் வேண்டிய உபதேசங்க-
-ளை, கொடுத்து நீதான் அவளை பாதுகாக்க வேண்டுமென்றுண்டான உபதேசபிரகா-
-ரம் மஹாராஜாவின் குதந்தரங்களைதெரி-
-ந்து எனக்கு எதெல்லாம் ஆபத்துகள் வந்து விடுமோ அப்படிஎனக்கு யாதொரு விபத்தும் வந்துசேரவாகாதென்று என்பேரில் உவப்-
-பெண்ணும் பெரிய ஸந்தோஷத்துடன் என் மகனாகிய பரதனுக்கு ஸமானமான வால்ச-
-ல்லியமுடையவளாய் மந்தரையே

(புனையும்நீள்—எ-து) என்மகனுக்கும்

அவனைய ஒப்பான ராமனெனவன் இந்த சூரிய-
-வம்ச ராஜாக்கள் ஆறில் ஒன்று கடமைவராங்கி
நீதிதவருமல் செங்கோல்நடத்தி அரசுரிமைபரி
பாலனஞ்செய்துவந்த ரத்னகஜிதமாகிய கிரீ-
-டத்தை என் மகனாகிய பரதன் பெறுவதற்க்கா-
-கி உள்ளமார்க்கத்தை நீதான் என்னிடம் சொ-
-ல்லவேண்டுமே மந்தரையே-

அதுகேட்டுகூனிசொல்- கவி-

நாடியொன்றுனக்குரைசெய்வேன் நளிர்மணிநகை-
-யாய்-தோடிவர்ந்ததார்ச்சம்பரன் தொலைவுற்ற-
-வேலை-ஆடல்வென்றியானேறியவரமவையிர-
-ண்டும்-கோடிநீதனி கொற்றவன்றன்னிடை
குறுகி- (21)

(இ-ள்.) தாயே உம்முடையமகனாகியபர-
-தகுமாரன் ராஜாவாக வாழ்வதற்க்குள்ள
மார்க்கத்தையும் நாளை சூரியோதயம் ராமன்
கிரீடம் தரித்து வாழ்விக்க வேணுமென்ற
அந்ததந்தரத்துக்கு விபரீதமாகவும் எல்லாம் அ-
-டியான் நாடி ஆலோசனைசெய்து அதற்க்குள்ள
மார்க்கங்களையெல்லாம் உம்மிடத்தில் சொல்
கிறேன் உம்மைபார்க்கும்போது நளிர் பிரகாசி
க்கப்பட்ட மணியென்றமுத்துக்கு ஸமானமான
பல்வரிசைகளோடு கூடினபுஞ்சிரிப்பையுடைய
ளேதாயே (தோடிவர்ந்ததார்-எ-து)

இதற்கள் பொருந்தின தாராகினை புஷ்பங்களை
மாலையாகத் தரித்து மாலையின் சிறகை அறிவதற்கு
தேவேந்திரனுக்கு எலும்பை கொடுத்த ததீசிம
ஹர்ஷியின் சந்ததிகளாகின சம்பராசுராதிக-
-ளை யுத்தத்தில் கொல்வதற்கு அந்தயுத்தம்
விஜயமடைய மஹாராஜாவின், ரதசக்கரத்-
-தின் அச்சாணி போனபோது உம்முடைய கர-
-த்தின் விரலை அக்ஷிலமாக செலுத்தியும் தேர்
தெளித்து யுத்தம் விஜயிப்பித்து கொடுத்த உமக்கு
(ஆடல்மன்னவன — எ.து)

யுத்தபராக்கிரமசாலியாயும் அறுபதுகோடி
அக்ஷௌஹிணிபடைகளோடுகூடியும் வசிஷ்டா-
-தியராகிய புரோஹிதரோடும் சுமந்திரன் முதலா
ன மந்திரிகளோடும் நித்தியகல்யாண சுமேளித-
-ராயி சங்கீதஸாஹித்திய கோஷ்டிரதராயி சோ-
பிக்கப்பட்ட தசரதசக்கரவர்த்தி தந்த இர-
-ண்டுவரத்தேயும்

(கோடிநீதனி — எ-து) கொற்றம் வெற்றியையு-
-டைய அந்தமஹாராஜாவிடத்தில் கேட்டுவா-
-ங்கவேண்டும்-அப்படியே இரண்டுவரத்தேயும் த-
-ந்தேன் என்று சொன்னால் சம்மதிக்கலாகாது மஹா
ராஜாவை தந்தாக்ஞியனாகியும்-ராமனுணைப்படி-
-க்கு சத்தியமாகியும் தந்தேனென்று ஸத்தியவா-
-சகஞ்சொல்லிப்பித்து வரங்களை வாங்கவே-

-ண்டும் கேட்டீரோதாயே.

வாராய் மந்தரையே அப்படியே நீசொ-
-ன்னவிதம் இரண்டுவரத்தையுங் கேட்டுவாங்-
-கிக்கொள்வேன். அந்தவிதம் நான் கேட்டுவா-
-ங்கி என்னவாகிலும் கேள்க்கவேண்டியது.
அதையும் நீசொல்லுவாய் தாஸி!

தாயே கேளும் - கவி -

இருவரத்தினிலொன்றினலாசு கொண்டிராமன்
பெருவனத்திடையேழிருபதுவங்கள் பெயர்ந்து
திரிதரச்செய்தியொன்றினில் செழுதிலமெல்லாம்
ஒருவழிப்படுமன்மகற்க்குபாயமீதின்றே (22)

(இ·ள்·) சரணம் தாயே மஹாராஜாவு தாரு-
-ன்ற இரண்டுவரத்தினுல் ஒருவரம் பரதகுமாரனை
இந்த அயோத்தியக்கு ராஜாவாகவாழ்விக்க
வேண்டுமென்றவரத்தைகேட்டுவாங்கவேண்-
-டும். மற்றொருவரத்தினுல் நாளை சூரியோதயம்
ராமன் ராஜாவாகவாழபோகிற தின்மையை
உபேக்ஷித்து

(பெருவனத்திடை—எ·து) பெருவனமென்னும்
மஹத்தாகிய காடி, காட்டானை, வன்னிப்புலி,
புள்ளிமான், வியாக்கிர, வல்லூக, சிங்கங்களினல்
அலைந்து ஸஞ்சரிக்கப்படுவதும், கதம்ப, நிம்பரி, கம-
-கத்தி, வில்வாமல, காம்மர, சூத, பலாச, தாலாதி
களானவிருக்ஷங்களினல் நிபடீகரித்திருக்கப்பட்ட

பெருங்காட்டில் எழிரண்டு பதிநாலுவருஷம்
வல்ல அவியுடுத்து வானபிரஸ்த்தாசிரமத்தைக்கொ
ண்டு

(திரிதரச்செய்தி — எ. து) அவியும்படியாகச் செ-
-ய்யவேண்டும் அப்படியாகச் செய்தால் இந்தநில-
-மாகிய பூமண்டலமெல்லாம் உமதுகுமாரனாகிய
பரதனுக்கு

(ஒருவழிப்படும் — எ. து) ஒருவகையாக
ஒன்றுசேர்ந்துவரும் இதுதான் உமக்கு உபாயமாகி-
யமார்க்கம் இதல்லாமல் வேறெயாதொருமார்-
-க்கமில்லை கேட்டீரோ தாயே.

அப்போதுஞ் சைகேயிசொல். கவி.

நன்றுசொல்லிநம்பியை நனிர்முடிசூட்டல்
துன்றுகானகத்திலிராமனை துரத்திலிவ்விரண்-
டும். அன்றதாமெனிலரசன் முன்னுயிர்துறந்து
பொன்றிநீங்குதல் புரிவென்யான் போகிநீயின்றே.
(22)

(இ. ள்.) மந்தரையே நீநல்லவார்த்தயை
சொன்னாய். எல்லா குணங்களும் நிறைந்தவ-
-ன் மகனாகிய பரதகுமாரனுக்கு ரத்னகசிதமா-
கிய முடிசூட்டுவதற்க்கும்

(துன்றுகானகத்திலி — எ. து) மரங்கள் நிறை
ந்த காட்டில் ராமனை அனுப்புவதற்க்குள்ள இ-
ரண்டுவரங்களும் தரவேண்டுமென்று நிர்ப்ப
ந்தபூர்வமாக கேட்டு நான்வாங்குவேன்
அவ்விதமாககேட்டபடி

(அன்றாதமெனி — எ-து) மஹாராஜாவனை-
-வர் அந்த வரங்களை தராமல் உபேக்ஷை செய்-
-வாரேயானால் ராஜாவின் முன்னிலையில் தான்
(பொன்றிநீங்குதல்-எ-து) என்தேஹ-
-த்திலிருந்து தேஹியை விட்டு இறந்துவிடு-
-கிற கிருத்தியத்தை நான் செய்வேன் நீ
சீக்கிரம் போய்விடுவாய் மந்தரையே.
"ராஜாவருவதற்குள்ளே ஸமயமாய்விட்டது
மந்தரையை இவிடத்தில் காணுமாயிருந்தால்
இவளுடைய வேலையாகிலுமென்று மஹா
ராஜாவமனதில் நினைந்துவிடுவார். ஆகை
யினால் இவிடம் விட்டு அடியேன் போய்விடு-
-கிறேன் தாயே."

அப்படியாகேட்டும் மந்தரையே.

அவதாரிகை

என்றிப்படி மந்தரை சந்தோஷித்துபோ-
-னள். பின்பு கைகேகி பூமெத்தையை விட்டு
தரையிறங்கி நல்ல ஆடையும் ஆபரணமும்
ஒன்றும் வேண்டாமென்று தலைமுடியை
ல்லாங்கெட்ட விழ்த்து பொடியில் கிட
ந்தாள்- அப்போது கைகேசி சயனித்தி
ருக்கும் இடத்தில் சென்று காணமல் தரையி-
-ல் கிடக்கிறதை கண்டு பயந்து உனக்கென்-
-னகுறையென்று கேள்க்க கைகேகி
சொல். கவி.

கைகேசிசூழ்வினைப்படலம்

கலி.

நிகழ்த்தலாவுந்தன்மையமும் பூண்டுலா
ககத்திலுள்ளது மோதுவாருமோர்
சகத்தில்வாழ்ந்திடும் தக்கவருன்னைப்-
போல்- புகழ்ந்துவாருளரோ புவிகாவலா- (1)

(இ-ள்.) பிராணநாயகனாகியவரே கணவ!
நீர் அடியேனைபார்த்து-இதுநாள்பரியந்தம்
யாதொரு துக்கமுமில்லாமல் இருக்கிற உன-
-க்கு நீ இந்தவிதம் புஷ்பமெத்தையை
விட்டிறங்கி புஷ்ப மாலிகையையெ-
-ல்லாம் மேகத்திலடங்கிய சந்திரனை
இழுத்து வெளியில் போட்டதுபோல் வ-
-ண்டுகளெல்லாம் எழும்பிபறக்க இழுத்-
-து எறிந்து உன் கீர்த்தியினுடைய கொ-
-டிகளை அறுக்கிறதுபோலவும் உன்மேகலா-
-பரணத்தை கிண்கிணிகளோடு அறுத்துப்-
-போட்டு சந்திரனிலிருக்கிற களங்கத்-
-தை துடைத்துதள்ளினபோல் திலதபொ-
-ட்டையுமழித்து கைவளை ரத்நாபர-
-ணங்களையுமெல்லாம் சுழற்றியெறிந்து
தலைமயிர் பூமியின்மேல் புரளவிரித்துக்
கொண்டு கண்மை கரைய அழுதுகொண்டும்
பூவை உதிர்த்தகொம்புபோலவும் தரையில்
விழுந்து கிடக்க காரணமென்ன? அதைநீ

"நிகழ்த்த" சொல்ல என்றல்லவோ சொன்னீர். எல்லாம் உம்மிடம் சொல்லுகிறேன். தேவரீர் அடியேனிடத்தில் நேயமென்னும் மிகுந்த வாற்சல்யமுடையவராகிலும் பிராணநாயகியாகிய அடியேனைப்பார்த்து உனக்கு இப்படி துக்கம் வரும்படி செய்தவர்கள் யார்! அதை சொன்னால் அவர்கள் படுகிறபாடும் நான் செய்கிற காரியமும் பிறகு தெரியலாமென்று மிகுந்த நேயமென்னும் அன்போடு கூடி கேள்க்கிறதென்ற உம்முடைய இந்த வாற்சல்லியத்தை யடையப்பட்ட அடியாள் உம்முடைய இஷ்டபத்நியாகிலுமென்று

(உலககத்திலுள்ளது—எ.து) இந்த பூமண்டலத்திலுள்ள எல்லா பேர்களும் ஜாதி சொல்லப்பட்ட பேர்களாகிலும் அப்பேர்ப்பட்ட தேவரீர் இந்த

(சகத்தில் வாழ்ந்திடும்—எ.து) சகத்தென்னும் அந்தரம், அவனி, பாதாளமென்ற உலகங்களில் பார்க்குமாயிருந்தாலும் உமக்கு சமானமாயி தகுதியுடைய பேர்களாக

(புகழ்த்துவாரு—எ.து) உம்மை கீர்த்திக்குந்தன்மைபோல் கீர்த்திக்க அர்றதையுடைய பேர்கள் இந்த பூமண்டலத்தில் மற்றொருராஜாக்களுமுண்டோ ராகணவே!

அது கேட்டு தெசரதன் கைகேசியோடு சொல் - கவி.

காவலனிராமனுண்ணை கைகேசினின் கலக்கம்
யாவையும் சொல்வாயெல்லாம் ஞன்றவர்த்
திருவன் கண்டாய் - ஆவதீதென்னமாயம்ம
ஞுவதீதென்னேயெழுன் - பாவைநீசொல்லு
சொல்லுபங்கயமுகைகைகேசி- (2)

(இ-ள்-) வாராய் கைகேசி இந்தவித-
-மாக ஆடை ஆபரணங்களை தியகிச்சவ-
-னாகி மலின காத்தரயாயி வெறும் த-
-ரையாகிய பொடியில் கிடந்து குரோ-
-தமயத்தில் பிரவேசிக்க காரணமெ-
-ன்ன? காவலனென்னும் நாமயத்-
-தினம் சூரியோதயமானமுகூர்த்தத்
தில் கிரீட தாரணையை செய்து ரா-
-ஜ்ஜியத்தை பாதுகாவல் செய்ய-
-போகிற ஒருவனே ராமகுமாரன்
அந்த ராமகுமாரனுக்கு விதிபூர்வ
கமாக கிரீட தாரணையை செய்யாத
ன்ற அபவார்த்தையை உன்னிடம் வந்து
சொல்லவெப்பட்டவனெல்லேயோகை-
-கேசி- அதே ராமகுமாரனுண்ணைப்படி-
-க்கு உனது மனதிலுண்டான கலக்-
-கமென்னும் ஸங்கடங்களும் மற்று
எதேது காரியங்களான குலுனித
ங்களென்றிருந்தாலும்
(யாவையுஞ்சொல்வாய் - எ.து)

ஏதொரு காரியமென்றுவந்தாலும்
என்னிடத்தில் சொல்ல- ஸ்திரீவர்க்கங்க-
-ளோ புருஷவர்க்கங்களோ உனக்ஹி-
-தமாக வல்லதும் செய்ததுண்டோ
தண்டமென்றுவந்தாலும், தன்னியமென்-
-றுவந்தாலும், தண்டிப்பிக்கத்தக்கதா-
-கவும்- நிர்த்தனை தன்னியனாக்கவே-
-ணுமானாலும், வத்தியனை அவத்தியனா-
-க்கவேணுமானாலும் யாதொரு சங்கை
-யுமில்லாதபடிக்கு உன் இஷ்டப்படி
செய்யலாம் பரமார்த்தத்தை சொல்ல.

(யாவதீதென்னே—எ-து)

இந்தவிதமாக என்பேரில் பரிபவம், வா,
கர்ம்மணா, மனசா, வாசா, நான்யாதொ-
-ன்றும் செய்தவனல்லவே கைகேசி- இ-
-து என்ன ஆச்சரியம்: மாயா தீராதபடிக்கு
ரோதனஞ்செய்யக்காரணமென்ன? எ-
-ன் புரோபாகத்தில் காணுமாயிருந்தால்
வந்து உபசரிக்காதென்றதீ அதுகளை உபே-
-க்ஷையை செய்து இந்தவிதமாக துன்ப-
-மடையகாரணமென்ன?

(பாவைநீசொல்லு—எ-து) எனதுஇ-
-ஷ்டபத்நியாய் தாமரைபோன்ற முக-

-பாவனையோடும் அதீவ சுந்தரியாயி என்
கண்மணி போன்ற நீ என்ன காரணத்தினால்
க்ரோதாலயம் பிரவேசித்தாய் சொல்லு.
சொல்லுவாய் தேவி.

சரணம் கணவா ராமகுமாரனைப்படிக்-
-கு என்னுடைய அபிஷ்டங்களை நிறவேற்ற-
-லாமென்று பிரதிஞ்ஞை செய்தால் அல்லாமல்
உம்மிடத்தில் வார்த்தை சொல்லுகிறவள-
-ல்லவே கணவா.

வாராய் கைகேசி உன்னுடைய அபிஷ்-
-டம் எதென்றுவந்தாலும் ஸாத்தியப்படுத்தி
தருவேன் இது ராமனைப்படிக்கு சத்தி-
-யம், சத்தியம், கேட்டயோ கைகேசி.

கவி:

தவிராதவாய்மைமகிபாலகேளாயிசம்பர
னைவென்றநிலத்தெனக்குசொன்ன-
நுவயிலாக்கொடுத்தவரமிரண்டிலொன்
றென்னருமகனுக்கபிஷேகம்கொடுக்கும்-
மாறும்-புவியாளுமரசுதவிர்ந்திராமன்
காட்டில்போய்வரும்பதினாலும்பொருந்து-
மாறும்-இவயானவரமிரண்டும் தாராயாகில்
யென்னரசே னின்னெனையிறப்பேன்யானே. (3)

பிராணன்போகுமாயிருந்தாலும் ஸத்-
-தியமானதை உபேக்ஷை செய்யாதப-
-டிக்கு ஸத்தியதர்மங்களை நிலைநிறுத்தி

உமது ஸாம்ராஜ்ஜியத்தில் அசத்தியவாதிக-
-ளாகிய ஸர்வர்களையும் ஸமுதாயத்தோடுகூடி
ஸம்ஹரித்து "ஸத்தியமேவஜயதே" என்று எ-
ங்கும் கொடி நாட்டி அலங்கரிக்காநின்ற ம-
-ஹீதலமாகிய அயோத்தியக்கு ராஜாவாகிய
ஹேதணைவா! நீர் ஸத்தியசந்தனாகிலுமென்று
அபிமானித்து கீர்த்தியடையவேணுமானால் ஸம்-
-பராசுராதிகளிடத்திலும் அவரோடுகூடி வராந-
-ன்ற அநுபத்தியாறு கோடியென்ற அனுயாயி-
-களிடத்திலும் கிரமகரமாக, யுத்தஞ்செய்து
அசுரவர்க்கங்களையும் ஸம்பராதிகளாணபத்து
பேர்களையும் நசிப்பித்து விஜயசாலியாயி, அஸ்-
-ராந்தமாகக்கொண்டுண்டானபோரில் விஜ-
-யம்பெறும்படி உமதுதேர்நடத்தினை, என்பேரில்,
சந்தோஷமடைந்தவராகி உனக்குஹிதமான
வரங்கள் எதென்றுவந்தாலும் தரலாம் இர-
-ண்டுவரங்களை உனக்காக தருகிறேன் என்று
புண்ணியஉலகமான சொர்க்கத்தில் வைத்து
சொன்னஅவசரத்தில் அந்தவரத்துயவரங்-
-களுக்கு இப்போதுதேவையில்ல வேண்டின
அவசரம் யான் கேட்கிறபோது தரவேண்டும்
என்றுசொல்லி உம்மிடத்தில் நிக்ஷேபிக்கா
நின்ற ஒருவியேயானல்லவோ கணைவெஷுந்து
(நவையில்லா வரமிரண்டில்-எ.ஹ)

தவையென்னும்யாதொருபுதுமையுமல்லாமல்,
அல்புதத்துக்கோ, தாக்கிக்கத்தக்கதாகவோ, அ,
-ல்லாமல் உள்ளதே உமது ஸத்தியவாசகம்
"நந்திநந்தசமம் வாக்கியம், மறைதாழுதநிர்
க்கமம்" என்றநியமபிறகாரம், மறைால்ம்மாக்-
-கினாகியபேர்கள் எதொரு வாக்தத்தஞ்செய்-
-தாலும், தந்தியான யானையின் கொம்புபோல் வள-
-ர்ந்துவருவதல்லாமல், அதுசோஷிக்கிறதில்லை-
அதுபோல் மறை[redacted]கிய தேவரீர் தரப்பட்ட அ-
-ந்தவரத்துயவங்கள் இரண்டில் ஒன்று பிரிய
புத்திரனாகிய பரதகுமாரனுக்கு அபிஷேகத்தை
செய்தும் என்பிதாவினிடத்தில் அடியேனுக்கு
ஜனிக்காநின்ற புத்திரனுக்கு ராஜ்ஜியபட்டம்
தரலாமென்றுசொன்ன ஸத்தியத்தை நிறவே
ற்றத்தக்கதாகவும் உம்முடை ஸத்தியஸந்தத்தை
இன்னும் உலகவாஸிகள் கீர்த்திக்கத்தக்கதா-
-கவும் சிரகாலமாகமுதாதைமார்கள்பரிக்காத-
-ன்ற

(புவியானுமரசு துவிர்த்து—எ-து)

புவியென்னும்புண்ணியபூமியாகிய அயோ-
-த்தியை பரிக்காதன்ற, ஸ்தானஸம்பன்னதை-
-கிளையெல்லாம், உமக்குவேண்டி உபேஷையைசெ-
-ய்து உமதுகுமாரனை ராமன் உம்மையும் இந்த
செல்வங்களையும், நாடுநகரங்களையும், வெறுந்து
ஜனசூன்னியமாகிய கோரவனத்தில் சென்று
பதினாலு ஸம்வல்ஸரம் வனஸஞ்சாரஞ்செய்யவும்

இப்படி ஒருவரத்தினால் பரதனுக்கு ராஜ்ஜிய-
-ஸ்தாபனமும் மற்றொருவரத்தினால் ராமனுக்கு
பதினாலு ஸம்வத்ஸரம் பரிதியாக வனவாஸமும்

(இவையானவரமிரண்டும் — எ - து)

இந்தவரத்தைபிறகாரம் என்அபிலாஷ-
-த்துக்கேற்ற, வரத்துயவங்களை நீர் தரப்-
-பட்டவரல்லவென்றுவந்தால்

"ஏவம் யதி விஷெமுபபுஞ்ஜிய பஸிய
தஸ்த்தவ பிராணன் தியஸாமி இதி"

நீர் ஸத்திய தீக்ஷிதரல்லாதபடிக்குவந்தால்
நீர்காணத்தக்கதாக விஷம் புஜித்து உமது புரோ-
-பாகத்தில் விழுந்து நான் மரணமடைய போகிற
ஒருவி இது உன்னுணைப்படி ஸத்தியம் கேட்பீரோ
கணவா. ஜயயோவாராய்கைகேசி. கவி.

தெசரதன்மூர்ச்சித்துவிழுந்து
பின்புகைகேசியோடுசொல்
யான்கொடுத்தபரிசேயோவென் கைகேசி
யென்னைக்கெடுப்பதறிந்திலேன் யான்என் செய்வேன்.
ஊண்கெடுத்தாய் யென்னுயிர்நீகெடுத்தாய்
யிந்த உலகமெல்லாம் கெடுத்தாயுன்னைநீயே-
தான்கெடுத்தாய்பரதனையும் கெடுத்தாய்
பாவி சண்டாளி சமைந்தாயே நமியேன்பெ-
ற்ற- வான்கெடுத்தாய் என்னுடை குலத்தினு
ள்ளமணம் கெடுத்தாய் கெடுத்தாயே யிவ்-
-வாக்கினலே- (4)

விஷயம் ஸங்கடமில்லை. என்னுயிரான பிரா
ணனை ஒருஸல்கர்ம்மத்துக்கு வேண்டி வெடி-
-ந்தாலும் குற்றமில்லை- அதும் அல்லாதபடிக்கு
நிரசிப்பித்துவிட்டாயே- இந்த உலகவா-
-சிகளெல்லாம் என்னை நிந்திக்க உன்னை-
யும் நிந்திக்க நீயே கொடுத்துவிட்டாயே கை-
கேசி.

(நான் கொடுத்தாய் — எ-து) தன்னந்தனியா-
-க இந்த விஷயத்தில் யாதொரு விதபாதபாக்-
-காமல் விதூரமான கேகயபுரம் போனானென்ற நி-
-ரபராதியான பரதன் இந்த குட்சியை குத்தி-
-ரமாக செய்தவனே அல்லயோவென்று உலக-
-வாசிகளுக்கு விபரீதபுத்தியுண்டாகவா நீ அவ-
-னையும் நசிப்பித்து விட்டாயோ கைகேசி-
பாபி சண்டாளியென்னும் மிலேச்ச வர்க்க-
-த்தில் ஜனித்தவளைப்போலுண்டான
வேறு பெண்ணோ உன்னை ஒரு பெண்ணாக
ராஜவம்சத்தில் ஸிருஷ்டித்துவிட்ட
தே. நானொருவன் அடையானென்ற

(வாணென் கொடுத்தாய் — எ-து)
ஸர்வோபரி உயர்ந்து நில்க்கப்பட்ட ஸ-
-த்திய தர்ம்மங்களையும் நிரசிப்பித்து
விட்டாயே உனது கோத்திரத்திலுண்டான
மணமாகிய அபமங்களையெல்லாம் அமங்கல

-மாக்கி தீர்த்துவிட்டாயேபாபி இந்த வார்த்தையினல் நீ வதேதுவிதமான தெருதிகளை வருத்தினவளென்று ஆலோ-சனையில்லாதவளோ துஷ்டயே வாராய் கைகேசி- கவி.

வார்த்தையின்னம் சொல்லக்கேளாய்ம டவாயன்றன்றன்மங்கிலியம்யின்றுனக்குவா ய்க்கவென்றல்-பார்த்திவைநீசொல்லாதென் பாரியாகில்பரதனுக்குடனிக்கப்பரிந்தே ன்கண்டாய்- ஏற்றரியயென்மகன் நான் யென்னைவிட்டுபோகாமல் ஒருவரம்தான் நீயெந்தனுக்கு- தீத்தருள்வாய் கைகேசி திருவென்னளே தீமையணீசொல்லாமல் திருத்துவாயே- (5)

(இ-ள்-) வாராய் கைகேசி வார்த்தை யானஒருவாசகத்தை இனியும் உனக்கு சித்தைவரசொல்லுவேன்-மடவாளை ன்னும்மடத்தைப்பருவத்தையுடைய வளாயும் அபலயுமாகிய உனக்கு ஆரா கிலும் இந்த உபதேசம் தந்தது என் புத்திரனை ராமகுமாரன் நிமிஷமாவது என்னைவிட்டுபிரிந்து தீர்க்ககா லபரியந்தம் வனவாசம்போகவேணு மென்றுநீசடிக்குமாயிருந்தால் அந்த புத்திரவியோகஜன்னியதுக்கமே எனக்குமரணம் சம்பவமாகவரும்

உன்னுடைய மங்கல்ய ஸூத்திரமானது
ஸர்வஸ்த்ரீவர்க்கங்களும் ஆக்ரஹி-
-க்கிறதென்ற நெடுமங்கல்லியம் நீடூழி-
-காலம் வாழவேண்டுமென்றும் நீபி-
-ரார்த்திக்குமாயிருந்தால்
(பார்த்திவைதீ — எ-து)
இவை இச்சொன்னதுகள் காரணமா-
-க பாவிகாலத்தில் ஜீவிதவையாகவும்
எனது மரணத்துக்காகவும் அவசரம்
வராமல் எனது இஷ்டபாரியையெ-
-ன்று அபிமானிக்கிறதென்ற பரதனுக்
கு மட்டும் நாடாகிய கிரீடாவகாசத்-
-தை அதற்க்காக நல்பித்து கொடு-
-த்தாலும் குற்றமில்லையே கைகேகி
அல்லாமல்- (நெற்றியயென் - எ-து)
யாதொருபேர்களிலும் நத்தி
ஸ்துதிக்க பிறயாசமேறினவளயி
எல்லாஜீவராசிகளையும் ஆதரணி-
-யளயி சோபிக்கிறதென்ற எனதுபி-
-ராணதுல்லியனை ராமகுமாரன்
என்னை வெறுத்தவளயி எல்லாம்
தியஜித்து அங்கெங்கோ விதூரமா-
ன வனத்தில் தூர்க்ககாலமவதியா
கசென்றுவிடாதபடிக்கு உண்டா-
ன ஒருவரத்தை
(நீ தந்தருள்வாய் — எ-து)

அதில் ஒன்றுமாற்றப்படுத்தி என்னிட-
த்தில் கேட்டுக்கொள் கைகேசி திரு-
-வென்னும் லட்சுமிக்கு சமானைப்பட்-
-வளே தீமையான பொல்லாங்குகளை
யெல்லாம் திருத்தி நன்மையான வா-
-ர்த்தை கூறு சொல்லுவாய் கைகேசி.

கவி

காணவிருகண்ணுக்கும் கணவாவேந்-
-தா காதலிரும் பாக்கியமே கடவாய்ஞால
தாணுவெனும் தயாபரனே யெனக்குமுன்
தந்த வரமிப்பொழுது தாராயாகில்
பேணுவரோ வுலகத்தார் உண்மை வாய்
மையிழைத்தோனென்றே நகைத்து பி-
-தைத்தாரோ தான் நாணமதில் பொருந்தா
தோவயோத்தி வேந்தே யான்கேட்ட வர
மிரண்டும் நல்குவாயே - (6)

(இ-ள்) எல்லா இந்திரயங்களுக்கும் மேலான ஒன்றே இரண்டு கண்கள் அந்த கண்களுக்கும் கண்மணிபோன்றவரும் எனது காதலென்னும் வால் சல்லியங்களுக்கும் பாக்கியங்களுக்கும் எல்லாம் உபாதியாகிய ஹேநாஜனே. இந்த ஞாலமான பூமண்டலத்திலுள்ள எல்லாபேர்களையும் ரட்சிப்பதற்காக

(தாணுவெனும் — எ-து)

தாணுவென்னும் சிலாஸ்தம்பம்போல ரட்சாதிகாரியாயி தயாபரனையிசோமிக்-

-குப்பட்ட ஒருவரல்லவோ கணைவா-சம்ப-
-ராதிகளை ஜயித்து ஸந்தர்ப்பம் தேவரீர் த-
-ராநின்ற வாக்தத்தந்தை தேவரீர் கேட்ட-
-போது கொடுக்கப்பட்டதில்லை புத்திரவா-
-ல் சல்லியமே பெரிதென்று நினைத்து சத்தி-
-ய லங்கனஞ்செய்யுமாயிருந்தால்

(பேணுவரோவுலகத்தா — எ-து)

உலகத்தார்கள் உம்மை ஸத்தியசந்தனென்று விசுவசிக்குமோ? கெட்டின பெண்ணவ-ளிடத்தில் ஸத்தியத்துக்கு பங்கஞ்செய்தவ-னென்று பரிஹஸிப்பதில்லையோ கணைவ! அவச-ரோசிதமாக ஸத்தியலங்கனஞ்செய்வாரென்று உம்மை பரிஹஸித்து நிந்திக்கவில்லையோ - அந்த விஷயத்தில்

(நாணமதில் பொருந்தாதோ — எ-து)

நாணமாகிய போராய்மை உம்மை பாதிக்க வில்லையோ அயோத்தியக்கு ராஜாவாகிய நீர் நான் கேட்ட பிரகாரம் இரண்டுவரத்தை-யும் தரவேண்டுமே கணைவா- கவி.

வியந்தாயுந்தன் மங்கலநாணுன் வினையத்தால்.
எய்ந்தேனிய்ந்தேனிவ்வரமிராமன் வனமாள.
மாய்ந்தேநான்போய் வானுலகாள்வென்வசை-
-வெள்ளம்- நீந்தாய் நீந்தாய் நின்மகனோடும் நெ-
-டிதின்றே- (7)

(இ-ள்.) ஐயோ ஐயயோ வாராய்கைகேசி. வா-ராய்பாபி. விய்ந்தாய் நிந்திக்கப்பட்டவளாகவந்து விட்டாய். உன்னுடைய மங்கல்யமான களஸூத்திரம்

உன்விவேகமில்லாய்மையினால் உனது துர்சாட்-
-டியம் ஹேதுவாக நீ அறுத்துவிட்டாய்.

(ஈய்ந்தேனிய்ந்தே—எ-து) இதோ தந்தேன் தந்-
-தேன் நீகேட்டபடி ராமன் வனத்துக்கு போகவும்
பரதன் ராடுபரிக்கவும் உன்வராத்துயவங்களை தந்-
-தேன் தந்தேன் துஷ்டயே.

(மாய்ந்தேநான்—எ-து) ஐயயோ பாபி நான்இ-
-ந்த பூமண்டலத்தில் யஸசரீரமான புகழுடம்பை
எடுத்து சொர்க்கலோகத்தில் ரமிச்சு அதிவசிக்கிறேன்
வசையென்னும் காங்குகளை காணமலிருக்கிற, ஸம்-
-ஸார துக்கமென்னும் கடலில்

(நீய்ந்தாய் நீய்ந்தாய்—எ-து) கைகேசியாகிய
நீயும் உன்புத்திரனாகிய பரதனும் ஆக எக்கரித்து
நீந்திநீந்தி சங்கடமனுபவித்து கிடந்துகொள்ளு-
-வாய் பாபி.

அவதாரிகை.

என்றிப்படி தசரதன் சொல்லக்கேட்டு
சந்தோஷித்திருந்தாள் கைகேசி. பின்புபட்-
டணத்திலுள்ள சகலமானபேர்களும் ராமன் ப-
-ட்டாபிஷேகம் காணவந்துநின்றார்கள். அ-
-ப்போது மந்திரிபிறதானிகள் ராமனுக்குமஞ்சன
மாட்டி ஆபரணமணிவித்து அஷ்டாதசவா-
-த்தியங்களும்முழங்க பட்டணப்பிறவேசம்
செய்து அபிஷேகமண்டபத்தில் பிதாவை
க்காணமல் கைகேசி அரண்மனையில்சென்று
அவளைவணங்க அப்போதுகைகேசிசொல்

கவி.

நின்றெதிர்ந்திடும் அரக்கியாம் தாடகைதனையிய-
கொன்றுகூற்றினுக்கிரையிடும்கொற்றவில்-
-குமரா-வென்றிமன்னவனுன்னுடன் ஒருரைவிள-
-ம்ப-என்றனேருரைவிளம்பினன்யிது கேட்டருள்-
-வாய்- (8)

(இ-ள்-) வாராய்ராகவா நீஎப்பேர்ப்பட்டவனெ-
ன்றல் ஆயிரம் மத்தகஜங்களுக்கு தித்துல்லியமா-
-ன சக்தியர்ச்சித்தவளாய்சூலாயுத பாணியா-
-ய் சுகேதுபுத்திரியான தாடகையானவள்
விசுவாமித்திரருடைய யாகரக்ஷார்த்தம்
பாலவனத்தில் பிரயாணஞ்செய்யாநின்ற
காலத்தில் வில்தொனியை கேட்டு உனக்கபி-
முகமாக போர்செய்ய எதிர்த்து அட்டஹாசம்
முழக்கிநில்க்குந்தன்மையைக்கண்டு ராக்ஷ-
-ஸியான தாடகையை லோகோபத்திரவம்
தீர்க்க நிஜகபாணந்தொடுத்து

(கொன்றுகூற்றினு-எ-து-) கொன்று சம்ஹாரா-
-ரஞ்செய்து யமபுரிக்குசெலுத்தி அவளை பக்ஷிஜா-
லங்களுக்கு பக்ஷணஞ்செய்யகொடுத்த கொற்ற
மென்ற பிரதாபசாலியாயும் கோதண்டதா-
ரியுமாகிய ஹேராமகுமரா- (வென்றி-எ-து-) வெ-
ன்றியென்னும் விஜயசாலியாய் ராஜாதிராஜ-
-ஞன உன்பிதாவானவர் உன்னிடத்தில் ஒரு
வாசகத்தை சொல்லத்தக்கதாக

(என்றனேருரை-எ-து-) என்னிடத்தில் எல்ப்-
-பித்து விட்டதைநீயதோசிதமாககேட்டருளு-

-சரிக்க வேண்டும் ராகவா! கவி-

எந்தையேயேவந்ரேயுரைசெய இனையவதுண்டேல்
உய்ந்தனையடியேனென்னிற் பிறந்தவருரைரோவா-
-ழி- வந்ததென்றவத்தியவரும்பயன் மற்றேதுண்டோ.
(9)
தந்தையும் தாயுநீரேதஸ்தின்றேன் பணிப்பாய் தாயே-

(இ-ள்) சரணம் தாயே அடியேனுடைய ரக்ஷக-
-ர்த்தாவாகிய பிதாவெ உத்தரவிடப்பட்ட கல்-
-பனையானதை தேவரீர் தானேவந்து அடியேனி-
-டத்தில் சொல்லவேண்டின பிரயாசங்கள்
எதற்க்கு தான்

(உய்ந்தனையடியே — எ.து) எவ்வளவு
விஷமமான காரியமென்றிருந்தாலும் அதை நிற-
-வேற்றி அந்த உத்தரவின்படி செய்யுமாயிருந்தால்
பிதாவுக்குவேண்டின காரியத்தை நிறைவே-
-ற்றவேண்டின உத்தமபுத்திரன் என்னைப்போல்
மற்றொருவருமில்லையென்றுண்டான பாக்கி-
-யத்தை நான் அடைந்துகொள்வேன் தாயே
இப்படியுண்டான மஹாபாக்கியங்களெல்லாம்
வந்து சேர்ந்தது

(வந்ததென்றவத்தியெ— எ.து)
சுவீகாரியமான நிஷ்க்காமபுண்ணியத்தினல் எ-
-ன்னிடத்தில் வந்துசேரப்பட்ட தவப்பலத்தி-
-னல்தான். இதினல் வரும்பலபிராப்தி வீரியசொ-
-ர்க்கமென்னும் சுவாசுதமுக்தியல்லாமல் ம-
-ற்றொன்றுமில்லை

(தந்தையும் தாயும்—எ.து.) தந்தையா-

கிய ரக்ஷகர்த்தாவாகிய பிதாவும் பெற்றெடு-
-த்தாரன்ற மாதாவும் "தந்தைசொல்மிக்கமந்-
-திரமில்லை தாயிற்சிறந்ததொரு கோயிலுமில்லை."
என்ற வேதவாக்கியபிரகாரம் எல்லாம் தேவ-
-ரீர்தானே உமது ஸாசனை எதென்று வந்தாலும்
ஸிரசால் வஹிப்பேன். அதை இன்னதென்றரு-
-ளிசெய்ய வேண்டுமே தாயே.

வாராய் மகனே ராமகுமாரகேளு - கவி.

ஆழிசூழுலகமெல்லாம் பரதனேயாள நீபோய்த்
தாழிருஞ்சடைகடாங்கித்தாங்கருந்தவமேற்கொ-
ண்டு- பூழிவெங்கானநண்ணிபுண்ணியத்துறைகளாடி
ஏழிரண்டாண்டின் வாவென்றியம்பினளரசனின்-
-றே. (10)

(இ-ள்.) ஆழியான ஸரயூநதியால் சூழப்படா-
ரன்ற உத்தரகோசலை அயோத்தியையென்று-
-ண்டான ராஜ்ஜியமெல்லாம் பரதனெனுங்குமா-
-ரன் பரிக்கும்படியாகவும் பிரதமஸந்ததியெ-
-ன்னும் ஸ்ரீமந்தகுமாரனுநீ ராஜ்ஜியத்தை உ-
-பேக்ஷித்து விஸ்தாரமாகச்சென்று

(தாழிருஞ்சடைக — எ-து) தாழ்ந்து தொ-
-ங்கிகிடக்காரன்ற ஜடயுந்தரித்து தபசிகளை
பேர்கள் பக்ஷிக்காணன்ற கந்தமூலபல பக்ஷ-
-வாதிகளான வனபக்ஷியங்களை புஜித்து வா-
-தசீதாதபங்களையும் ஸஹித்து விருதானுஷ்-
-டானங்களான தபஸைசெய்ய

(பூழிவெங்கானம் — எ-து) பூழியெனும்
அருவிதீரங்களாக உண்டான வனபிரதேசங்-

ஞ ணாடபிராயித்து புண்ணியதீர்த்தங்களில் ஸ்-நானஞ்செய்து

(ஏழிரண்டாண்டின்-எ-து) ஏழிரண்டுபதினாலு ஸம்வல்சரம் கழித்து பதினைந்தாம் ஸம்வல்ஸரம் ராஜ்ஜியத்துக்கு வரவேண்டும் அவ்வளவு காலமும் ராஜ்ஜியத்தில் ஆசைகூடாதென்று ராஜாவானவர் ஏற்பித்துவிட்டது வாராய் மகனே.

அப்போது ராமன் சந்தோஷித்துசொல்

கவி.

மன்னவன் பணியன்றாகிலும் பணிமறுப்பனோ-
-வென் பின்னவன் பெற்றசெல்வமடியனேன்பெ-
-ற்றதன்றோ - என்னினியுறுதியப்பாலிப்பணிதலை
மேற்கொண்டேன் - மின்னொளிர்கானமின்றேபோ-
கின்றேன் விடையுங்கொண்டேன். (11)

(இ-ள்) ஆணைந்தாயே இந்தகல்பனையானது அந்தபிதாவின் கற்பிதமென்றிருந்-தாலும் உம்முடைய கற்பனையே என்றுவருமா-யிருந்தாலும் உமக்குவேண்டி பிதாவைசொ-ன்னதென்றுவருமாயிருந்தாலும் ராமனானவன் உபேக்ஷிக்கபோகிறவனல்ல

(பின்னவன்பெற்ற-எ-து) பின்னவனெ-ன்னும் எனது ஸோதரனை உமது புத்திரன் பரதன், பிதாவால் லபிக்கப்பட்ட ஏதேதுபா-க்கியங்களை ஸம்பாதித்தவனென்றுவந்தாலும் அடியனுக்கு லபிச்சபாக்கியம்போல் ஸந்தோஷிக்கப்பட்டவன் கேட்டீரோ தாயே

ராஜ்ஜியம் பரிக்கும்படியான விஷயம் வனவா-
-சமென்றுண்டான காரியம் இவ்விரண்டினிட-
-த்தில் வனவாசமென்றுண்டான விஷயம் அடி-
-யேனுடைய கடமையாக பிதாவுரைப்பித்தால்

(என்னினியுறுதி — எ-து) அடியேனுக்கு
உபகாரப்பிரதமாயும் அனுயோஜ்ஜியமாயும் லகு
வாகிய காரியமுமாகிலும் அப்புறம் ராஜ்ஜிய
பாரமோவென்றால் கிர்த்தவ்வியமான துஷ்
க்கரமாகிலும் ஆகையினால் அநாயாஸேன நிர்-
-வ்வஹிக்கப்படானென்ற இப்பணியாகிய வ
னவாசம் அதை ஸிரசால் வஹித்தேன்-

(மின்னொளிர் கான — எ-து) மின்னிப்பிரகாசி-
-க்காநின்ற அதிசோபனமாகிய வனவாசத்து-
-க்கு இதே ஸமயமாக நான்போய்விடுவேன்.
தீர்க்ககாலமான வனவாசம் மாதுருபித்த-
-ளே ராஜ்ஜியக்கு பங்கமில்லாதபடிக்கு நிற
வேறும்படி அடியேனிடத்தில் அனுக்கிரஹித்-
-தனுப்பவேண்டுமே தாயே

அப்படியே உனது வனவாசம் சுகமாக
வர உன்னை அனுக்கிரஹித்துக்கொண்டேன்
ராமகுமாரா.

என்றிப்படி கைகேயியுடன் சொல்லி
விடைபெற்று உடனே நடந்து கௌச
லையை வணங்க கௌசலை சொல்

நகர்நீங்குபடலம்

கவி.

நகர்நீங்குபடலம்.

புனைந்திலைமௌலிகுஞ்சிமஞ்சனபுனிதநீரால்
நனைந்திலை இன்னம் நாமா நன்மையோடனைக்கு
கீர்த்தி. வனைந்தபொற் கழுக்கோல்வீரன் மகித-
-லம் தருவேனென்ன - நினைந்ததென்னிடையூ
றுண்டோ நெடுமுடி புனைதற்கின்றே- (1)

(இ-ள்) வாராய் மகனே வாராய் ராமகு-
-மாரா! மௌலியான கிரீடத்தை உன் சிரசில்
தரித்துக்காணவில்லை. மஞ்சனநீரினாலும் ச-
-துர்ஸமுத்திரத்திலுண்டான தீர்த்தத்தினாலும்
(நனைந்திலை இன்னம் - எ-து)
நீ அபிஷேகஞ்செய்யப்பட்டவனுமல்லை.
நன்மையென்னும் உனக்கனுயோஜ்ஜியமான
கீர்த்திபிரதாபங்கள் வர்த்திக்க ராஜப-
-தவிதரத்தக்க

(வனைந்தபொற் - எ-து) ஸகலமான
பேர்களும் வந்து வணங்கும்படியான த-
-ங்கசிலம்புகளை அணியாநின்ற உன் பிதாவா-
-கிய ராஜாதிராஜனென்னும் சக்கரவர்த்தி
யானவர் நேத்து பூமண்டலத்தை தாவாமென்று
(நினைந்ததற் - எ-து) மந்திரிபுரோஹி-
-தர், நகரமாக்கள் எண்றிவரிடத்தில் ஆலோ
-சனை செய்து முகூர்த்தம் நிச்சயித்து நிருமா-
-ணித்த விஷயத்துக்கு வல்ல விக்கினங்களும்
பலித்ததுண்டோ! யாதொன்றும் நேரண்தறி
நீதவனல்லை. நீ ஸர்வஸாதாரணமாக, சௌ-
-ஸாசமனஸ்நான ஸந்தியாவந்தனதிகிர்த்-

-தியங்களைகூடி செய்யாமல் இப்படிவரகாரண மென்ன? அபிஷேகத்துக்கு முடக்கம்வர காரணம் என்னவென்று எனக்கிதம் சொல்லு சொல்லுவாய் மகனே. அதுகேட்டுராமன்சொல்- கவி.

மங்கலத்தரசன் மனையாளென்ன.
இங்கிதத்தொடுபெற்றிடும் தெய்வமே
பங்கமில் குணத்தெம்பிபரதனே.
துங்கமாமுடி சூடுகின்றனின்றே (2)

(இ-ள்.) சரணம் தாயே மங்கலமென்னும் ஸர்வ ஐசுவரியங்களுக்கும் காரணபுருஷனாகிய அடியேனுடைய பிதாவுக்கு பட்டத்தரசியென்னும் பத்னி பதத்திலிருந்து அநுபதினாயிரஸம்வல்ஸரகாலம் சந்தான பாக்கியமில்லாமல் பலவிதத்திலுண்டான விருதானுஷ்டானங்களையும் நடத்தி அதிலுடையபலபிராப்தியாக அடியேனை போலுண்டான ஒருபுத்திரனை

(இங்கிதத்தொடு-என்-து) உமதுமனதுக்கு ஸந்தோஷகரமாக ஜெனிப்பித்து கைவளை மெய்வளை கால்வளைத்தி ரகித்து பாலூட்டி தாலாட்டி நாளை-ரவண்ணம் பொழுதொருமேனியாக வளர்மையை செய்த என் கண் கண்ட தெய்வம் போன்ற வேறு தாயே.
(பங்கமில் குணத்தெம்பி—என்-து)

பங்கமென்னும் யாதொருவிதத்திலுண்டான
குற்றங்குறைபாடுகளுமில்லாமல் ஸல்குண சம்
பன்னனான என் தம்பியான பரதனனவனுக்கு

(துங்கமாமுடி - எ-து) துங்கமென்னும்
நெருங்காணன்ற மஹனீயமான கிரீடத்-
-தை பிதாவானவர் தரிப்பிக்க போகிறார்
கேட்டீரோ தாயே

முறைமையன்றென்பதொன்றுண்டு மும்
மையின் - நிறைகுணத்தவன் நின்னினும்
நல்லன் - குறைவிலன்னெனக் கூறிய நா
ல்வர்க்கும் - மறுவிலன் பினில் வேற்று
மை மாற்றினான் (3)

(இ-ள்-) வராய் ராமகுமாரா முறைமை
யான கீழ்வழக்கங்களை, ஆஸ்பத,ப்படுத்-
-து மாயிருத்தல் ராஜிணைக்கு மூத்தவன் ரா-
-டபதிக்கவேண்டுமென்று முன்னோர்களினு
டைய ஒரு நிஸ்சயம் அதை அபேக்ஷித்து அ-
-ந்த பரதன்

(நிறைகுணத்தவன் - எ-து) ஒரு ராஜாவுக்கு
வேண்டிய ஸல்குண ஸம்பன்னதையில்
உன்னைக்காள் உத்தமனாகிலும் தவம்,
பக்தி, நீதி, இம்மூன்றுவிதத்திலும்
மேன்மையை பெற்றவனுமாகிலும்
நன்றிருந்தாலும்

(குறைவிலன்னை - எ-து)

குறைவானபோராய்மைகளில் இந்தநா-
-லுபுத்திரர்களில் பரதனுக்குமாத்திரம்
ராஜரீகமென்று பிதாவெநிஸ்ச்சயி-
-த்ததினால்

(மறுவிலன்பினில் — எ-து) மறுவெண்-
-ணும் களங்கமில்லாமலிருக்கிற வால்
சல்லியம் உன்னிடத்தில் அதிகரித்த
தினால் இந்த வேற்பாடாக இந்த கிரீ-
-டதாரணையை மாற்றிவிட்டது கேட்-
-டயோமகனே கவி-

என்றுபின்னரும்மன்னனைவிய
தின்றைறமகனேயுனக்கென்றனள்
நன்றுதம்பிக்குநானிலம் ஈகொடுத்
தொன்றிவாழுதியூழிபலவின்றே.(4)

(இ-ள்) வாராய்ராமகுமாரா எனதுமக-
-னைப்போல் சோபிக்கப்பட்டவனும் உன்
தம்பியுமாகிய பரதகுமாரனுக்கு பட்டாபிஷே
கமென்று கல்பனை அந்துவிதமாக மஹா-
-ராஜாவெவிதிச்சயஞ்செய்வாரேயானல்

(தின்றைறமகனே — எ-து) ராஜாசொன்ன
விதமல்லாமல் அது அந்த விதமல்லவென்று சொ
ல்வது சரியல்ல. உன் தம்பிமார்களில் வால்சல்-
-லியத்தில் துன்றிதெரெங்காநன்ற உம்பியா-
-கிய உன் தம்பிபரதனுக்கு
நன்றுதம்பிக்கு — எ-து
நானிலமாகிய ராஜாங்கத்தை கொடுப்பது

மிகவும் நன்று நல்லதுதான் அப்படியேராஜா-
-வசொன்னவிதமேசெய்துநீங்கள்எல்லோரு-
-மாக. (ஒன்றிவாழுதி-எ-து-) ஊழியென்னும்
யுகமுடிவுகாலம்வரைக்கும்ஏகோதரஸஹோ-
-தரபந்தத்தோடும்சுகமாகநீங்கள் வாழவே-
-ண்டும் கேட்டீரோமக்களே- கவி-
ஈண்டுரைத்தபணியென்கொலென்றிடில்
தூண்டோரேழிஞேடேழகன்கானிடை
மாண்டமாதவரோருடன்வைகிப்பின்
மீண்டுநீவரல்வேண்டுமென்றனின்றேர(5)
(இ-ள்-) சரணம்தாயே உம்முடையகுஞெதி-
-சையங்களை கேண்டு மிகவும் ஸந்தோஷ-
மடைந்தவன்- ஆனல் ஈண்டு இவிடத்தில்
பிதாவானவர் மற்றொருகல்பனையுங்கூட
அடியேனிடம் உரைத்து சொல்லாநின்றஒ-
-ருவராகிவும் அதென்னவாகிவுமென்றல்-
(மாண்டமாதவ-எ-து-) மாட்சிமை தங்கிய-
தபஸிகள் இயம, நியம, ஆஸன, பிராணயாம,
பிரத்தியாஹார, தாரண, தியான, சமா-
-தி, களான அஷ்டாங்கயோகங்களில்
தெளிந்து நிபுணராகிய தபசிகளோடு சேர்ந்து
வைகி ஸஹவாசஞ்செய்து அந்த பதினா-
-லு வருஷங்கழிந்து
(மீண்டுநீவரல்-எ-து-) மீண்டு ராஜ்ஜி-
யத்தில் திரும்பிவரவேண்டுமென்று
பிதாவு

கல்ப்பித்திருக்கிறர் கேட்டீரோ தாயே.

ஐயயோ வாராய் மகனே!

ஒ ஹோ மாதாவல்லவோ மோஹாலசிய மடைந்-
-துவிழ்ந்தது பனிநீரினல் முகக்ஷாளனஞ்செய்து
மோஹாலசியத்தை தீர்த்துகொள்வேண் மனசே

சரணம்தாயே. கவி.

இத்திறத்தினிடருறு வாயெனை
கைத்தலத்தில்வளர்த்திடுங்கல்பிணய்
பொய்த்திறத்திறத்தினுக்குதியோபுகல்
மெய்த்திறத்துநம்வேதநீயின்றே.

(இ-ள்-) சரணம்தாயே இந்தவார்த்தையை கே-
-ள்ப்பதற்க்கு மனந்திகைத்து விம்மி அழுது
மகனை பட்டங்கெட்ட சொன்னது வஞ்சனை
தானே அல்லது அந்த வார்த்தை விஷம்தானே.
என் பிராணன் இனிமேலிராது. என் உயிர்
நடுங்குவது என்றுசொல்லி உம்முடைய வயிற்றி-
-ல் திங்கள் கடகமிட்ட கரங்களினல் பிசைந்து
பெருமூச்சுவிட்டு துன்பமடைகிறீரே தாயே
இந்த சுருங்கியகாலம் அடியேனை பிரிந்-
-திருக்கும் விஷயத்தில் சங்கடமடைகிறீரே
தாயே தேவரீர் எப்பேர்ப்பட்டவரென்றல்

(கைத்தலத்தில்வளர்த்திடும்-எ-து-)

கைத்தலமாகிய கரதலத்தில் எடுத்து வ-
-ளர்த்திவரப்பட்ட பதிவிர்தாசிரோமணியா-
-கிய ஹேதாயே உம்முடைய சங்கட நிவர்ரண
த்துக்காக அடி-

-யேன் வனத்துக்குப்போகாமலிருந்தால்

(பொய்த்திறத்திறனை — எ-து) பிதாவானவர் பரதனுக்கு ராஜ்ஜியமும் பதினாலுவருஷம் அ-
-டியேனுக்குவனவாசமும் வரத்துயமாக கை-
-கேசிமாதாவுக்கு கொடுத்தபடியால் அதற்கு விபரீதமாக அடியேனைசெய்யிப்பித்து பொய்த்திறனென்னும் அசத்தியவாசியாக்கிவிப்பிப்-
-பதோ உமக்குகீர்த்தி

(மெய்த்திறத்து — எ-து) சத்தியஸந்தனாகிய பிதாவை ஓர்காலத்தும் அஸத்தியசந்தனாக்கி தீர்-
-ப்பதற்க்காக தேவரீர் இந்தவிதம் துக்கிக்க-
-லாகாதே தாயே. கவி-

விண்ணுமண்ணுமிவ்வேலையுமற்றும்வே
றெண்ணும் பூதமெலாமிறந்தேகினும்
அண்ணலேவல்மறுக்கவடியனேற்
கெண்ணுமோவிதற்குள்ளதியாயினரே- (7.)

(இ-ள்) சரணம்தாயே கேளும் நாமபே-
-தங்களில்லாத சுத்தபிரம்மத்திலிருந்து இவ்-
-வகண்ட ஸச்சிதானந்த பரபிரம்மம் அந்-
-தபிரம்மத்திலிருந்து சுத்தசத்துவம், சுத்த ரஜசு, சுத்ததமசு அல்லவென்றுவந்தால் ஆனந்தரூபசக்தி, சித்துரூபசக்தி, சத்துரூப-
-சக்தி, என்ற மறுபெயரோடும் அந்தசத்ரூப சக்தியிலிருந்து மூலபிரகிருதி அந்தமூலபி-
-ரகிருதியிலிருந்து அசுத்தசத்துவம், அசுத்-
-தரஜசு, அசுத்ததமசு, அல்லது மாயை, அவித்-

-ணை, ஆவரணம், அசுத்தஸத்துவமான மாயையி
லிருந்து சத்துவத்தில் சத்துவம் பிரதானமாக
வந்தபோது விஷ்ணுவாகவும் சத்துவத்தில்
ரஜசு பிரதானமாக வந்தபோது பிரம்மாவாகவும்
சத்துவத்தில் தமசு பிரதானமாக வந்தபோது ரு-
-த்திரனாகவும் அசுத்த ரஜஸான அவித்தையி-
-லிருந்து ரஜசில் சத்துவம் பிரதானமாக வந்-
-தபோது தத்துவ தத்துவரியான திஷ்டரென்றும்
ரஜஸில் ரஜசு பிரதானமாக வந்தபோது கா-
-மக்ரோத கர்ம நிஷ்டர்களென்றும் ரஜசில்
தமசு பிரதானமாக வந்தபோது சோம்பல் நித்தி-
-ரை மயக்கங்களையுடையராகவும் அசுத்த தாம-
-தத்திலிருந்து ஆவரணம் விக்ஷேபமென்ற இர-
-ண்டு சக்திகளில், விக்ஷேப சக்தி, இதில்
தமஸில் சத்துவம் தமஸில் ரஜசு தமஸில் த-
-மசு என்ற மூன்று குணங்களும் அடங்கும் இதி-
-லிருந்து சப்த தன்மாத்திரையான ஆகாசமெ-
-ன்ற பூதமும் ஸ்பரிச தன்மாத்திரையான அக்கி-
-னியென்ற பூதமும் ரச தன்மாத்திரையான அப்பு
வென்ற பூதமும் கந்த தன்மாத்திரையான பிரு-
-தியென்ற பூதமும் இப்படியுண்டாகப்பட்ட
(விண்ணும் மண்ணும்—எ.து.) விண்ணாகிய
ஆகாசம் மண்ணாகிய பூமியும் இப்படியே பஞ்சபூ-
-தங்களெல்லாம் நசித்தாலும்

(அண்ணலேவன்—எ.து) அண்ணலென்னும்
விசிஷ்டராயி உலகங்களிலெல்லாம் கொடுங்-

-கோல்மாற்றி செங்கோல் நடத்திவரப்பட்ட

என்பிதாவானவருடைய ஏவலென்னும் கல்-

-பனையாணதை மறுத்து உபேக்ஷையை செய்ய

(நெண்ணுமோ — எ-து)

ஸாத்தியப்படாது ஆனதினால் சொற்பகாலம்

வனவாசம்போகும் வேர்பாடுக்கு உம்முடைய

உண்மையானமனசு அழியாமலும் ஸங்கடப்படா

மலும் ஸமாதான சித்தயாயி இருக்கவேண்டும்

தாயே. கவி.

மாண்மறிக்கரத்தாண் மழுவேந்துவான்

தாண்மறுத்திலன்றனை சொற்றுனையே.

ஊனைறக்குறைத்தானுரவோனருள்

யாண்மறுப்ப தென்றெண்ணுவதோ-

வெனு- (8)

(இ-ள்.) இன்னும் நம்முடைய முன்னோர்களா-

-கிய பெரியோர்கள் செய்த சரித்திரமாஹா-

-ல்ம்மியங்களை அனுஸ்மரிக்காதன்ற கா-

-லத்தில் பிதுருவாக்கியம் நிஷேதிக்க

கூடாது அந்தசரித்திரங்கள் எதென்றால்.

(மாண்மறிக்கரத்தாண்- எ-து) முன்னொ-

-ருகாலத்தில் இடதுகரத்தில் மானை தரி-

-த்து சூலபாணியாயி, அக்கினி, மாண், மழு,

தரித்தவராயி, ஸ்மசான தூளிபூஷிதருயி,

ஸ்மசான நடனப்பிரியராயி, சுவர்ண்ண

சர்ப்பாபரணி, கிரைவேய,வலய, ஹாரகே-

-யூராங்குலிய கடக கடிசூத்திர காஞ்சீ
நூபுராத்தியலங்கிருதராயி, காளகள வி-
-ராஜிதராயி, கங்காகாமுகனாயி, எகக்கும்
கும்பயும் சாம்பவும் தரித்த அஸ்த்திமாலைக-
-ளுடன் ஹஸ்த்தி சர்ம்ம பிருதசோபிதராயி,
அர்த்த நாரீசுவரராயி அர்த்தேன்துசூடராயி
அபிஷேகபிறியராகிய பரமேஸ்வரரிடத்தி-
-லிருந்து வெண்மழுவை வராயுதமாகவா-
-ங்கானன்ற ஒருவரே பரசுராமன் அந்த
பரசுராமனான இளையபுத்திரனோடு கூடியும்
வசு, விசுவாசு, பிருகண்டு, சுகோத்திரன்,
என்றமுதல் புத்திரர்களோடும் ரேணுகையென்ற
பத்னியோடும் நர்ம்மதா தீரத்தில் வானபிர-
-ஸ்தாசிரமம் தீக்ஷித்து அதிவசிக்கப்பட்ட
ஜமதக்கினிமஹரிஷியானவரும் ஒருநா-
-ளில் தனது இளையகுமாரனுக்கு வேண்டின
உபநயனம்முதலான கர்ம்மங்களுக்கு வேண்-
-டிய தர்ப்பை, சமதை, முதலானதுகளை உத்தே-
-சித்து சூரியோதயத்துக்குமுன்னே பிரபாதகா-
-லையில் உத்தானஞ்செய்து முதல்புத்திரர்களை,
நாலுபேர்களையுங்கூடி பிரயாணஞ்செய்யாதன்ற-
-காலத்தில் ரேணுகையை பார்த்து ஆசிரமசு-
-சீகரணங்களை நிறவேற்றி தன்னுடைய நித்தி-
-யபூஜைக்கு வேண்டியதான புஷ்பாவலிகளை-
-யும் மற்றுபூஜா திரவ்வியங்களையும் ஒருக்கச்-
-சொல்லி வனத்திற்க்கு பிரயாணஞ்செய்யாதன்ற

காலத்தில் ரேணுகையானவளும் அதிஜாக்-
-கிரதையாக ஆசரமத்தினுடைய அங்கணபி-
-ரதேசங்களை தூத்தெறிந்து புண்ணியதீர்த்த-
-த்தை கொண்டுவர அடிதடி முதலானதுகளை
நிறவேற்ற உத்தேசித்து குடசி குளந்தையா-
-ணராமனை வரவழைத்து ஆசரமத்தில் கா-
-வலிருத்தி கங்காதீரத்தில் செல்லவும் அந்-
-த கங்காநதியில் மாஹிஷ்மா பதிமன்ன-
-னாகிய தத்தாத்திரேய சிஷியனாயி அஷ்-
-டயிசுவரியங்களோடும் ஆயிரம் பாருக்க-
-ளோடும் சோபிக்கிறதன்ற கார்த்தவீரி-
-யார்ச்சுனன் தன்னுடைய பத்தினிமா-
-ரோடுகூடி ஜலகிரீடையை செய்து காம-
கேளிவிலாசங்களை நடத்தி நீர்விளையா-
-டும் அவஸ்த்தையை கண்டு மதிமறந்து ஓ-
-ஹோ இந்த கார்த்தவீரியார்ச்சுனனை
போலுண்டான ஒருவனுக்கு பாரியையாக
வர பாக்கியம் செய்தவளல்ல. அந்த ஸ்-
-திரீவர்க்கங்களைபோல் சுகிக்க கிர்வா-
-றைமில்லாமல் ஒருவயோதிகனுக்கு பா-
-ரியாகவந்து யௌவ்வனமே பாழாக
போய்விட்டதே என்றுபரிதபித்து அவ-
-ர்களின் விஷயசுகத்தில் ரேணுகையா-
-னவளுக்கு மனஞ்செல்ல. மானசிகமாக
விபசாரதோஷமேற்றதினால் ஸாதாரண-

-மாக ஜலமெடுக்கு ந்தன்மைபோல் ஸாத்தி-
-யனைதப்படாமல் நில்க்கவும் இப்பால் அந்த
பிருகுவாசமான ஆசரமத்தில் ஜமதக்கினி-
-யானவர் வரவும் ராமகுமாரனை க்காண-
-வும் ஆசரமத்தில் ரேணுகையை கா-
-ணாமலும் தினகிர்த்தியங்களொன்றும்
நடக்காமலும் நிம்ஞென்னதங்களனைவ-
-னத்தில் நடந்த க்ஷீணத்தினால் ஆதப-
-த்திரமானதை எடுத்து வீசி ஆசரம
-த்தில் நில்க்காதென்ற காலத்தில் ஊ-
-றாபோறஸமர்த்தனாகிய மஹர்ஷி-
-யானவர் பத்னியானவளுடைய பதி-
-விர்தா தர்மம் நசிச்சதை தெரிந்து
கோபித்து அவளை திர்பார்த்துநி-
-ல்க்க இப்பால் ரேணுகையானவள்
ஒரு குடத்திலே ஜலத்தையும் வஹித்து
வராநின்ற அவஸ்தையைக் கண்டு நீ இந்த
ஆசரமத்தில் இருக்ககூடாது நீ இலடயாக
வந்தது என்று சொல்லி ஸமுச்சேதன-
-மான ஆயுதத்தையிளக்கி பயப்படுத்த-
-வும் வசுவானவர்களை வரவழைத்து
அவளின் தலைச்சேதனஞ் செய்யச்சொ-
-ல்லவும் ஏதோ பிதாவு கோபாவே-
-சத்தினால் சொன்னதாகிலுமென்று

அந்தவார்த்தையை கேள்க்காமல் அடங்-
-கியிருக்கவும் இப்படி கிரமமாக விசுவாசு,
பிருகண்டு, சுகோத்திரன், என்றவரிடம்
சொல்லியும் அவர் கேள்க்காமல் அடங்கியிரு-
-க்கப்பட்ட அவஸ்தையைகண்டு அப்பாரா-
-மகுமாரா குடிலையான உன்மாதாவை சிர-
-ச்சேதனஞ்செய்ய என்று சொன்ன அவச-
-ரத்தில் அந்த பரசுராமர் பூர்வஜர் செய்-
-யாமலிருந்த அந்த மாதுருஹத்தியை
(தாண்மறுத்திலன்—எ-து)
பிதுருவாக்கியத்துக்கு எதிர்வாக்கி-
-யமில்லை என்ற நியமானுசிர்தமாக நான்
அந்த கிருத்தியஞ்செய்ய உபேக்ஷைசெய்-
-தவனல்ல சமச்சேதனமானவாளையு-
-த்தையெடுத்து மாதாவின் சிரச்சே-
-தனஞ்செய்யவும் உடல்தலை வேறுகரக்-
-தம் ஒழுகிகிடக்கப்பட்ட மாதாவின்
மிருதசரீரத்தை கண்டு தானும் போத-
-ரஹிதனாயி பூமியில் விழவும் ஜமதக்-
-கினிமஹாரிஷியானவர் சிதேபசா-
-ரஞ்செய்து குமாரா உனக்கு என்னவேண்-
-டுமென்று கேட்ட காலத்தில் என் மாதாவு-
-க்கு பிராணனையும் தமையர்கள் சண்-
-டாளராக சபித்தசேபகோபதத்தையும்
நீக்கி இந்த சம்பவங்களையெல்லாம்

விஸ்ம்மரித்து அனுக்கிரஹைக்கவேணு-
-மென்றுசொன்னகாலத்தில் அத்துவித
-மாகக்கொண்டு அனுக்கரஹித்து ஜமதக்-
-கினேயன் என்றுண்டான நாமத்தையும்
பரசுராமனுக்கு கொடுத்து கீர்த்திய
டைந்த பரசுராமன்

(உளனைக்குறைத்த — எ-து)

மாதுருஹத்திசெய்தவனைன்றிரு
ந்தாலும் உத்தமபுத்திரனென்ற பைதுரு-
-கம் தான் அவிகரிச்சு ஜாமதக்கினி
என்ற கீர்த்தியைசம்பாதித்து-என்
பிதாவினுடைய பைதுருகமான நாம
தேயமான தாசரதிராமனென்றுண்டான
கீர்த்தியை உபேக்ஷிக்கும்படி இந்தரா-
-ஜபோகங்களைமோஹிச்சு கீர்த்தி
போகும்படி

(யான்மறுப்பதை — எ-து)

பிதாவானவருடைய ஆஞ்ஞையை பதவி
பாக்கியங்களுக்குவேண்டி தான் உ-
-பேக்ஷிக்கப்படுமென்றே நீர்எதை
ஞ்ஞை ஆலோசனைசெய்தீர் தாயே

கவி-

மகரவேலைமண்டொட்ட வண்டாடுதார்
சகரர்தாதைபணிதலைநின்றுதம்

புகரில் யாக்கையினின்னுயிர்போக்கிய
நிகரின் மாப்புகழ் நின்றதன்றேவெண(4)

(இ-ள்) இன்னும் நமது பூர்வீகர்களான சூரி-
-யவம்சராஜாக்களில் அதிவீரியபராக்கிர-
-ம சாலியாகிய சகரமஹீபதியென்னும் சக்க-
-ரவர்த்தி, விதர்ப்பையென்றும் சுமதியென்றும்
இரண்டு பத்னிமார்களோடுகூடியும் அம்சுமான்
சகரர்களென்ற சுமதிபுத்திரர்களோடுகூடியும்
அயோத்தியை பரிக்காநின்ற காலத்தில் விசு-
-வஜித்து என்றுண்டான அசுவமேத யாகம்
செய்ய தொடங்கியயாகாசுவத்தை விளம்பரம்
கட்டிவிடவும். தன்னை ஜயிக்க யாகாசு-
-வத்தை பந்தனஞ்செய்ய தைரியப்படாமல்
ஸர்வராஜாக்களும் பராஜயமடைந்தகால-
-த்தில் தேவேந்திரனுக்கு தனதுஸ்தானம்
நசிக்குமோ சகரராஜாவால் தன்னுடைய ப-
-தவி நாசமடையுமோவென்று பயந்து ராத்தி-
-ரிகாலத்தில் யாகாசுவத்தை அதோலோக-
-மான பாதாளத்தில் கபிலவாசுதேவரென்னும்
மஹார்ஷியானவருடைய ஆசிரமத்தில் கொ-
-ண்டுபோயி பந்தனஞ்செய்யவும் சகரமஹீபதி
யானவரும் யாகாசுவத்தை அன்வேஷித்து
செல்லுவதற்க்கு அறுபதினாயிரம் புத்-
-திரர்களையும் நியோகிக்க இந்தபூலோக
மெல்லாவிடங்களிலும் அனுவேஷணஞ்-

செய்தும் யாகாசுவத்தை காணாமல் சங்கட-
-மடைந்து பிதாவினிடத்தில் வந்து சொல்லவும்
யாகாசுவத்தை கொண்டுவந்து யாகம் நட-
-த்துவதா யாகஞ்செய்யாமல் விட்டுவிடுவ-
-தா என்று சொன்ன காலத்தில் மகாதேவிஸ
யென்று சொல்லப்பட்ட இந்த ஸாகரதீரங்க-
-ளில் அதோலோகம் செல்ல பாதாளத்துக்கு
வழிதோண்டி செல்லாநின்ற அந்த சகரகுமா-
-ரர்கள் கபிலாச்சிரமத்தில் யாகாசுவத்தை
கண்டு இந்த மஹரிஷியே யாகாசுவத்தை
மோஷ்டித்தவனென்று கோபித்து யுத்தஞ்-
-செய்ய வில்லும் சரமும் எடுத்து யாகாசுவத்-
-தை விட்டுவிடுவாய் அல்லயென்றுவந்தால்
எங்களிடம் யுத்தத்துக்கு வாடா என்று அஹ-
-டஹசித்த காலத்தில் கபிலவாசுதேவரும்
தன்னுடைய சமாதி உணர்ந்து ஆயுதபாணி
களாய் நிற்கிற நின்ற சகரபுத்திரர்களான
அறுபதினாயிரம் பேர்களையும் பார்த்து தபோ
பங்கம் செய்யாநின்ற நீங்கள் பஸ்மமாக
போகக்கடவதென்று சபித்து பிதாவுக்கு ஆ-
-ஸ்மாகுதியை செய்யப்பட்ட பேர்கள் கே
டமரோ தாயே. இந்த விர்த்தாந்தங்களை
யெல்லாம் தெரிந்து அந்த அறுபதினாயிரம்
பேர்களையும் உத்தரிக்கத்தக்க

-தாக நமது வம்சத்தில் பிறந்தனென்று
சொல்லாநின்ற ராஜாவை பிரம்ம திவன்
கங்கை என்றுண்டான தெய்வீக
கங்கைகளைக் குறித்து முப்பதினாயிர
சம்வல்ஸரம் கிரமகரமான தபஸை
செய்து ஆகாச கங்கையை பாதாளத்தில்
செலுத்தி பிதாமஹர்களுடைய அஸ்தி-
-தாபஸ்மத்தை நிமஜ்ஜனஞ்செய்து
அந்த புண்ணிய தீர்த்தமான கங்கைக்கு
பாகீரதியென்றும் லவண சமுத்திரத்துக்கு
சாகரமென்னும் பரியாயநாமம் வரு
வதற்க்கு பிரயத்ந விசேஷங்களை
செய்யாநின்ற

(புகழில் யாக்கை — எ-து) புகழென்-
-னும் அனுர்த்ஜடதுக்கமான சரீரத்-
-திலிருந்து பிராணனை தியஜித்து அனு-
-ஸ்வரமாகிய கீர்த்தியை சம்பாதிக்-
-கானென்ற

(நிகரின் மாப்புகழ் - எ-து) நிகரென்-
-னும் சமாநதபடாமல் அசாமாந்நி-
-யமாகிய அந்த ஸல்கீர்த்தியானது-
-க்கு யாதொருவன் பிதுருஸாசனையா
-னதை லங்கனஞ்செய்து அதற்க்கொரு
விராமம் விடவேணுமென்றே சொன்னீர்
தாயே. என்னைபோலுண்டான புத்திரர்கள்

இந்தகோத்தரத்திலுள்ள ஸல்கீர்த்தியை
நிலைநிறுத்தி நடந்து போக வேண்டின
பேர்களெல்லவோதாயே. கவி.

ஆதியிணையவரசன்றனையால்
ஏகலைவெண்பதியானுமுறைக்கிலேன்
சாகலாவுயிர் நோவங்கவல்லேனையும்
போகினின்னொடுங்கொண்டனை-
-போதியால்- (10)

(இ-ள்.) வாராய்மகனே பிதாவினுடை-
-டய இல்பனைக்கு நீ ஒருவன் நீயாகவா-
-லனுயி ஸோதானிடத்தில், சமஸ்த்த-
-னுயியாதொருவிதத்திலுள்ள பரிபவ-
-முமில்லாமல் பிதுருவாக்கியத்துக்கு வேண்-
-டி விதூரமான வனம் போகுமாயிருந்தா-
-ல் அந்தஸாசனை, ஹேதுகமாக
(ஏகலைவெண்பது-எ-து-) போகக்கூ-
-டாது என்று யான் சொல்லுகிறவனை-
-லினை உன்வேர்பாடுஹேதுகமாக
(சாகலாவுயிர்-எ-து) மரணமடையா-
-மல் பிராணபரணம் செய்திருக்க சக்-
-தியல்லாமலிருக்கிற என்னையும் கூடி
(போகில்நின்னொடு-எ-து) நீவன
த்திற்குப்போகுமானால் உன்னொடுகூடி
வனத்திற்கு என்னையும் கொண்டு

போகவேணுமேமகனே.

கலி.

வறிவிலெம்பியிம்மண்ணரசாயவற்
குறிமைமாணிலமுற்றாபின்கொற்றவன்
திருவின்வந்தித்தவஞ்செய்யும்நாணு
டன் - அருமைநோன்புகழாற்றுதியாமி
ன்றே. (11)

(இ-ள்) ஐயயோ அம்மாதாயேகேளு
நீர் இந்திரியமாகசொல்லலாகாது மஹா
ராஜாவாகிய பிதாவானவர் என்வேர்
பாடு நிமித்தம் துக்கசாகரத்திலழுந்தி
யிருக்கிற அவரோடுகூடி நீரும் இரு
ந்து அவருக்கு சமாதானம் வருவத
ற்க்கான தைரியம் சொல்லிக்கொ-
-ண்டிருக்கவேணுமல்லாமல் என்-
-னோடுசேர்ந்து நீர் ஆரண்ணியத்துக்கு
வரநினைக்கிறது உத்தமமா? நீர்
தர்மத்தை பார்க்கவில்லையா!
வறிந்துகெட்டமைந்தவில்லைகொதத்-
-தில் பிடித்து என் தம்பியாகியபரதன்
இந்தராஜ்ஜியத்துக்கு ராஜாவாக
வைத்து பிறபாடு
(குறிமைமாணில — எ-து.) தனக்கு
உரிமையாகிய மாணிலமென்னும் பூமா-
-ரத்தை பரிபாலனஞ்செய்து திருவுடை
ய அனந்தரம் கொற்றம் வெற்றியையுடைய

பிதாவானவர்
(திருவின்தீங்கி-எ-து) இல்லறத்தை-
-யும் திருவாகிய இந்த சைபாக்கிய
ங்களையெல்லாம் தியஜிச்சு துறவ-
-றத்தை யெடுத்து வானபிரஸ்தாசிர-
-மம் அவிகரித்து தபஸை செய்ய ஒ-
-ங்கி வந்தானென்று அக்காலத்தில்
அவரோடு கூடி
(அருமையோன்-எ-து) அருமை
யாகிய விருதங்களெண்ணும் பார்த்-
-து அஞானசோதிகளான அனுஷ்டா-
-னங்களை நீரும் அனுசரிக்கவேண்டு
மாதலால் நீர் கிளேசித்து மனத்தை-
-க்க வேண்டிய காரியமென்ன? அந்த
கிரத்தியங்களையெல்லாம் நிர்வஹி-
-த்து பிதாவுடன் வருகிறதாகிலும் உம-
-க்கு தன்மை-ஆகையினால் வனவா-
-சம் அகமாகவர அடியேனை அனு
க்கிரகிக்கவேணுமேதாயே-
வாராய்மகனே நான் பிதாவின்
சமீபஞ்சென்று வருகிறபடியந்தம்
இவிடத்தில் இருந்து கொள்வாய்
மகனே-
என்றிப்படிசொல்ல கைகேசி பாதனுக்கு
ராஜ்ஜியம் கொடுத்தாலும் ராமன்காட்டுக்குப்-

போகாமல்வரம் கேள்க்கிறேனென்று கைகேசி
அரமனையில்சென்று, தசரதன்மேல்விழுந்துசொ-
-ல். கவி.

இருளற்றிட வற்றெளிருமிரவிக்கெதிருங்கிகிரி
உருளைத்தனியுய்த்தொருகோனடையிற் கடை
காணுலகம்- பொருளற்றிடமுற்றுறுமப்பகலிற்பு
குதல்கென்றே- அருளைக்கருதிற்றிதுவோவரசர்
க்கரசே அரசே. (12)

(இ-ள்) ஐயோ ஐயயோ வாரீர்கணவா அடியாளை
பிரிந்துபோகிறீரா? பெரியவர்களுக்கு இது உத்த-
-மமா? நீதியா? அடியாளைநினைக்கவில்லையா? ஹா
என்னுடைய அறிவே! பலமே! நீர்இப்படியாகிறது
அறிந்துதானோ! பிள்ளைக்கு பட்டங்கட்ட வே-
-ணுமென்ற யோசனைசெய்தீர் இராஜாதிராஜ-
-னே! தரித்திரனுக்கு தனமே நீர்

(இருளற்றிட—எ-து) இருளான அந்தகாரம்அற்று
வேறிடத்தக்கதாகவும் பிரகாசிக்கப்பட்ட இ-
-ரவியாகிய சூரியதேவனுக்கு எதிரென்னும் அபி-
-முகமாக திகரியாகிய உமது ஆந்நியாசக்கரத்தை
பூர்வதிசைக்காக

(உருளைத்தனி—எ-து) தேவரீருடைய சக்கரமா-
-னதை உலக லோகாவஸானம் வரைக்கும் செங்-
-கோல்நடத்திவரப்பட்டநீர்

(பொருளற்றிட—எ-து) பொருளாகிய அறிவில்
உள்படாதென்ற ஸமஸ்தங்களும் நசிக்காதன்ற

பிரளய காலத்தில் வந்து

(அருளைக்கருதி — எ-து.) ரக்ஷிக்கவேண்டுமெ-
-ன்று தானே இத்தன்மை பூண்டது ராஜாதிராஜனா-
-கியவாரீர் கணைவா.

கவி.

திரையார் கடல்சூழுலகின்றவமே திருவின்றிருவே.
நிரையார் கலையின் கடலே நெறியார் மறையின்நிலை-
யே. கரையாவயர்வேனை நீ கருணாலயனே யெ-
ணின்றேன். றுரையாவிது தானழகோ உலகேழு-
டையாயென்னும். (19)

(இ-ள்) திரையாரம்பத்தோடுகூடினமல்கிய நக்-
-கிர, சக்கர, கர்க்கிடக, மண்டூக, ஜலூக, வியாள,
பிறபுறுதிகளான, ஜலசரங்களால், பரிசேவித-
-மான ஸப்தஸாகரங்களால் பரிசேவிதமான ஸ-
-ப்த சாகரங்களால் சூழ்ந்த உலகத்திலுள்ள ஜீவ
கோடிகளினுடைய தவத்தின் புண்ணிய சொரூபக
விளங்கப்பட்டவரே கணைவா! திருவென்னும் பா-
-க்கியபொருள்களுக்கெல்லாம் பாக்கியநிதியே.

(நிரையார் கலையின் — எ-து) நிரையென்னும்
அடுக்கடுக்காக வுள்ள கல்வியாகிய நாலுவேதங்-
-கள் நான்கு உபவேதங்கள் ஸந்தசு, கல்பம், வியா-
-கரணம், சிக்ஷை, ஜோதிடம், நிருக்தம், எண்கிற, ஆறு
சாஸ்திரங்களையும், மனு, அத்திரி, ஹாரீதர், விஷ்ணு,
ஆஞ்ஞியவல்க்கியர், உசனர், ஆங்கிரசர், யமர், ஆவஸ்தம்-
-ப, ஸம்வர்த்தர், காத்தியாயனர், பிரஹஸ்பதி, பரா-
-சர், வியாசர், சங்கரிதர், தக்ஷர், கௌதமர், வாசிஷ்டம்,

என்கிற பத்தொன்பது உபஸாஸ்த்திரங்களையும்
பௌஷியம், காருடம், லிங்கம், கூர்மம், வாமனம்,
வாரகம், மச்சியம், மார்க்கண்டேயம், பிரமாண்-
-டம், சைவம், நாரதம், பாகவதம், காந்தம், வை-
-ஷ்ணவம், பிரம்மம், பத்மம், பிரம்மகைவர்த்தம்,
ஆக்கினேயமென்கிற அஷ்டாதசபுராணங்களையும்
காமிகம் யோகசம், ஸித்தியம், காரணம், அஜிதம்,
தீபதம் முதலான இருபத்தெட்டு ஆகமங்களையும்
பரதபாரகம், பரம், சிவம், சக்தி, முதலான அறுபத்தி
நாலு கலைதியானங்களையும் இப்படி சொல்லப்பட்ட
கல்விகளுக்கு உததியே! ஸன்மார்க்கம் நிறைந்த
வேதத்துக்கும் தர்மத்துக்கும் வேதவிடே.

(குரையாவயர் — எ.து)

கங்குகளை காணமல் உருகிதுக்கிக்கும் எண்ண
நீர் கிருபைக்கு இலக்கப்பட்டவரல்லவா இனி
அடியாளிடத்தில் ஒன்றும்

(உரையாணிதுதாளைழகோ — எ-து.)

ஒருவார்த்தையாவது சொல்லாமலிருப்பது
உமக்கு பூஷணந்தானோ! எவுலகத்திலும் ஆதி-
-பத்தியம் நடத்தி அதற்கெல்லாம் நாயகத்து
வமுடையவரான நீர் அல்லவா. அவதாரிகை.

என்றிப்படி கௌசலை துக்கிக்கிறது கேட்டு
வசிட்டர் யேதாகிலுமென்று கேள்க்க கவு-
-சலை வர்த்தமானம் சொல்ல, அப்போது தசர-
தனுஞ்சொல்ல, வசிட்டர் கைகேயிடம் சொல்.

கொழுநன்றுஞ்சுமெனவுங்கொள்ளாதுலகமெ-
னவும்- பழிநின்றுயருமென்னவும்பாவமுளதா -
மெனவும்- ஒழிகின்றிலையன்றியுமொன்றுணர்கி-
ன்றிலையாணிநிமேல்- மொழிகின்றனவென்
னகேகிநீமொழியாய் முறையீதன்றே (14

(இ-ள்-) அதோவாராய் கைகேசிநீ இந்தவித
மானதுன்பத்துக்கு ஹேதுவாக செய்துவிட்டாயே
கல் என்றாலும் கணவன் புல்லென்றாலும் புருஷ-
ன் என்ற வேதவாக்கியத்தை ஒன்றும் பாரா-
மல் இந்தவிதம் கேட்டதினால் இது நிமித்தம்
கொழுநனாகிய உன் கணவனை இந்த மஹா-
ராஜாவு துஞ்சிமரணமடைந்து போவா-
ரென்றும் இந்தவார்த்தை உலகத்தாருக்கு
ஸம்மதப்படாதென்றும்

(பழிநின்றுயருமெனவும்-எ-து-) அவகீர்த்தி
யாகிய பழிவருமென்றும் இந்த அபவாதம் இந்த
ஜகமுள்ளவரையிலும் இருந்து நிலுமென்றும்
பாவமுண்டாகுமென்றும் இவ்வொன்றிலும்
இருந்துநீ

(ஒழிகின்றிலை-எ-து-) அப்படிவாதமாகிய
வாத்துயவங்களில் நின்று ஒழிந்தவளுமல்-
ல்ல அல்லாமல் ஒன்றும் நீ உணர்ந்து ஆலோ-
சனையை செய்கிறவளுமல்ல- ஆனதினால்
நான் இனி உன்னிடத்தில் இதற்குமேல்

(மொழிகின்றனவென்-எ-து) என்னசொ-
ல்லபோகிறேன் கைகேசி நீதான் சொல்லவேண்டும்
இது உனக்கு முறைமைதானே இது ஞாயமல்லவே கை-
-கேசி. கலி.

கண்ணோடாதே கணவனுயிரோடிடர்காணாதே
புண்ணோடொடுங்கனலோவிடமோ வென்னப்
புகல்வாய்- பெண்ணே தீயோ மாயாப்பேயோ கொ-
-டியாய் நீயிம்- மண்ணோடுண்ணோடெண்ணும்
வசையோவிதேயின்றே. (15)

(இ-ள்) வாராய் கைகேசி இந்தவிதமான
துன்பங்களை ஒன்றும் ஆலோசனையில்லாமல்
நீ வரத்துயவங்களை கேள்க்குமாயிருந்தால், ச-
-த்தியஸந்தனாகிய மஹாராஜாவான உன்கணவன்
உயிர்போக துன்பமடைவாரென்றும் நினையவில்லை.

(புண்ணோ[illegible] — எ-து) புண்ணாகியவிர-
-ணத்தில் வைக்கப்பட்ட தீயோ! விஷமோ?
என்னவென்று சொல்வாய்.

(பெண்ணே தீயோ — எ-து) நீ ஒருபெண்தானோ!
அதோ ஒரு நெருப்பாகிய தீய்க்கு ஸமானமானவளோ?
அல்லது கெடாத பிசாசு தானோ உன்கணவனை
இந்தமஹாராஜாவுக்கு நீ பகையாளியா? இந்த

(மண்ணோடுண்ணோடெண்ணும் — எ-து) பூமியில் உனக்கு
என்னவரும் இப்படி நிஷ்கண்டமாயி ராஜா சொல்
வதற்க்குமுன்னமே ஸ்ரீராமகுமாரனை ஆரண்ணியத்-
-துக்கு போகசொன்னயே அவன் அந்தக்ஷணமே புறப்பட்டு

விட்டான்- உனக்குமிஞ்சினபொல்லாதவர்கள்
இந்தராஜ்ஜியத்தில் ஒருவரையும் காணேன்-
அபவாதமே உனக்கு மிகுதியாகவரும் கேட்டயோ கை-
-கேசி.                    அவதாரிகை.

என்றிப்படிவசிட்டர் சொல்லகேட்டு கைகேசி
பேசாமலிருந்தாள் அப்போது தசரதன் தளர்ச்சியோடு
பாவிகைகேசியோடுசொல்-          கவி.

கண்டேனெஞ்சங்கனிவாய்க்கனிவாய் விட-
-நாநெடுநாள்- உண்டேனதனாலெனுயிரை
முதலோடுண்டாய்- பண்டேயெரிமுன்னுன்னை
ப்பாவிதேவியாகக்- கொண்டேனல்லேன்
வேறோர் கூற்றந் தேடிக்கொண்டேன்-(15)

(இ-ள்) வாராய்கைகேசி உனது கடினமான ஹிருதயத்தை தெரிந்தேன்- நான் உன்னங்கனி-ந்து தொண்டைப்பழம்போன்ற உன் அதரபா-னமாகிய விஷத்தைக் கண்டுமதிமயங்கி- தீர்க்ககாலமாக

(உண்டேனதனால் — எ-து) அருந்தி அனுபவித்-ததினால் எனுயிராகிய பிராணனை வேரோ-டே விழுங்கிவிட்டாயே கைகேசி

(பண்டேயெரிமுன் — எ-து.) பூர்வகாலத்தி-ல் நான் உன்னை அக்கினிஸாக்ஷியாயி பாபி யாகிய உன்னை பெண்சாதியாக

(கொண்டேனல்லேன் — எ-து) கொண்டு சு-வீகரித்தவனல்ல பிராணனை அபஹரிக்

-கும்பொருட்டாக இந்த உலகத்திலுள்ள
தேஹாதேஹிகளை வேர்படுத்தும் ஒருகூற்-
-றுவனான காலனைபோல் ஆகிலும் சம்பா
தித்துவிட்டது வாதாய் பாபி.

கவி.

விழிக்குங்கண்வேறில்லாவெங்கா -
-னைக்காண்முளையைச்- அழிக்கும்வி-
-னையாலேகச்சூழ்வாயென்னைப்பெழ்-
-வாய்- பழிக்கும் நாணாய் மாணைப்பாவி
-யினியென்பலவுண்- இழுத்தின்னு-
-ண்மகற்கு க்காப்பின்னை மின்றே-(1)

(இ-ள்-) பாவிஎன்மகனை காட்டு-
-க்கு போகசொல்லி அனுப்பிவிட்டாயா
அவனும் போனானே! என்கண்ணான ஸ்ரீரா-
-ம குமாரனல்லாமல் விழித்து பார்ப்ப-
-தற்க்கு வேறொருவருமில்லாதபடிக்கு
மற்றொருபேரும் முகதர்சனஞ்செய்யாத-
-படிக்குள்ளது குமாரனை
(அழிக்கும் வினையா — எ-து)
துராலோசனைசெய்கையினால் உபாயம்
செய்து விட்டாயே பாபி அதனால் என்னை
யும் பிழைத்தாய்-
(பழிக்கும் நாணே — எ-து) பழியாகிய
அபவாதத்திற்க்கும் வெட்க்கமடையா-
-மல் பாபி இனி உன்னிடத்தில் பலவிதம்

மாண்ண பயன் உன்

(கழுத்தின் நாணவன்—எ.து) உன்மக-னாகிய பரதனுக்கு பட்டங்கட்டுகிற போது அவனுக்கு கங்கணங்கட்டவே-ணுமே அதற்க்கு உன் தாலிக்கயற்றை த்தான் கட்ட வேண்டி வரும் பாவி-

வாரீர் குருவே இந்தவிதமான அங்க-லாய்ப்புகளையும் அலங்கோலங்களையு மெல்லாங் கண்டும் கொஞ்சமாவும் இ-ரங்காமலிருக்கிற இந்த பாவியாகிய கைகேகி எனக்கு பத்னியுமல்ல. இந்த ராஜ்ஜியம் ஆளவருகிற பரதன் எனக்கு பிள்ளையுமல்ல அவன் என்னுடைய உரிமையான அபரகர்ம்மங்களுக்கும் பாத்திரவானுமல்ல கேட்டீரோ குருவே.

வாராய் கௌசலையே என் கண்மணி போன்ற ராமகுமாரன் என்னை கண்டு கொள்ளாமல் போனவன் உன்னை-யுங் காணவில்லையோ எனது ராம குமாரனைப்பிரிந்து நான் வாழமாட்-டேன். ஐயயோ வாராய் மகனே நீ எப்போ பட்டவனென்றில்-

கவி.

படைமாணரசைப்பல காற்பழுவாய் மழுவாலெறிவான்- மிடைமாவலிதா-

- னையாண் வில்லாலடுமாவல்லாய்-
உடைமாமகுடம் புனையென்றுரையாவட
னேகொடியேன்- சுடைமாமகுடம் புனைய
த்தந்தேனந்தோஅந்தோ. (1௦)

(இ-ள்-) வாராய்மகனே வாராய் ராமகு-
-மாரா? என்னுடையசரீரம் தீருகையுங்கிபூ-
-மியில் விழுந்து கிடக்கிறேன். இந்த
கண்ணீரையாகிலும் வாரி எனக்கு உ-
-ண்ணும் உதகமாயிவிட்டு உன் கடனை
கழித்து நீ காட்டுக்கு போகாயா? அப்-
-பாமகனே! படையென்னும் ஆயுதபாணி-
-களான க்ஷத்ரியவம்ச ராஜாக்களை மு-
-வேழு இருபத்தொரு தலைமுறை கிவேரு-
-த்துவிட்ட மழுவாளியாகிய பரசுரா-
-மனைஜயித்த

(மிடைமாவலிதான-எ-து) இருவ-
-பத்துக்கொப்பான வலிமையையு-
-டைய அந்தபரசுராமனுடைய வி-
-ல்லோடுகூடி அடிமைப்படுத்தி கீழா-
-க்கிய வாராய்மகனே-

(உடைமாமகுடம்-எ-து) உனக்குரி-
-யதான நவரத்ன கசிதமான ராஜ
கிரீடத்தை உனக்குமுடிசூட்டுகிறேன்
என்றுசொற்வதற்க்குமுன்னே பாபி
யாகியநான்

(சுடைமாமகுடம்-எ-து) இந்தபாபி

-யாகிய கைகேயி நிமித்தம் சடைமுடி
தரிக்கும்படி சொன்னேன் ஐயனோ வாராய்
ராமகுமாரா- கவி.

கருத்தாயுருவம் மனமுங் கண்ணுங் கை
யுஞ்செய்ய - பொறுத்தாய் பொறையேயி
றைவன் புரமுன்றெரித்த போர்வில்- இறுத்
தாய் தமியேனென்றனையிம்மைப்
பிழையே- வெறுத்தாயினி நான் வாழ
ள் வேண்டேன் வேண்டேன் அந்தோ (19)

(இ-ள்-) உன் உருவமானது கருத்ததி-
-ல் மனமும் கறுப்படைந்தாய் மகனே
இனி உன்னைப்பிரிந்து வாழ்கிறவனுமல்ல

(பொறுத்தாய் — எ-து) பொறுமையா-
-கிய க்ஷமைக்கு இருப்பிடமே! திரிபுரா-
-திகளை தஹனஞ்செய்த சாம்பசிவ
மூர்த்தியினுடைய மற்றோர்க்கும் எடு-
-க்க ஸாத்தியமல்லாத வில்லை

(இறுத்தாய் — எ-து) முறித்து கீர்த்-
-தியை அடைந்து ஜனகராஜகுமாரியை
பாணிக்கிரஹணஞ்செய்துகொண்டு
அவள் கரத்தை பிடித்து போக கண்டு
கொண்டுண்டான என் கண்ணினை
இந்த வார்த்தக்கிய காலத்தில்

(வெறுத்தாயினி — எ-து)
வெறுத்து உபேக்ஷிக்க செய்துவிடுகிறாயோ?

உன்னைப்பிரிகிறதற்கு உலகம் ஸம்-
-மதித்தாலும் தேவர்கள் சம்மதித்தாலும்
என்னுடைய கீர்த்தியும் என்னுயிருமான
ஹேராமா! உன்னைப் பெற்ற அருமை
நானறிவேன் ஆனதினால் இனி நான்
உன்னைப்பிரிந்து வரான் நான் வீணாக
வேண்டேன் வேண்டேன் நான் ஸம்மதி-
-யேன் பிழைக்கேன். ராஜ்ஜியமும் இ-
-ந்த ராஜஸ்ரீகளும் திரவியம் முதலான
எல்லா ஐசுவரியங்களையும் கொள்வியா-
கிய கைகேயிக்கு கொடுத்து கீர்த்தி
ஸம்பாதித்த பிரதாபம் என்னுடைய
பிராணனை வாங்குகின்றதே மகனே

கவி-

பொன்னின் முன்னம் ஒளிரும் பொன்னே
புகழின் புகழே- மின்னின் மின்னும் வரிவிற்குமரா
மெய்யின் மெய்யே- என்னின் முன்னம் வனம் நீய
டைதற்கு எளியேனல்லேன்- உன்னின் முன்னம்
புகுவேன் உயர் வானகம் யானின்றே. (௨௧)

(இ-ள்) பொன்னாகிய தங்கத்தைப்பார்க்கிலும்
பிரகாசமுள்ள தங்கமயமே. புகழான மாட்கிமை
க்கு கீர்த்தியையுடையவனே.

(மின்னின் மின்னும் — எ-து) மின்னி பிரகாசி-
-க்காநின்ற இடிமின்னலைக்காள் சோபிக்கப்பட்ட
வரிந்து கட்டுறப்போடு கூடிய கோதண்டதாரியா-
-னகுமாரா ஸத்தியத்திற்கு ஸத்தியசொரூபனே.

(என்னின் முன்னம் - எ-து) நான் சாகாமல் உன்னை
விட்டு பிரிந்திருந்தேனேயானால் இருந்தகைகேகி-
-யைபோல நானும் பாபியாய் போவேன். ஆபரண
-ங்களும் கிரீடமும் ரத்ன சிங்காஸனமும் முத்துக்-
-குடையும் கொடுத்து கண்ணாரல் பார்த்த விரு-
-ந்த நான் நீ மரவுரியும் மான்தோலுமாக போவ-
-தை காணாமல் போய் விடுகிறது நல்லதல்லவா.

(உன்னின் முன்னம் — எ-து) உனக்கு முன்னமாக
வானத்தையென்னும் தேவலோகம் யான் சென்றுசே-
-ருவேன் என் கண்ணே கண்மணியே ராமராமா.

தசரதராஜனே நீ துக்கமடையவேண்டாம்
வசிட்ட முனியாகிய நான் ராமகுமாரனிடத்தில்
போயி அவனுக்கு தைரியஞ் சொல்லி ஆரண்ணி
யத்துக்கு போகவொட்டாமல் நிறுத்துகிறேன்-

அப்படியே ராமகுமாரனை அழைத்துக்கொண்டு
வருவீர் குருவே-

என்றிப்படி சொல்லி துக்கிக்கிற தசரதனை
கவுசலை தேற்றி சுவாமி இவ்வசனப்பட வேண்டாம்
ராமன் வனத்துக்கு போகமாட்டானென்று
பலவிதமான உறுதிகள் சொல்ல தசரதன் ராம
ன் போகாமலிருக்கவும் மாட்டான் நான் இறக்கா-
-மலிருக்கவும் மாட்டேன் அதற்கு பூர்வத்திலே மு-
-னிசாபமுண்டென்று சொல்லி மூர்ச்சையடைய. அ-
-ப்போது கவுசலை வியசனத்தோடு தசரதன் கால்
வருட்டியிருக்கவும் இந்த சங்கதி தெரிந்தலக்ஷ

ஜனங்களும் மயக்கமுற்றிருக்கவும் அப்போது இலட்சுமணன் பரதனுக்கு ராஜ்ஜியம் கொ-டுத்தவரை வேரோடறுப்பேனென்று கவசம-ணிந்து மூன்றுலகத்தையும் க்ஷணத்தில் சா-ம்பலாக்கும் கோபத்தோடுகூடி பிரளய கால-க்கினிருத்திரன்போல சீறிவில்ல நாணொ-லிசெய்து மனதில் சொல். கவி.

சிங்கக்குருளைக்கிடு தீஞ்சுவை உணவைநாயின்-
வெங்கட் குருங்குட்டியை ஊட்டவிரும்பினளே-
நங்கைக்கறிவின் திறம் நன்றிதுநன்றிதென்று-
கங்கைக்கிறைவன் கடக்கையுடைத்துருக்கான்
[வேறொருபாடம்] கங்கைக்கிறையோனையுஞ்
சொல்லுவன் காண்டியின்றே (21)

(இ-ள்-) வரவராய் மனசே இந்தகைகேசி-யானவள் பிதாவினிடத்தில் நிர்ப்பந்தமாக சொல்லி தன்மைந்தனுக்குவேண்டின அபிஷேக-மானதை முடக்கி தன் புத்திரனுக்காக வாங்கி வைத்த ராஜரீகம் எதொருவிதமாகிய விசி-த்திரமென்று ஆலோசிக்கிறபோது

(சிங்கக்குருளை-எ-து-) மிருகராஜனை சிங்கம் பிறனைப்போகுமாயிருந்தாலும் மற்றொருவரால் பிடிக்காநின்ற இரையாவது மற்றுபிணங்களையா-வது பஜிக்காமல் மத்தகஜத்தினுடைய மஸ்தகமா-னதை அடித்துபிளர்ந்து அதிலுண்டான தசைச்சோ-றனைத் தனது சிசுவானவனுக்கும் பக்ஷிக்குமாக கொடுத்துஅனந்தரம் தான் சாப்பிடும்படியானவித்தவிர்த்தி

- யோடு கூடின ஒருவனே சிங்கம் அப்பேர்ப்பட்ட சிங்-
- கம்போலுண்டான சக்கரவர்த்தியானவர் தன் க்ஷேம
- ந்தகுமாரனை சிங்கக்குட்டியானதுக்கு கொடுக்-
- காதன்ற அபிகாம்மியமாகியும் அனுபோக்கியமாகிய
ராஜாங்கத்தை அமேத்திய பக்ஷணம் செய்யாதென்ற
சுவானனை

(வெங்கட் கடுங்குட்டியை — எ-து) வெவ்விதான கண்கினையுடைய நாய்குட்டிக்கு உண்ண பக்ஷிக்க இச்சித்ததுபோலவல்லவோ கைகேசியினுடைய மனோ-
-ண்ணம் வாதாய் மனசே அப்படியே இச்சித்த

(நங்கைக்கறிவின்றிறம் - எ-து) நங்கையென்னும் மகளீர்களில் சிறந்தவளான கைகேசியினுடைய புத்தியின் வைபவம் அதிவிசித்ரமல்லவோ மனசே அந்த புத்திமதியை கேட்டு சுவாமியானவருடைய அ-
- பிஷேகத்தைமுடக்காதன்ற

(அங்கைக்கிறை - எ-து) சாயூர்நதியென்னும் கங்காஜலத்தினல் சூழாதன்ற இந்த ராஜ்ஜியத்துக்-
- கதிகாரியான யாதொருவனைன்றுவந்தாலும் என்னால் கொல்லப்படும் வாதாய் மனசே.

கவி.

புவிப்பாவைபாரங்கெடப்போர் உவந்தோ-
- ரையெல்லாம்- அவிப்பானும் அவித்தவர் ஆக்க
யை அண்டம்முற்றக் - குவிப்பானும் எனக்கொரு
கோவினைக்கொற்றமௌலி- கவிப்பானும்
நின்றேன் இதுகாக்குனர் காமின் இன்றே ௪௨)

(இ-ள்.) புவியாகிய இந்தபுண்ணியபூமியாயும்

சொர்க்கதுல்லியமாயும் சோபிக்கப்பட்ட அயோத்-
-தியாநகரத்துக்கு இச்சொல்லாநின்ற அதர்மிகளான
பேர்களே பாரமாகிலும்- அந்தபாரமானது தீர அவ-
-ர்களை ஸம்ஹாரஞ்செய்து அதை துடர்ந்து என்பே-
-ரில் போர் செய்ய வரப்பட்ட பேர்களையெல்லாம்

(அவிப்பானும்-எ.து.) அவித்து கெடுத்து அ-
வர்களுடைய ஆல்மாகுதியானதை செய்து மர-
-ணமடையாநின்ற பேர்களினுடைய ஜடத்தை
பிரம்மாண்டபரிதிவரைக்கும்

(குவிப்பானுமெனக்கொரு-எ.து.) குவித்து
கூட்டமாககுவியல்செய்து என் தமையனு-
-வருக்கு ராஜாங்கம் செலுத்தாநின்ற அதி-
-காரமான மௌலியென்னும் கிரீடத்தை இதே
சுபமுகூர்த்தத்தில்

(கவிப்பானுநின்றேன்-எ.து.) கவித்து தரி-
-ப்பிக்க ஒருங்கினவனாகிலும் இதற்கு தட-
-ஸ்த்தமாநின்ற பேர்கள் யாதொரு பேர்களை-
-ன்றுவந்தாலும் என் சமீபத்தில் வரட்டும்
வாராய் மனசே.

கவி.

விண்ணாட்டவர் மண்ணவர் விஞ்சையர்
நாகர் மற்றும்- எண்ணாட்டவர் யாவரும் நிற்க
ஓர்மூவராகி- மண்ணாட்டுனர் காக்குனர் வீட்டுனர்
வந்தபோதும். பெண்ணாட்டம் ஒட்டேன் இனிபேர்
உலகத்திநின்றே. (23)

சொர்க்கத்தில் அதிவசிக்காநின்ற விண்ணா-
-ட்டவர்களென்ற மூப்ப-

-த்திமுக்கோடி தேவர்கள் மண்ணவரான இந்த
பூலோகவாசிகளானபேர்கள் விஞ்சையராய
ய வித்தியாதரர்கள் அதோலோகவாசிகளான நா-
-க ராஜாக்கள் அதும் கூடாமல்

(எண்ணட்டவர் — எ-து) அஷ்ட திக்பாலகர்களான இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானனென்று சொல்லப்பட்ட பேர்களும் மிகுண்டான எல்லாபேர்களும் அல்லாமல் ஹரிஹர பிரமமாதிகளான திரிமூர்த்திகளென்னும்

(மண்ணட்டுனர் — எ-து) சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரமென்ற கிர்த்தியங்களுக்கு பல-சாலிகளையிவரப்பட்டபேர்கள்வந்து என்னி-டம் போர்செய்யவந்தாலும்

(பெண்ணட்டமொட்டேன்-எ-து) பெண்-ணாட்டமென்னும் பெண்ணினுடைய சுதந்-திரமாகிய நடவடிக்கை இந்தபெருலகமாகிய விசாலமான உலகத்தில் நடத்தி ஸஜ்ஜனங்-களுக்கு காண அவசரங்கொடுக்க மா-ட்டேன் வாராய்மனசே. கவி.

மெய்யைச்சிதைவித்து நின்மெய்முறை
நீத்தநெஞ்சம் மையிற்கரியாள் எதிர்
நின்னநன் மௌலி குட்டல்-செய்யக்கரு-
-தித்தடை செய்குனர் தேவதேனும்-துய-
-யைச்சுடு வெங்கனலிற்சுடுவான் துணி-
-ந்தேன்.

(இ-ள்) சரணம் சரணம் நமைய உலகத்தில் ஸத்-
-தியத்தை கெடுத்து பவித்திரமாகிய நமது வம்-
-சத்தினுடைய ஸன்மார்க்கத்தை நசிப்பித்து மு-
-றையான தீழ்வழக்கங்களை நிக்கரித்து.

(மையிற் கரியான்—எ-து) மனமானது அஞ்ஞனத்தைபோல் கறுத்து காடிண்ணியமான இருதயத்தோடுகூடிய துஷ்டயாகிய கைகே-
-சியின் கண்ணுக்கு நேராக உமக்கு கிரீடம் தரிப்பித்து

(செய்யத்தகுந்தி—எ-து) நிறவேற்றும்படியாக செய்யாநன்ற விஷயத்தை தடஸ்த-
-வரதிகளானபேர்களாக தேவர்கள் எதிர்-
-த்து வருமாயிருந்தாலும் அவர்களையெல்லாம் ஸம்ஹரிக்க

(துய்யைச்சுடுவெங்கனை—எ-து) துய்மையென்னும் நெருங்கின கரியை தஹிப்பிக்கும் நெருப்பைபோல் திண்ணைதயேறின பாணங்களினால் நாசஞ்செய்யு-
-ம்படி உத்தியமித்த ஒருவன் கேட்டநோ அண்ணா.

கவி.

வலக்கார்முகம் என்கையதாக அவ்வானு
ளோரும்-விலக்கார் அவர்வந்து விலக்கினு
மென்னைவாளிக்-கிலக்காஎறிவித்துல
கேழினோடேழுமன்னர் - குலக்காவலுமின்
றுணக்கியான்றரக்கோடியின்றே (25)

(இ-ள்) பலம்பொருந்தின கோதண்டமான

வில்லு அடியேனுடைய கரத்திலிருக்கிற
காலத்தில் அந்த தேவலோகத்திலுள்ளபே-
-ர்களென்று வந்தாலும் வந்து

(விலக்காரவர் — எ-து) தடஸ்த்தப்ப
டுத்தமாட்டார்கள் அதுவாபத்திமோச-
-மாக அவர்கள்தான் வந்து தடஸ்த்த
ப்படுத்துமாயிருந்தாலும் உமது தம்பி-
-யாகிய அடியேனுடைய கரத்திலுண்டா-
-ன ஸாயகங்களுக்கு

(இலக்காயெறிவித்து — எ-து) இலக்க-
மென்னும் ஒருலக்ஷியமாக்கி தெறிப்பித்து
ஈரேழுபதிநாலு உலகங்களிலுள்ள ராஜா-
-க்களுக்கும்

(இலக்காவலும் — எ-து) ராஜாக்க-
-ளென்றுண்டான வம்சத்தார்களுக்கும்
நீரே சக்கரவர்த்தியென்றுண்டான ஆ-
-திபத்தியத்தை உமக்கு நிச்சயமாயும்
அடியேன் கொடுத்துவிடுவேன் கேட்டீ
ரோ அண்ணா-

வராய் தம்பி உன் கோபம் சரியல்ல. அ-
-வஸரோசிதமல்லாமலிருக்கிற கோபத்தை
விட்டுவிடுவாய் இந்த அபிஷேகம் மட
ங்கின விஷயம் ஒருபேர்களுடையும்
பிழைகாரணமல்ல கேளு- கவி-
நதியின்பிழையன்று நறும்புனலின்மை
யற்றே- பதியின் பிழையன்று பயந்து

நமைபுரந்தாள்- மதியின் பிழையன்று
மகன் பிழையன்று மைந்த- விதியின் பி-
-ழை நீயிதற்கென்னை வெகுண்டதென்றா
(26)
(இ-ள்.) தம்பி லட்சுமணா நீரில்லா
மல் வரண்டுபோவது நதியின் பிழையல்ல
அது காலபேதமாகிலும் அப்படியே
(பதியின் பிழை — எ-து) பட்டாபிஷேக
த்துக்கு விக்கினம் வந்தது பதியான பி-
-தாவின் [illegible] அல்ல நம்மை பெற்று வ-
-ளர்மை செய்யப்பட்ட கைகேகிமாதாவின்
(மதியின் பிழை — எ-து) புத்தியின்
பிழையான அபராதத்தாலோ வென்றல்
அதுவுமல்ல- அவர் மகனாகிய என் தம்பி பரதன்
இற்றவொளியோவென்றல் அதுவுமல்ல-
லை தம்பிலட்சுமணா நம்முடைய
(விதியின் பிழை — எ-து)
"அலம் வித்தாமோதனை கேதுப்பியாம்
அலங்கினியாம் கமலாசனன் ணியா!"
என்றபிரமனைபிரகாரம் நாம் அனு-
-பவிக்கவேண்டின விதியைபரீத்திய-
-மாகிலும் அதை ஒருபேர்களுக்கும் தடு-
-க்கமுடியாது இதை நினைத்தும் நீங்கத்த
விஷயத்தில் எதற்கு வேண்டி கோ-
-பிக்கிறாய் கோபிக்ககூடாது கேட்ட
யோ தம்பி

என்றிப்படி தமபிவிதிவசமாகிலும் ஒரு-
-வன் பிழையல்லவென்று சொல்லியும்
கோபடாருமல்லட்சுமணன்சொல்

கவி-

உதிக்கும் உலையுள் உறு தீயென ஊதை பொங்க
கொதிக்கும்மனம் எங்ஙனம் ஆற்றுவென்
கோளிழைத்தான்- மதிக்குமதியாய் மு-
-தல் வானவர்க்கும் வலீதாம்- விதிக்கும்
விதியாகுமென் வில்தொழில் காண்டியின்றே (21.)

(இ-ள்.) சாதனம் தமையா கொல்லனு-
-டைய உலையிலிருந்து எழும்பிவருகிற அ-
-க்கினியைபோல் உதித்து பொங்காநின்ற
ஊதையாகிய உசுவாஸதிஸ்வாசங்கள்
எழும்பிவருகிற கோபமுடையமனசு
உம்முடை புரோபாகத்தில் இந்த அவஸ்-
-த்தைதயை கண்டு எப்படியாறுவது?

(கொதிக்கும் — எ-து)

கொதித்து தபிக்காநின்ற என்மனதை
தபிப்பிக்கதினைந்தாலும் எங்ஙனம்
பொறுக்கசெய்வேன் அபராதியானகை
கேகியினுடைய அறம்பாவத்தின்

(மதிக்கும்மதியாய் — எ.து.) மதியான
துர்க்குணத்திற்கு பிரதிநோதமாக
அவள் புத்தியை கலக்கி நெறிநெறவிதி
ஞ்சாதிகளான திருமூர்த்திகளுக்கும் தேவர்-

-களுக்கும் கடக்க ஒண்ணாத

(விதிக்கும் விதி — எ-து.) சிருஷ்டிகர்த்தாவா-
-கிய பிரம்மதேவருடைய விதிக்கும் விதியாகும்
என்னுடைய வில்லெடுத்த பராக்கிரமம் அனு-
-பவமாகச்செய்வதை காணவேண்டுமே தமையா.

தம்பி லட்சுமணா நீ. கவி.

ஆன்றே உணர்வின்றி உரைத்தனையாசையாலே.
தோன்றுநெறி வாழ்துணைத்தம்பியைப்போர்தொ-
லைத்தோ. சான்றோர் புகழுந்தவத்தாதையைவா-
-கை கொண்டோ. ஏன்றனை வென்றேவினியி-
க்கதந்தீர்வதின்றே. ௨௪

(இ-ள்.) ஆழமான ஆலோசனையில்லாமல் உரைத்து
சொல்லக்கூடியது. வரங்கொடுத்தவர் தகப்பனார்.
வரம்வாங்கிகொண்டவள் தாயார். ராஜ்ஜியம்
ஆளுகிறவன் என் தம்பி. நமக்குக்கிடைத்தது
தவமானால் இதைப்பார்க்கிலும் மேலான நலம்
என்னிருக்கிறது. நீ சொல்வதெல்லாம் என் பேரி-
லுள்ள ஆசையினாலாகிலும். (தோன்றுநெறி — எ-து.)
எவ்விதமானாலும் என்னை பெற்றுவளர்த்தவர்
சொன்னபேச்சை தட்டி ராஜரீகஞ்செய்கிறதென-
-க்குயுக்தமல்ல. என்பேச்சை கேள்குமானால்
உனக்கென்ன குறையிருக்கின்றது இந்தப-
-ட்டணத்தில் நடக்கும் காரியங்கள் ஒன்றுந்தெ-
-ரியாமல் விதூரமாய் கேகயபுரத்தில் அதிவ-
-சிக்காநின்ற மிகவும் அன்பனான தம்பி.



LAKSMANA

பரதனிடம் போர்செய்து ஜயித்தும்

(சான்றோர்புகழும் — எ-து-) பெரியோர்களான ஸஜ்ஜனங்களால் புகழத்தக்க தபஸில் மிகுதியை யுடைய தகப்பனை ஜயஞ்செய்தும்

(என்றுனை வென்றே — எ-து) என்று பெற்றதா-யை கொன்றுமல்லவா இந்தகோபம் தணியவே ண்டியிருக்கின்றது வாராய் தம்பி·

அந்தவிதமாக நீர் அருளிச்செய்யுமாயிருந்தா-ல் உம்மோடுகூடி அடியேனுங்காட்டுக்கு வருவே-ன் தமையா·

நீயும் என்னோடுகூடி வனத்திற்கு வருமா-யிருந்தால் உன்னை பெற்றெடுத்த சுமித்திரை மாதாவின் அனுமதியையும் பெற்று போவோம் தம்பி

சரணம் தாயே அடியேனும் தமையனோடு சேர்-ந்து வனத்துக்கு போகிற ஒருவனாகிலும் வன-வாசம் சுகமாகவர அடியேனையும் அனுக்கிரி-க்கவேணுமே தாயே·

வாராய் மகனே லட்சுமணா கேளு· கவி·

ஆகாததன்றுனக்கவ்வனமிவ்வயோத்தி·
மாகாதலிராமனம்மன்னவன்வையமீந்தும்
போகாவுயிர்த்தாயர் நம்பூங்குழல்சீதையெ-
-ன்றே· ஏகாயினியிவ்வயினிற்றலுமேதமாமே· (2[illegible])

(இ-ள்-) நீராமனோடுகூடி வனவாசம்போ-குமாயிருந்தால் உனக்குச்சேர்க்கையல்லாத காரியமல்லவே· ஸ்ரீராமன் போகிற ஆரண்ணியம் உனக்கு அயோத்தி·

(மாகாதலிராமன் — எ-து-) வாற்சல்லியநிதியாகிய ராமனை பிதாவாகநினையல்வேண்டும் உலகங்களை-டுத்தும் உயிர்போகாமல் வைத்துகொண்டிருக்கிற தாய்மார்களையெங்களைபோலவே-

(பூங்குழல்சீதை — எ-து-) புஷ்பங்களொழு-லான கூந்தலாபாரத்தில் அணியப்பட்ட சீதையா-கிலுமென்று நினைந்து

(ஏகாயினியெண்வயில்-எ-து-) ஏகிராமனுடனுடகூ-டி வனவாசம்போய்கொள்வாய் இனி இங்கே யிருந்தாலும் குற்றம் வரும் ஆனதினால் இன்னும் சொல்லுகிறேன் கேளு- கவி-

பின்னும்பகர்வேன் மகனேயிவன்பின்செல் தம்பி.
என்னும்படியன்றடியாரினில் ஏவல்செய்தி.
மன்னும் நகர்க்கேயிவன்வந்திடின் வாவதன்றேல்
முன்னம்முடி நீயிது புத்திமொழிந்துநின்றேன்(௪௦)

(இ-ள்.) இன்னும் உன்னிடத்தில் ஒருவார்த்தைகூடி சொல்லுகிறேன் மகனேலட்சுமணா: நீ இவன் பிறகனே போகிறபோது தம்பி.

(என்னும்படி — எ-து-) என்கிறதைபாவிக்காமல் அடிமையைபோலவும் தாஸதாஸர்களைபோலவும் ஏவல்பணிவிடைகளைசெய்தும்

(மன்னும் நகர்க்கே— எ-து-) மாடமாளிகை கூட கோபுரங்களோடுகூடிய இந்தநகரத்துக்கு ராமகு-மாரன் வருகிறபோது கூடவரக்கடவாய்

(முன்னம்முடி நீ—) போனவிடத்தில் ஏதாவ-து ஆபத்து வருமாயிருந்தால் முன்னே உன் பிராணனை

கொடுத்துவிடு என்ற புத்திமொழியை சொல்லு-
-கிறேன். வனவாசம் சுகமாக வர உங்களை மேன்
மேலும் அனுக்கிரகித்துக்கொண்டேன் மகனே.

அவதாரிகை.

என்றிப்படி சுமித்திரை புத்திசொல்ல அப்போது
ராமனும் தம்பியும் சுமித்திரையை வணங்கி.
அவிடம் விட்டு வருகிறதுகண்டு ராஜியவாசிகள்
யெல்லாம் முகத்தில் அறைந்துகொண்டு அழவும்
அப்போதுவசிட்டர் ராமனை அழைத்து வருகிறே-
-னென்று தசரதனிடத்தில் சொல்லி ராமனைக்கண்-
-டு வசிட்டர்சொல். கவி.

விற்றடந்தாமரைச்செங்கண்வீரனே
உற்றடைந்தையநீயொருவியோங்கிய.
கற்றடங்கோணுதியெண்ணிற்கண்ணகள்
மற்றடந்தாணயான்வாழ்கிலாளரோ. (௩௰)

(இ-ள்.) உலகத்திலே ஸகலபாக்கியங்களையும்
கொடுக்கிறவனே ராமகுமாரா. இப்படி உனக்கு வினை
யினால் மரவுரிதரித்தால் விதிகர்த்தாவாகிய பிரம-
-மாவினாலும் அந்த உனக்கு வினையை தள்ளகூடாது.
வில்லான கோதண்டத்தைப்போல் வளைந்த
புருவங்களையுடையவனும் தாமரையிதழ்போன்ற க-
-ண்களையுமுடைய வில்லாளிவீரனாகிய ஹே
ராமகுமாரா.

(உற்றடைந்தைய நீ-எ-து) இந்தபாபியாகிய
கைகேயி என்னவெல்லாஞ்செய்தாலும் அதுவருமா-

என்ன வினையினாலேயோ - அல்லது தேவர்களுடைய
ரஹஸ்யமான யோசனையோ இப்படி வந்தது - ராம
குமாரா நீ ஆரண்ணியத்துக்கு போனால் அவ்விடத்திலுள்ள

(கூறூடங் காணுதி - எ-து.) விசாலமான
பர்வதங்களும், விருக்ஷங்களும், வனசமிருகங்-
-களினாலும் நிபிடீகரித்த இடத்துக்கு நீ போகவேயிரு-
-ந்தால்.

(மற்றுடந்தாணையான் - எ-து.) ரதகஜதுரகபதா-
திகளான சைன்னிய சன்னாஹங்களொடு கூடின
உன் பிதாவு வாழாமல் பிராணனை விட்டுவிடு
வார் ஆதலால் நீ ஆரண்ணியத்துக்கு போகவே-
-ண்டாம் கேட்டையோ ராகவா.

சரணம் குருவே. கவி.

அன்னவன் பணிதலையேந்தியாற்றுதல்
என்னது கடன் அவன் இடரை நீக்குதல்
நின்னது கடன் இது நெறியும் என்றனன்
பன்னரும் சிறப்பினுய் பாதம் போற்றினேன்

(இ-ள்.) சரணம் குருநாதரே அடியேனு
டைய தாயார் இந்தவரமிப்படியாக கேட்டு
க்கொள்ள தகப்பனார் அந்தப்படியே கொடுக்க
அடியேன் மாதுரு பிதுர் வாக்கிய பரிபால
-னஞ்செய்யவேணுமென்று சிரசாவகி-
-த்துக்கொண்டு அவர் பேச்சை அந்தப்படி-
-யே நடந்துகொள்கிறது

(என்னது கடன் - எ-து.) என்னுடைய
கடமையாகிலும் தருமநீதியுமதுவே சரி-

-யாகிலும் பூர்வத்தில் மஹாராஜாவாகிய பி-
-தாவு அசுராளை ஜயம்பண்ணினபோது இப்-
-படி இரண்டுவரம் கொடுக்கிறேனென்றுசொ-
-ன்னவரல்லவா- அதை அனுஸரித்து அடியேன்
வெளியே புறப்படுகைக்கு சகலஸாஸ்த்ரி-
-ரங்களையும் அறிந்த தாங்கள் இதை தடுத்து
தர்ம்மத்துக்கு தப்புவர சொல்லலாமா- ஆ-
-கையினால் பிதாவானவருடைய துன்பத்-
-தை நீக்குதல்

(ரிணந்துகடனது - எ-து-) பெருந்தன்மை
யுடைய உம்முடைய கடமையுமதுவாகிலும்
தருமமுமதுவாகிலும்-

(பன்னருஞ்சிறப்பினுன் - எ-து) பலரு
ஞ்சிறப்பித்து சொல்லத்தகுந்த உம்மு-
-டையபாதாரவிந்தத்தில் நமஸ்-
-க்காரஞ்செய்து கொண்டேன் வனவா-
-சம் சுகமாயிவர அடியேனை அனுக்கிரி-
-ஹிக்கவேணுமே குருவே

அதோவாராய்லட்சுமணஜானகி-
-யின் சமீபத்திலும் சென்று இந்தசே-
-தியை சொல்லிவருகிறேன் தம்பி-

அவதாரிகை.

இப்படிராமன்சொல்லவகிட்டார்யினி
இவன் நில்லானென்று கருதி ஒன்றும்பேசா
மல்போனார். அப்போது ராய்மாரும்முனி-
-வருமனங்கள் ராமனைவிட்டுப்பிரிகிறதி-

-ல்லை என்று பின்துடர்ந்துவர சீதை கொ-
-ண்டு திருத்திக்கட்டு நிற்கிறபோது மா-
-மிமார் சீதையை கட்டிக்கொண்டு அ-
-ழுவும் அப்போது சீதை ராமனுடைய எ-
ண்ணவிசேஷம் நடந்ததென அப்போது
ராமன் சொல் கவி-

பொருவில்எம்பிபுவிபுரப்பான்புகல்
இருவர்ஆணையும் ஏந்தினென் இன்றுபோய்
கருவிமாமழைகற்கடங்கண்டுநான்
வருவன்ஈண்டு வருந்தலை நீயின்றே(33)

(இ-ள்.) அதோவாராய் ஜானகீ இவ்வுல-
-கத்தில் ஒருவரும் நிகரில்லாத என் தம்பி-
-யாகிய பரதன் இந்த பூமியாகிய அயோத்-
-தியை அரசாட்சி செய்வான் அந்ததாய்
தந்தையாகிய

(இருவராணையும் — எ-து.) இருவரென்-
-னும் இரண்டுபேர்களுடைய ஆஞ்ஞையயே-
-யும் ஏந்தி ஸிரசாவஹித்து இன்றையதி-
-னம் போய்

(கருவிமாமழை — எ-து.) மழைக்கு துணை
க்காரணமாகிய மலைவாரங்களைக்கண்டு

(வருவனீண்டு — எ-து.) நான் பதினாலு
வருஷங் கழிந்து வருவேன் அதுபரியந்-
-தம் அங்கலாய்க்காமல் இருக்கவேண்டு-
-மே ஜானகீ- கவி-

நாயகாவனம் நண்ணவுற்றுயென்றும்
மேயமண்ணிழந்தாயென்றும் விம்மலேன்
நீவருந்துவெ நீங்குவென் யான்என்ற
தீயவெஞ்சொல்செவிசுட தேம்பினேன்(34)

(இ-ள்-) சரணம் கணவா சுவாமீ தேவரீர் வனத்தி-
-ற்கு போகிறீரென்றும் உமது பாக்கியங்களான
ராஜ்ரீகமும் பதவிகளும் உமது தம்பியான ப-
-ரதான்வாருக்கு விட்டுகொடுக்கலாமென்றும்
கைகேசிமாதாவின் வரத்துயவங்கள் ஹேது-
-கமாக பதிநாலுசம்வல்சரம் முடியுகிற மட்டும்
வனவாசம் நிர்விக்கினமாக நிறவேற்றலா-
மென்றும் பிரதிஞ்யாபத்தஞய் ஸர்வசு-
ங்க பரித்தியாகியாய் மஞ்ஞசை பொ-
-ஞ்ஞசை பெண்ஞசை யென்றுண்டான
ஆசாத்திரயங்களிடத்தில் விரக்தஞ-
ய் வனவாசத்துக்கொருங்கி பத்ணி
யாகிய அடியேனிடத்தில் இருந்த விர்த்தா-
ந்தங்களையெல்லாம் தெரியப்படுத்தி
அடியேனை ஸமாதானப்படுத்தி போக-
லாமென்றே உத்தேசித்தது- உம்மை, ஸம்-
-மந்திக்காதன்ற இதிஹாசங்களில்
சீதையாகிய அடியாளை விட்டு சுவாமி
தேவரீர் போகுமாயிருந்தால் அது
அடியாளுக்கு சஹிக்கமுடியாது அந்தவி
வனத்திற்க்கு போகாதின்ற சரித்திரமே
கிடையாது

இந்த சந்தர்ப்பத்திலும் அந்த சரித்திர விசேஷ
மானதை தேவரீரும் ஆவர்த்திக்கும்படி வனவா-
-சம் போகுமாயிருந்தால் அடியாள் ஸமாதானப்படா-
-தென்ற ஒருவியுமல்ல ஏதொரு காரணங்களால் ஸமா-
-தானப்படாதவளென்றல்

(நாயகாவனம் — எ-து.) நாயகனென்னும் த-
-ன்னை கெட்டின புருஷனுக்கு மாதாவும்,
பிதாவும் கல்ப்பிக்காநென்ற நிர்ப்பந்தம் ஹேதுக-
-மாக தனதான்ய ஸமிர்த்தமாயும் ஸகல சுகபோக-
-ங்களுக்கும் ஆஸ்தானமாயி அதிமனோஹரமாகிய
ராஜதானிகளையும், நகரங்களையும், கிராமபிரதே-
-சங்களையும் விட்டு சூன்யமாயி பக்ஷி விருக்ஷஸ-
-மூகமாயி, வாதாதப சீதோஷ்ணங்களையும் பயங்-
-கரரான அசுரராக்ஷஸர்களினாலும் பேய்பிசாசுக்-
களினாலும் பீடிதமாகிய வனமத்தியத்தில்
ஒருபாக்கியஹீனியாய் சென்றுசேரப்பட்ட
துரந்தமானதும் வந்துசேர்ந்ததென்றும்

(மேயமண்ணிழந்தா— எ-து) பூர்வீகர்களான
இக்ஷ்வாகுமுதல் உமது பிதாவபரியந்துமுள்ள சகல
ராஜாக்களும் தாந்தாங்களுடைய அதீனதையில்
பரித்து விதசிப்பித்தெடுக்காநென்ற பைதுருகமா
கிய ராஜ்ஜியமான உத்தரகோசல அயோத்தியை
யென்ற நமது பரிதியில் உள்ப்பட்ட மாதுருபூமி
உமக்கு ஜன்ம ஸித்தமாகிய அவகாசம் அந்த அ-
-வகாசாதிகாரத்தை கைகேயிமாதாவின் வாக்
மூலமாக கையொழிக்கவேண்டிய காரணங்களை
யதாஸமயம் தெரிந்து அந்த காரணங்களுக்கு

ஹேதுக்களாகிய பேர்களையும் அந்த அஸத்திய-
-வாதிகளான ஸகலமான பேர்களையும் உன்மூல-
-னஞ்செய்து தனது பிரியகரமாகிய ஸர்வங்களை-
-யும். நியமித்தவரே தேவரீர் என்று சொல்லப்பட்ட
விஷயத்திலும் ஸங்கடப்பட்டவனல்ல-

(நீவருந்துவ நீங்குவன்—எ-து.)

அடியாளுக்குள்ள ஸங்கடம் எதினால் வந்ததெ-
-ன்றால் உடலும் உயிரும் ஒன்றாக கொண்டு பிரேம
பந்தராயி நீடூழிகாலம் நாமிருவரும் நிமிஷமாவ-
-து விடாதபடிக்கு வாழ்க்கையை செய்யவேண்டி-
-ன விஷயத்தில் தேவரீர் அவ்வளவு ஆஸக்தன-
-ல்லவென்றும் அடியாள் மட்டும் ஆஸக்தியுள்ளவ-
-ளென்றும் பாவனையைசெய்து நீ துக்கிக்கவே-
-ண்டாம் நான் வனத்திற்கு போகிறேன் என்று
வேறுவல்ல ஒருவியானவனிடத்தில் சொல்வாத
ன்ற தன்மையைபோல் அடியாளை திரஸ்கரி-
-த்து இந்தவிதமாக சொல்லிவிட்டீரே கணவா
பிராணவல்லபா! ஐயயோ இந்த ஸாஹஸமான

(தீயவெஞ்சொல்—எ-து-)

தீயதென்னும் பயங்கரமான கடுப்பமேறின
வார்த்தையை தேவரீர் எப்போது உச்சரித்து
விட்டீரோ அந்த வாக்ஸகலங்கள் அடியே-
-னுடைய கர்ணேந்திரியத்தில் அகப்பட்ட
காலத்தில் அடியேன் அத்தியதிகம் ஸங்கடப்ப-
-ட்டவளாகவந்து அடியாளை கூடாமல் உண்டான
வனயாத்திரைக்கோ தேவரீர் உத்தேசித்தது
உம்மைவிட்டிருக்கும் விஷயத்தில் அல்லாமல்

மற்றொன்றிலும் அடியாள் ஸங்கடமுள்ளவளல்லவே கே-
-ட்டீரோ ஸ்வாமின்-

அதோவற்றாய் ஜானகீ உத்தமபுத்திரன் என்று அ-பிமானிக்கவேணுமானால் பிதாவின் ஆக்ஞையை நிவர்-த்தியை நடத்தவேண்டும்- அப்போது மாதுஸுஸ்ரூஷணை-க்கு வழங்கவேண்டும்- அந்தவிதமாக ஆலோசனை செய்யாதன்ற காலத்தில் ஒருபேர்கண்டத்தும் கோபித்து அதிகாரமுறைப்பிக்கவேண்டின ஸந்தர்ப்பமே கிடையாது பிதாவை ஸத்தியஸந்தனாக்கும்பொ-ருட்டு வனவாசம் போகவேண்டினதே எனது தர்-மம்- பிதாவின் ஹிதமாக உத்தமபுத்திரனை நான் அனுஷ்டிக்க வேண்டியதை செய்யாத படிக்கு உபேக்ஷிக்கவோ வேண்டினது இந்த விஷயத்தில் நீ எதற்க்காக வியாகுலமடை கிறாய் ஜானகி- கவி-

அன்னதன்மையளையனு மன்னையும
சொன்னசெய்ய துணிந்தது தூயதே-
என்னையென்ன இருத்தியென்றசொல்
உன்னவன்னவுயிருள்ளகின்றதே. (35)

(இ-ள்.) அந்தவிதமாக மாதாவும் பிதாவும் சொல்லப்பட்ட வார்த்தைக்கு ஸத்தியத்தை தீ-க்ஷிக்க உத்தியமிக்கும் காரியங்களை அடியாள் நிஷேதிக்கவேணுமென்று உத்தேசித்தவளல்ல. மாதாபிதாக்கு தெய்வம் அந்தபிரத்தியக்ஷதெய்-வதங்களான தாய்தகப்பர்களானவர் (சொன்னசெய்ய — எ-து.) வாக்குலியமாக ஏ-தொன்றை செய்யசொன்னதோ அதை நிர்வஹிக்க

பொருட்டாக உத்தியமித்தது எத்தனையோ சுப
மானதென்றிலும். பாவனமான மஹெல் கீர்த்திய-
-மாகிலும். ஆனால் பிறகு இந்த வனவாச கமனவிஷ-
-யத்தில் தேவரீர் புறப்படாதென்ற பிரயாணவேளை
-யில் ஸங்கடமடைந்துவர காரணம் ஏதென்றால்
(என்னையென்ன — எ.து.) உமது பத்னி
யாகும் அனேககோடி ஜன்ம ஜன்மாந்தரங்களில்
அடியாள் செய்யாதென்ற சுகிர்த கர்மம் ஹேதுவாக
லபிக்காதென்ற ஒரு பாக்கியமாகிலும் - இரண்டு சரீ-
-ரமென்றிருந்தாலும் ஒரே பிராணனாக பிராணது
ல்லியமாக ஸ்னேஹிக்காதென்ற அடியாளை ஏதோ
ஒன்றைபோல உபேக்ஷித்து உதாஸீனமாக சொல்லி
இவ்விடத்தில் பர்த்துரு விரஹதுக்கம் ஸஹிக்க
இருக்கவேண்டுமென்றும் நான் போகிறேன் என்றும்
சொன்ன விஷயத்தை கேட்டபோது
(உன்னவன்ன — எ.து.) பலவிதமாக கொண்டு
ஆலோசனை செய்து பிராணநாதனவருக்கு பரஸ்-
-பரம் பிரேமமென்றுண்டானதொன்றில்லாமல்
அலக்ஷியமாக இருந்துவிட்டீரே என்று பலவித
-த்திலும் ஆலோசனை செய்து எனது உயிரான
பிராணன் சரீரத்திலிருந்து மேல் துரத்தாதென்ற
தன்மையைபோல் உமது வார்த்தை ஹேதுவாக
நான் பிராண ஸங்கடமடைந்தவள் கேட்டீ
ரோ சுவாமின். கவி.

வல்லரக்கரின் மால்வரைபோய்விழுந்
தல்லரக்கினுருக்கழல் காட்டயத்
தில்லரக்குருங் கருமையவல்லதின்
னில்லரக்குண்ட சேவடிபோதரோ.

(இ-ள்-) அசேதநவாராய் ஜாணத்தி இந்தவிதமாக பருஷவார்த்தைகளை பரிபவித்துசொல்லவேணுமென்றில்லை. உன்னை வேர்படும்படி ஸந்தோஷமுள்ளவனுமல்லை. இந்தவனவாசமென்றால் உன்னால் நிறைவேற்ற ஸாத்தியமல்லை - ஏதிலையென்றால்

(வல்லதுக்கதின் — எ-து-) பிறபலர்களாயிகடினகாயர்களாயி, பயங்கரராயி மனுஷ்யமாம்சங்களை புஜிக்கிறதென்ற சக்தர்களான ராக்ஷஸர்கள் கேந்திரமாக அதிவசிக்கிறதென்ற பர்வதங்கள் அவர்களுக்கனுயோஜ்யமாகிய வனங்களில் நாம் சென்று சேரும் காலத்தில் அவநானுண்டான உபத்திரவமும் பயமும் நம்மால் தடுக்கமுடியாது அதுதானுமல்ல

(தல்லதக்கினுங்கூகூல் — எ-து) பரஸ்பரம் ஆள்பேதம் தெரியாதபடிக்குண்டான அந்தகாரத்தையும் நம்மால் தடுக்கமுடியாது - ராக்ஷஸர்களையும் நம்மால் தடுக்கமுடியாது. தெரியாதபத்தினையும் காட்டாக்கினியினையும் உண்டாகுகின்ற அநேக்குமூதலான உஷ்ணதிரவாகங்களையும் அதுகூடாமல்

(கல்லதக்குங்கடுமை — எ-து-) கல்லுகளாகிய பாஷாணங்கள் குடுப்பமேறின முள்படர்ப்புகள் நிம்னோன்னதங்களாகிய துர்க்கம பிரதேசங்கள் இதுகளையெல்லாம் தாண்டி போகவேண்டினதல்லவோ வனயாத்திரை, உனது உல்லாலம்பூதற்கு வேதத்னங்களால் படுத்து படுவதாணிகளால் விரித்த

மாணிக்க மார்க்கங்கள் மட்டும் மிதித்து ஸஞ்ச-ரிக்கிறதென்ற

(கில்லாக்குண்ட சேவடி — எ-து)

புஷ்பம்போல் பதுமையாகிய உனது ஸ்ரீ பாதங்கள் வனயாத்திரைக்கு தகுந்த கடுப்பமேறினதுகளல்ல அந்தவனத்தில் நீ பிரயாணஞ்செய்ய ஸக்தியுமி-ல்லை வனவாசம் உன்னால் தாங்கமுடியாதெ-ன்று கருதி நீ ராஜதானியில் இருந்தால் போது-மென்று சொன்னது. அல்லாமல் உன்னை ஸ்நேஹ-மில்லாமல் சொன்னவனல்ல. உன்னிடத்திலுள்-ள அதிவால்சல்லியம் நிமித்தம் சொன்னவன் கேட்டயோ ஜானகீ இன்னும் நீ என்னோடு கூடி வரலாகாது கேட்டயோ ஜானகி-

சரணம் கணவா தேவரீர்- கவி.

பரிவிருந்ததோர் தொடு பற்றிலா
தொருவு கின்றனை ஊழி அருக்கனும்
எரியும் எண்பதியாண்டைய தீண்டுறின்
பிரிவினும் சுடுமோ பெருங்காடதோ (37)

(இ-ள்) ஸ்நேஹாதிக்கியம் ஹேதுகமாக சொ-ன்னவரென்று எப்படி அடியாள் நம்புகிறது-

(பரிவிருந்த — எ-து-) பரிவென்ற பிரியம், பி-ரேமம், விசுவாசம், ஸந்தோஷம், இதுகளொன்றுமி-ல்லாமல் பற்றுஎன்ற யாதாம் யாதொரு பந்தப்படா-தவனைப்போல் எனது வனயாத்திராரம்பகால-த்தில் என்னை பின்தொடர்ந்து நீ அனுகமிக்கலா-காது. நீ என்னோடு சேர்ந்து வரகூடாது என்று அடியாளை தள்ளி நீக்குகிறீரே

(தொருவுகின்றனை — எ-து-) உன்னையென்று
சொன்னால் காட்டாக்கினியும் உன்னையல்லக் க-
-டுப்பமேறின அந்த ஆதியாதபமும் உன்னையல்ல
ஊழியான கல்பாந்தகாலத்தில் பனிரண்டு ஆ-
-தித்தியர்களைக் உதித்து ஸப்தலோகங்களை-
-யும் வெறண்படுத்தாதென்ற பன்னிராயிரம் ர-
-ஸ்மிகள் அடியானுடைய சரீரத்தில் ஏற்ப-
-டும ஸங்கடமில்லை.

(எரியுமென்பது — எ-து-) எரிந்து தஹிக்கா-
-னென்ற காட்டாக்கினியைபோல் உண்டாகின
ஒன்றிலும் பார்த்துவு விரஹாக்கினி அந்தவிரஹா-
-க்கினியில்பட்டு அடியேன் தஹிக்காமல் எனது
உபாதியானதை குட்சிக்கவேணுமானால் உம்-
-மோடுகூடி வரவேணும் ஆகையினால் உம்மை.

(பிரிவினுஞ்சுடுமோ — எ-து) பிராணநாயக
ஞகின உம்மை வேர்படுத்தன்மைக்கு மேலாகக் கொ-
-ண்டு ஸங்கடப்படுமோ அந்தபயங்கரமாகிய வனவா-
-சம் ஒருகாலமும் ஸங்கடமாகவரவில்லை ஆனதினால்
அடியானும் உமமோடுகூடி வந்துகொள்கிறேன் கிணவா!

அதோவாராய் ஜானகீ தேவப்பேர்ப்பட்டவ
ளாகிலுமென்னும் உன்னுடைய ஸௌந்தரியா
திசையங்களையும் அதற்க்கெண்மடங்கான மன
தேயும் ஆலோசனைசெய்யாதென்ற காலத்தில்

கவி.

முல்லையும் கடல்முத்தும் எதிர்ப்பினும்
வெல்லும் வெண்ணகையாய் விளைவென்னுவாய்
அல்லபோத அமைந்தனை ஆதலின்
எல்லைஅற்ற இடர்தருவாயின்றே

முல்லையென்ற ஸௌரப்பியமேறின முல்லைபூமொட்-
-டேயும் கடலானபாற்கடலில் உற்பவிக்கிறதென்ற
முத்தையும் தாரதம்மியமாக சொல்லுமாயிருந்தாலும் ஸ
மானதாகப்படாமல் இச்சொல்லப்பட்டவஸ்துக்களை
யெல்லாம்

(வெல்லும் வெண்ணகை—எ-து.) பராஜயப்ப
டுத்தும்படி மந்தஹாசிக்கிறதென்ற ஸௌந்தர்யவதி
யான ஹே ஜானகீ; விண்ணென்னும் மேலால் வரும்
பக்ஷியல் பலன்களை ஆலோசனை செய்யாமல் என்-
-னை மட்டும் பிரேமித்தும் நீவர கூடாது. வனவாசத்
திலுண்டான துராந்தங்களை ஒன்றுகூட ஆலோசனை
செய்ய

(அல்லபோது அமைந்தனை—எ-து.) மேலால் வந்து
சேரும் ஆபத்துவிபத்துகளையெல்லாம் தடுத்து உன்னை
ரக்ஷிக்க நான் சக்தனென்று வந்தாலும் அந்த ஆபத்து
அனர்த்தங்களைக நாம் ஈடுபடுமாயிருந்தால் என்னை
வேர்ப்பட்டு இந்த ராஜதானியில் அதிவசிக்கிறதென்ற
உனக்கு அதை உபதேசித்து என்னோடுகூடி வருமாயிரு
ந்தால். (எல்லையற்ற இடர்—எ-து.)

அந்த வனவாச காலத்தில் எனது ஸம்ரக்ஷணை-
-களிருந்தாலும் என்னை வேறிட்டு இந்த ராஜதானி-
-யில் எல்லையென்னும் பரிதியில்லாத இடரானஸங்க
டங்கள் உனக்குவந்துசேரும் ஆகையினால் நீ சாட்டி
யரூபேண என்னோடுகூடி வருமென்று சடிக்க
கூடாதே ஜானகீ. கவி.

கொற்றவன்ன துகூறவும் கோகிலம்
செற்றதன்ன குதலையள் சீறுவாள்.

உன்றுநின்ற துயரம் இதொன்றுமே

என்றுறந்துபிணின்பஞ்சொலாமின்றே . (39)

(இ-ள்.) சரணம் இணைவா கொற்றவனென்றும் பிரதாபசாலியாயி அதிவீரியசௌந்தரியவாரிதியா யி சோபிக்கிறாரென்றும் பிறகும் ஆவர்த்திச்சு இந்தவித-மாக அடியாளை சங்கப்படுத்த சொல்லுகிறீரே! கோகிலகமாகிய குயிலைப்போல் உம்மை ஸந்தோஷப்படுத்த நாள்தோறும் சொல்லாதன்ற

(செற்றதென்னுதுஸயன் — எ-து.) வார்த்தைகளுக்கு விபரீதமாக அடியாளை கோபப்படுத்துகிறீரே. நாம் பரஸ்பரமாக பிரேமித்து இந்தநாள்வரைக்-கும் கோபிக்காமலும் இப்போது அடியாளை கோபிப்பி-த்ததே கஷ்டம் கஷ்டம்

(உன்றுநின்ற துயரம் — எ-து) அடியாளைவி உம்மோடுகூடி வருமாயிருந்தால் நெருக்கமாகிய ஸங்கடம் உம்மை பாதிக்கும் அடியாளோடுகூடி தேவரீர்வனம்போகிறதாகிலும் உமக்குஸங்க-டமென்றில் அந்தவனவாசத்தில்

(என்றுறந்துபிணின்ப — எ-து.) பார்த்துவிரஹவேதனை ஸஹிக்கமுடியாமல் ராஜதானியில் இருக்கும்படி மனக்கருத்தில்லாமல் உன்ன அடியாளை தியஜித்து பதினாலு ஸம்வத்சரகா-லம் வனவாசம் தீக்ஷிக்கும் காரியத்தில் இ-ருதகீர்த்தியன்கு வந்ததென்றுண்டான ஒருஸந்தோஷம் உமக்கெதொரு விதமாக வந்துசேரும் யாதொருஸந்தோஷத்துக்கு மு

அபிமானத்துக்கும் அடியாளை கூடாமலுண்-
-டான வனவாசம் உமக்கு ஒருவகையாக வேண்-
யில்லையே அண்ணா- ஆகையினால் உமக்குமுன்னே
அடியாள் உருத்தவஸ்த்திரத்துக்கு மறுவஸ்த்திர
முங்கூட எடுக்காமல் வனத்திற்கு புறப்படுகொ-
-ண்டிரேன் சுவாமி. அவதாரிகை

என்றிப்படி சீதை கோபித்துச்சொல்ல ஒன்றும்
பேசாமலிருந்தார் பின்பு தசரதன் அரமனையிலேசெ-
-ன்று தகப்பன் பாதம் வணங்கி தானும் தம்பியு
-ம சீதையுமாக தேரேறிப்புறப்படவும் அப்போது
பட்டணவாசிகள் ராமனுடனே வருவோமென்றுதே-
-ரினுடைய பின்னாலே செல்ல அஸ்தமானசமயத்தில்
தமஸா தீரத்துக்கு இரண்டுயோசனை தூரத்திலே
ஒருசோலையிலே சென்றிறங்கவும் அப்போதுஸ
-கலமானபேரும் சோலையைசுற்றி நின்றுகொள்ள-
-வும் அப்போது ராமன் சுமந்திரனோடுசொல்

## தைலமாட்டுப் படலம்- கவி.

பூண்டபேரன்பினைப்போக்குவதரிதுபோக்கா-
தீண்டுநின்றேகல்பொல்லாதென்றதை நீயிரதுமின்னே
தூண்டினைமீளநோக்கிச்சுவட்டை யோர்ந்தென்னை
யங்கே- மீண்டனனென்ன மீள்வரிதுநின்னைவேண்
டிற்றன்றே. (1)

(இ-ள்.) வாராய் சுமந்திரா இதோபாரு பாரு என்-
-னைதொடர்ந்து வனவாசத்துக்குவேண்டி நாடுநகர-
-ங்களையும் மற்றுசெல்வங்களையும் உபேக்ஷிக்கமனே

ஜாதியத்தோடுகூடி தேசவாசிகள் கிராமத்திலு-
ள்ள ஸாமந்தராஜாக்கள் அஜைஹெறிண்டிப்பவைகள்
மற்றுமுண்டானவைகலமானபேர்களும் இந்தகைகே-
-சிமாதாவானவள் ஹேதுகமாக சுவாமியானவ-
ருக்கு அநுயோக்ஞியமான அபிஷேகம்முடங்கி
பாதனுக்காக ராஜ்ஜியத்தை வாங்கிகைவசப்ப-
டுத்தாளென்ற கைகேசிமாதாவும் அவள் புத்திரனும்
இந்த ராஜ்ஜியத்தில் இருந்தால்போரும் அயோத்தி
ஒருகாடாகவேவேணும் ராமசுவாமி அதிவகிக்-
-கிறானென்ற வனத்தை ரொம்பக்கிதீர்க்கவா
மென்றுண்டான ஆவேசத்துடனே சொல்லி தியா-
-கமஞ்ஞெபாவமடைந்தவராகி எனது ஆபத்திலும்
சுகத்திலும் ஸமக்கிரியர்களாமிவனவாசத்-
துக்கொருங்கிவரப்பம்பேர்களெல்லயோ இந்த
ஜனகோடிகள்வாராய் சுமந்திரா இந்தவிதமாக
(பூண்டபேரன்பிணை — எ.து.)
இப்படி என்னை அவலம்பித்து வாரதென்ற மித்த-
-ரங்களாகிய இவர் என்பேரிலுண்டான அபாரமான
வாத்சல்லியமுடைய பௌராவலிகளை ஸமுறைமாக
புரோபாகத்தில் திருத்தி எனது துர்விதியான வனவா-
-சத்தில் ஸங்கடப்படும் விகாரமானதை தீர்த்து
அவர்களின் ஸங்கடத்தை எனது வார்த்தையி-
-னால் நிவாரணஞ்செய்து
(பூண்டபேரன்பிணை — எ.து.) ஒருவேண்ட-
த்தில் ஆர்த்திரமாகக்கொண்டுண்டான
வாத்சல்லியமானவருக்கு ஸங்கடநிவா-

-ரணத்துக்கு வார்த்தை சொல்லி ஸமிப்பிப்பது ப்ரயாஸம் இவரோவென்றால் பாலர்கள் யுவாக்-கள், வயோவ்ருத்தர்கள் அபலைகளானபெண்கள் இப்படியுண்டானபேர்களை ஸமுதாயமாக சொல்லியும் தனித்தனி-யாக சொல்லியும் இவர்களின் ஸங்கடம் தீர்ந்தால-ல்லாமல் இவர் என்னைவிட்டு போகிற பேர்களுமல்ல.

(ஈண்டுநின்றேகல் — எ-து.)

இவ்விடத்திலிருந்து இவர்களையும் சேர்த்து வனவாசயாத்திரை செய்தவனென்று வந்தால் அதுவும் பொல்லாதகாரியமாகிலும். தாசரதீராமன் மாதுருபித்ரோராஞ்ஞியை ஸிரஸால் வஹித்து வனத்துக்கு செல்லா-நின்றகாலத்தில் நகரவாசிகளை அவாதீனப்படுத்திகொண்டு போனானென்ற ஒருபொல்லாங்கானபழியும் வந்துசேரும். ஜனசூன்யமான இடத்தில் அல்லாமல் வனவாசமும் சரியாகவே இல்லை. இவர்களோடு கூடிவனத்திற்கு போகவும் கூடாது. எந்தையென்னும் எனது பிதாவுக்கு ஸமர்த்தமாகின நீர் பிதாவானவரால் கொடுத்தனுப்பாரென்றஇந்தரதத்தை

(ஈண்டிணை மீள — எ-து.)

அயோத்தியாராஜ்ஜியத்தைக்குறித்து நடத்திபோகுமாயிருந்தால் தேஹ தத்துவங்கள் க்ஷீணித்து காடநித்திரையில் உள்பட்டு கிடக்காதென்று இ-வர்கள் ஸூர்யோதய காலத்தில் உணர்ந்துபார்வை செய்து அவ்விடமாகிய ரதம் போகாதென்ற வழித்-தாரைகளையும் பார்த்து ராஜாவின் சொல்படி குமாரர்களை சுமந்தரன் மீண்டுபோனானென்று ஆ-

-லோசனையை செய்து

(மீண்டனனெண்ண—ன-து-)

சுவாமியும் தேவியும் தம்பியும் வனவாசம்தி யசித்து ராஜ்ஜியத்துக்கு மடங்கிபோய்விட்டா ர்கள் என்று சொல்லி இவர்கள் ராஜ்ஜியத்துக்கு போவார்கள் ஆகையினால் இந்த ரதத்தை நீஇ-வர் உணருவதற்க்கு முன்னுதாக அயோத்தியக்கு மடக்கவேணும் 'இது நின்னவேண்டி" இந்த ஒரு காரியத்தை செய்து என்னை ரக்ஷிக்க அபேக்ஷித்துகொள்கிறேன் சுமந்தரரே-

சரணம் சுவாமி- கவி-

தேவியுமிளையலும் தொடரச்செல்வனைப்

பூவியல் கானகம்புக உய்த்தேன் என்கோ

கோவினை உடன்கொடு இறுகினேன் என்கோ

யாவதுகூறுகேன் னரசன் கேள்க்கிலே-(௨

இ-ள்-) சுவாமி தேவரீரை வனத்தில் விட்டு அடியேனும் தனியாக ரதம் நடத்தி அயோத்தியா நகரத்தில் சென்று உமது பிதாவை வணங்கி ஏதொ-ருவார்த்தையாகிலும் சொல்லவேண்டியது அரு-மை திருகுமாரர்களாகிய உங்களை ரதத்தில் ஆ-ரோஹணஞ்செய்யிப்பித்து வனத்தை காட்டி அதிவேகம் கூட்டிவா சுமந்திரா யென்று சொல்லி யனுப்பானன்ற உமது பிதாவாகின மஹாரா-ஜாவினிடத்தில் அவருடைய புத்திரவினியோக ஜன்னியதுக்கும் வர்த்திக்க தேவியாகிய ஜா-னகியம்மனும் தம்பியாகின இளையசுவாமியும்.

தன்னோடுகூடி அனுகமித்து உமதுகுமாரனை புண்-
-ணிய நகரமான இந்த அயோத்தியிலிருந்து

(பூவியல் கானகம் — எ-து.)

புஷ்பங்களால் நிறையானென்ற காட்டில் போகு-
-வதற்க்காக விட்டனுப்பிவிட்டேனென்றுண்டா-
-ன அந்தபரமார்த்த வார்த்தையை சொல்லாமல் சு-
-க்கிரவர்த்தியானவருக்கு ஸந்தோஷம் வருவத-
-ற்க்காக

(கோவினை உடன்கொடு — எ-து.)

கோன் கர்த்தாவாகிய உம்மை சுமந்தரனை
என்னோடு கூட்டிவந்தேனென்றுண்டான அதர்-
-ம்மமாகின அஸத்திய வார்த்தையையோ சொல்-
-லவேண்டினது புத்திரவியோகமென்ற ஸங்கட-
-த்தினால் பிராணவாயு மேல்துரத்தி பிரயாணபி-
-ருணோன்முகனாகி கிடக்கப்பட்ட உமதுபிதாவெ
தேவரீர் காட்டுக்கு போனீர் என்றவார்த்தையை
கேட்டால் உடனேமரணமடைவார் அந்தமரண-
த்துக்கு ஹேதுவல்லாமல் அஸத்தியத்தை சொல்-
-லவேண்டிவரும் இப்படி ஸத்தியமோ அஸத்தியமோ
சொல்லவேண்டினது-

(யாவதுகூறுகேன் — எ-து.)

ஸத்தியஸந்தனென்னும் பிரஸித்தியார்ச்சி-
-க்கிறானென்ற சுமந்திரனான் மஹாராஜா
வான தசரதசக்கிரவர்த்தி கேள்க்குமாயிரு-
-ந்தால் ஏதொருவிதமான வார்த்தையை
ஸமாதானப்படுத்தவேண்டும் என்றுண்டான

தர்ம்மஸங்கடத்தில் உள்ப்பட்டவன் அடியேன் கேட்டீரோ ஸ்வாமின் இன்னும் உம்முடைய பிதாவா-னவர் உம்மைபிரிந்து நின்றுண்டான ஸங்கடத்தை தீர்ப்பதற்க்காக-

கலி.

நாற்றிசை மாந்தரும் நகரமாக்களும்
தேற்றினர் கொணர்வர் உன்சிறுவன்றன்னை-
என்-றாற்றின அரசனை அய்ய வெய்யனென்
கூற்றுறழ் சொல்லினாற் கொல்லசெய்வென்
கொலோ- (3)

(இ-ள்.) உமது பிதாவாகிய தசரதசக்கரவர்த்தியானவருடைய ஸமீபத்தில் அவரை ஸமாதானப்படுத்துவதற்க்காக

(நாற்றிசைமாந்தரும்—எ-து.) பூர்வதக்ஷிண பச்சிமோத்தரங்களான நாலுபிரதேசங்-களிலுண்டான நகரவாசிகளானபேர்களும் ஸாமந்தராஜாக்களும் புத்திரவியோக ஜன்னிய துக்கமென்னும் ஸங்கடத்தை தீர்க்க

(தேற்றினர் கொணர்—எ-து.) தேற்றிதேர்ந்தவர்களை ஸ்வாந்தன வார்த்தைகளை பலதும் சொல்லி ஸுமந்த்ரரும் சூரியோதயகாலத்தில் உம-துபுத்திரனை ராமகுமாரனை கூட்டிவரும் என்ற வார்த்தையை சொல்லி

(ஆற்றியஅரசனை—எ-து.) ஆற்றிஸமாதானப்படுத்தானென்ற அந்தமஹாராஜாவை ஜயனென்னும் பெருமையையுடையவரே ஸ்வாமின் வெய்ய

தென்றாங்கடுப்பமேறுந்தன்மையான.

(கூற்றுரூழ் சொல்லினுல் – எ·து·) தேஹாதேஹி-
-களை வேர்படுத்தும் யமனைபோலுண்டான என்சொ
ல்லாகிய வார்த்தையினல் கொலையென்னும் ஹிம்ஸ-
-யை செய்வற்க்கோ அடியேன் போகவேண்டியது என்ற
பரமஸங்கடத்தில் அகப்பட்டவன் கேட்டீரோ ராமசந்த்ர.

என்றிப்படி சொல்லி பாதத்தை பிடித்து அழு
ப்பட்ட மந்திரியைமார்போடணைத்து சொல்.

கவி.

முன்பு நின்றிசை நிறீஇ முடிவுறுத்திய
பின்பு நின்றுறுதியை பயக்கும்பேர் அறம்
இன்பம் வந்துறும் எனின் இனியதாய் இடைத்
துன்பம் வந்துறும் எனின் துறக்கல் ஆகுமோ (4)

(இ·ள்·) வாராய் சுமந்தரா ஸங்கடப்படவே-
-ணுமென்றில்லை இந்த ஸங்கடங்களுக்கும்
ஸந்தோஷாதிகளுக்கும் நிதானமாகிய காரி-
-ய காரணங்களை ஆலோசனை செய்தால் கர்ம
ஹேதுக்களாகிய புண்ணியபாப மிச்ரமென்னும்
கர்மத்ரயங்களினுல் ஸந்தோஷ ஸந்தாபங்களெ-
-ன்னும் விகாரங்கள் சரீரிகளுக்கு வந்துசேரும்
முன்பு ஜன்ம ஜன்மாந்தரங்களில் தான் செய்யாநின்ற
இசையென்னும் கீர்த்திகரங்களான ஸத்கர்ம
ங்களினுல் அதினுடைய பரியாவஸானம் தே-
-ஹாந்தர பிராப்தியானது வந்து உற்பவிக்கா-
-நின்ற புனர்ஜன்மத்தில் விசேஷபுத்தியையு-
-டைய மனிதஜன்மமானதை லபித்துபரிபூர்ண

ஆயுஷ்காலத்தில்

(பின்புநின்றுநினைய— எ-து.) பூர்வஜன்மத்-தில் தான் செய்த புண்ணியஹேதுக்களின் அனுபவ-ரூபமாக உறுதிகளென்னும் ஐசுவரியங்களை அனுபவிக்கும் போறமான ஸல்கர்ம்மத்தின் அனு-பவமேயென்று ஸந்தோஷிக்கும்.

(இன்பம்வந்துறுமெனில்— எ-து.) இன்பமாகின ஸந்தோஷாவஸ்த்தையை பிராபிக்காதென்ற கால த்தில் நித்தியதிருப்தியாகிய ஸந்தோஷத்தை நினை நிறுத்த வேண்டி ஸகலமானபேர்களும் சுகத்து-க்குவேண்டி பிரயத்னவிசேஷங்களை செய்யும் யாதொருபேர்களும் துக்கத்துக்குண்டான பிரயத்-னமே செய்யவில்லை அப்படியிருக்க சுகலைக்கி-யமான ஸந்தர்ப்பத்தில் அதற்க்குவிபரீதமாக

(துன்பம்வந்துறுமெனிற்— எ-து.)

துன்பமாகியஸங்கடங்கள் சரீரிகளுக்கு பா-திக்குமாயிருந்தால் அதை நிவசிக்கமுடியுமோ?

"எத்ற யெத்ற சரீரபரிக்ரஹே தத்ற

துக்கமிதிம் வியாப்தி" எவிடவிடங்களில் இந்த சரீரம் யானென்றும் இந்தவஸ்துக்கள் என்-னுடையதென்றும் உண்டான அஹமமதாபோத முண்டோ அவிடவிடங்களில் துக்கமும் வியா-பிக்ககூடின ஒன்றிலும் சுகதுக்கங்களுக்கி-ருப்பிடமே இந்தகாரண சரீரம்- யுக்தியுக்தமாக ஆலோசனைசெய்தால் ஒருசரீரியானவனுக்கு ஜா-க்கிரத்தென்றும் சுஷுப்தியென்றும் அவஸ்தா த்திரயங்களில் ஜாக்கிரதயில் அஹமமதாபோ-

-திருண்டோ அதை வைத்து பல கர்ம்மங்களை
செய்து ஸங்கடப்படும் அந்த கர்ம்மங்களை ஒ-
-டுக்கி சரீரத்தால் கர்மம் செய்யாமல் நித்திரை-
-க்காக சயித்து சொப்னவஸ்த்தையில்பட்டு
பலவிதமான ஸங்கடங்கள் தான் தன்னைப்போல்
மற்றொரு சரீரம் பிராபித்து ஸங்கடமடையாதென்-
-ற அவஸ்த்தை சரீரிகளுக்கு அனுபவமாகியும்
அது மனைசென்னும் அந்தக்காரணங்களினுடைய
கர்மவேறு சுகமாக துக்கமாகியும் சத்துவகு-
-ண பிரதானமாகிய மனசு விஞ்ஞியானம-
-யமென்றும் மனோமயமென்றும் ஆனந்தமய-
-மென்றும் உண்டானவிடங்களில் ஸஞ்சரிக்-
-கிறதென்ற காலத்தில் ஜாக்கிர சொப்னவஸ்த்தை-
-கள் வந்துசேர்ந்து சந்தோஷஸந்தாபாதிகளுக்கு
அதீனப்படுவார்கள் ஜாக்கிர சொப்னதிகளிடத்தில்
யாதொரு சரீரிகளுக்கும் சுகமில்லை- இந்த தேஹோ-
-ஹமென்ற போதத்தை விட்டு ஆனந்தமயமாகிய சு-
-ஷுப்தியில் உள்ப்படுமாயிருந்தால் அந்த காடநித்தி-
-ரையில் உள்ப்படாதென்ற சரீரி தன்னைதான் விஸ்-
-மரிக்கும். நித்திரை உணர்ந்து தான் இன்னேரமட்டும்
சுகமாக தூங்கினேன் என்று சொல்லி சுகத்தை.
வெளிப்படுத்தும் ஆகையினால் எனது பிதாவென-
-னது புத்திரன் எனது சரீரம் என்றுண்டான அஹ
மமதா போதமே துக்கத்துக்கு காரணம்.
“சுகஸ்யாநந்தரம் துக்கம் துக்கஸ்யானந்தரம்
சுகம்” என்றுண்டான நியமம் சரீரிகளுக்கெ-
-ல்லாம் உச்சநீசாவஸ்த்தைகளான ஸங்கட

ஸந்தோஷாவஸ்த்தைகள் மாறிமாறிவரும் அதை தியஜிக்கமுடியாது என்னுடையவியோகஜன்னி-யதுக்கமானது பிதுருமரணத்துக்கு ஹேதுவாக வந்தால் ஜன்மாந்தரங்களில் செய்யாதன்ற காரண-த்தினால் உண்டான காரியத்தை தியஜிக்கமுடியுமோ-ஒருகாலத்தும் தியஜிக்கமுடியாது கேட்டீரோஸுமந்த்ரரே

முந்தினைமுனிவனை இறைஞ்சிமுற்றும்என்
வந்தனைமுதலிய மாற்றம்கூறினை
எந்தையை அவனொடும் எய்தினேனென
சிந்தனை உணர்த்துதி தெரியவின்றரோ. (5)

(இ-ள்.) வாராய் சுமந்திராநீசெய்யவேண்டி-ய கிர்த்தியம் ஏதென்றால் முன்னதாகமுனிவ-ராகிய காமகுரோதாதிகளை தியஜிச்சவர் கநி-ஷ்டதாபதராகிய வசிஷ்டாசாரியரென்னும் குலகுருவானவரை பாதாபிவாதியஞ்செய்து என்னுடைய பரிபூர்ண்ணமாகிய

(வந்தனைமுதலிய—எ-து.) வந்தனைகளாகிய வணக்கங்களை அவரிடந்தெரியப்படுத்தி அனந்-தரம் அந்தமஹாத்மாவான தாபஸரைசேர்ந்து

(எந்தையைஅவனொடும்—எ-து.) எந்தையாகிய என் பிதாவின்பக்கமாகசென்று இவிடத்திலு-ண்டான என்னுடைய வனவாசகாலத்தில் உ-த்தியமிக்காதன்ற

(சிந்தனை — எ-து) சிந்தனைகளென்னும் மனோஎண்ணங்களை உணர்த்தி தரிப்பிக்கவேண்-டும் பிதாவின் ஆஞ்ஞையை அக்ஷரம் பிறதிறவே-

-ற்றப்படும் என்று அவருக்கு தெரியப்படுத்தவே-
-ண்டும் சுமந்த்ரரே. கவி-

ஏழ்இரண்டாண்டும் நீத்தீண்ட வந்துனைத்
தாழ்குவன் திருவடி தலைவ ஈண்டெனைச்
சூழிவெங்கடகளிற்றரசற் சொல்லிப்பின்
வாழிமாதவன் சொலால் மனம் தெருட்டுவாய். (6)

(இ-ள்-) ஏழிரண்டு பதினாலு ஸம்வத்சரகாலமான அவதிகாலங்கள் முடிந்து வனவாசம் தியஜிச்சு யதேஷ்டமாக அயோத்தியில் வந்து உம்முடைய சமீபம்

(தாழ்குவன் திருவடி — எ-து-) தாழ்ந்து நமஸ்கா-ரஞ்செய்து திருவடிகளாகிய பாதபல்லவங்க-ளை தொட்டு வனவாசம் நிறவேற்றினேனென்று சொல்லும் என்று

(சூழிவெங்கடகளி — எ-து-) சூழியென்னும் முகபடாவெங்களாகிய சதுரங்கசைன்னிய-ங்களுக்கு அதிபனை என் பிதாவினிடத்தில் சொல்லி அவரை ஸமாதானப்படுத்தியும் அவ-ர் ஸங்கடப்படுமாயிருந்தால் அனந்தரம்

(வாழிமாதவன் — எ-து-) வாழியென்னும் சி-ரேஷ்டதரியாயும் கீர்த்தியையுடைய மாதவ-னென்னும் மஹத்துவம் பொருந்திய வசிஷ்-டாசாரியனைக்கொண்டு அவருடைய வார்த்தை யினில் பிதாவினுடைய மனதை ஸமாதான ப்படுத்தவேண்டும் சுமந்த்ரரே. கவி.

முறைமையால் எற்பயந்தெடுத்தமூவர்க்கும்
குறைவிலா என்றெடுவணக்கம் கூறிப்பின்

இறைமகன் துயர் துடைத்திருத்தி மாடென்று
மூறைமையால் மூவர்க்கும் முடியச் சொல்லுவாய்
[வேறுபாடம்] மறையவருறை திருவணத்து
க்கேகுவேன். (7)

(இ-ள்-) மூறையென்னும் கிரமமாக என்னை பெ-
-ற்றெடுத்து வளர்த்தாநின்ற மூவரான கௌசலை,
கைகேசி, சுமித்திரை என்ற மூன்றுபேர்களி-
-டத்திலும் முன்னமாக என் மாதாவான கௌச-
-ல்லியாதேவியினிடத்திலும் அனந்தரம் கைகேசி,
சுமித்திரை, என்ற மூன்று மாதாக்களிடத்திலும்
என்னுடைய இந்த வனவாசமான காலத்திலும்
அல்லும் பகலும் அனவரதகாலமும் மாதாக்களான
உங்களிடத்தில் உண்டான பக்தி, சிரத்தை, ப-
-ருமான, ஸ்னேஹ, ங்களுக்கு

(குறைவிலாவென்னைடும் — எ-து.) குறை
வென்ற லோபமில்லாமலிருக்கிற என்னு-
டைய விபுலமாகிய வணக்கத்தையும் நான்
ஸமர்ப்பித்தவனாகிலும் என்று பிரத்தியேகமாக
சொல்லி பின் அவரிடத்தில் நான் ஏதொரு
கிர்த்தியத்தை செய்யவேணுமென்றபேக்ஷித்-
-தவனென்றல்

(இறைமகன் துயர் — எ-து.) இறைகளென்னும்
ஏனைஷ, கோனைஷ, குப்பம், அங்கம், சுங்கம்
முதலான கரணிக்கைகளை சுவீகரித்து சக்க-
-ரவர்த்தியாகிய என் பிதாவானவருக்கு புத்தி-
-ரனை என்னுடைய வேர்பாடுரைநுகமாக
சங்கடப்படும் அவசரத்தில் மாதாக்களான மூன்று
பேர்களும் அவருடைய ஸங்கடம்

திரும்படி சுச்ரூஷைகளை செய்தும் பாதஸேவைகளை
செய்தும் ஸமீபத்திலிருந்து விட்டுபிரியாமல்
அதிவசிக்கவேண்டுமென்று நான்பாரமேற்பி-
-த்தவனென்று மாதாக்களிடத்தில்சொல்லி;
நீரும் ராஜரீகங்களை பாதுகாத்துக்கொள்வீர் சு-
-மந்திரரே- இந்தஇவிடத்திலிருந்து காலதாமஸஞ்-
-செய்யாமல் பிறயாணஞ்செய்துதென்பால்சென்று
(மறையவருறை - எ-து-) மறையவரென்ற வேதா-
திகாரிகளாகிய பாரத்துவாசர், அத்திரி, சுதீக்ஷ்ணர்,
அகஸ்த்தியர் முதலான மஹாத்மாக்கள் தங்கும்
இடங்களான ஸஜ்ஜன ஸஹவாசத்துக்கு
வேண்டிவனமார்க்கத்தில் வனதீக்ஷைக்காக செ-
ன்றுகொள்வேன். அந்தகிர்த்திய நிர்வஹணத்து-
-க்காக நான்சென்று பதிநாலுஸம்வல்சரம் கழிந்து
பதினைந்தாம் ஸம்வல்சரம் சூரியோதையால்
பரம் உங்களைகாணுவதற்க்காக வரலாம்
கேட்டீரோ சுமந்திரரே

சரணம் தாயே ராஜதானியில்சென்று அடியேன்
சொல்லவேண்டின வார்த்தையென்ன செய்யவே-
-ண்டிய கிர்த்தியமென்னவென்றுசொல்லிஅடியேனு-
-க்கு விடைதரவேண்டும் தாயே.        கவி.

அன்னதுகூறுவேனரசற்கத்தையர்க்
கென்னுடை வணக்கமுன்னியம்பியானுடை
பொன்னிறபூவையுங்கிளியும்போற்றுகென்
றுன்னுமென்றங்கையர்க்குணர்த்துவாயின்றே. (6)

(இ-ள்) என்னுடைய சந்தேசங்களைஎன்ற வார்-
த்தைகளைஎன்றவென்று கேள்க்கப்படாதின்றநீர்
செய்ய

வேண்டினது வதென்றால் அரசராகிய பிதாவுக்கும் அத்தைமார்களாகிய மாமிமார்களுக்கும் கணவரா-
-ன சுவாமியானவருக்குண்டான பக்திபகுமானதி அர்பணமனோபாவத்தோடுகூடினதான

(என்னுடை வணக்கமும் - எ-து.) சீதையான எ-
-ன்னுடைய வணக்கமான நமஸ்காரம் உன்னவனெ-
-ன்று அவர்களுக்குமுன்னதாக தெரியப்படுத்தி எனது சஹோதரிகளான ஊர்மிளை, மாண்டவி, சு-
-ருதகீர்த்தி என்றவரிடத்தில் ராஜதானியில் நா-
-ன் வளர்த்தநின்ற

(பொன்னிறபூவையும் - எ-து.) தங்கவர்ண்ணமா-
-கிய தேஹகாந்தியுள்ள நாகணவாய்ப்புள்ளை-
-யும் கிளியான பஞ்சவர்ண்ணமான தத்தையே-
-யும் காலோசிதமாக பக்ஷியங்களை கொடுத்து ஜாக்கிரதையாக ரக்ஷிக்கவேண்டுமென்று

(உன்னுமென்றங்கையர் - எ-து.) என்னுடைய ஆலோசனை அந்தகினிகள்பேரிலாகிலுமென்னும் தங்கை-
-களாகியமூன்றுபேர்களிடத்திலும் போதத்தியம் வரசொ-
-ல்லுவீர் சுமந்திரரே. கல்பனைசரணம் செய்து கொள்வேன் தாயே. சரணம்இளையசுவாமின் தே-
-வரீரும் அடியேனுக்கு விடைதந்தருளவேண்டும் இளையசுவாமின். கவி.

உரைசெய்தெங்கோமகற்குறுதியாக்கிய
தரைகெழுசெல்வத்தைதவிரமற்றொரு
விரைசெறிகுழலிமாட்டனித்தமெய்யனை.
அரைசன் என்றின்னம் ஒன்றுரையல்பாலதோ. (9)

(இ-ள்.) வாராய்மந்திரிராஜதானியில் சென்று சக்கரவர்த்தியான உமதுராஜாவைக்கண்டுநீசொல்ல

வேண்டினது ஏதென்றால் எனது கோமகனென்னும் சுவாமியானவருக்கு அனுயோக்கியமான ராஜ-பட்டம் ராஜசெங்கோல் முதலானவைகளும்

(துறைகெழுசெல்வத்தை-எ-து) வளப்பம் பொ-ருந்திய அயோத்தியாநகரத்திலுண்டான தன்-னியமாகிய சுகபோகங்களையும் அர்றைணதயா-னது லேசமாவதும் இல்லாமல் மற்று ஒருமுடக்கா-கி- (விரைசெறி-எ-து.) விரையென்னும் சுகந்தமேறின கேசபாரங்களையுள்ளவளா-யும் பிதாவுக்கிஷ்டப்பட்டவளாயும் கை-கேகியென்னும் ஒருவிக்கு வேண்டி ராஜ்ஜிய-த்தை பரதனுக்கு கொடுத்து ஸத்தியத்தை தீக்ஷிக்காநின்ற பிதாவானவர்

(அரசனன்றி-எ-து.) ஒருராஜாவென்று நிர்வகிக்க ஸாத்தியதையுண்டோ ரக்ஷிக்-கும்படி ஸாமர்த்தியமுள்ளவனோ ராஜாவு தனதுஸந்ததிகளைமட்டும் யோசிப்பிக்கா-மல் பரஸ்பரம் ஸங்கடப்பட வேர்படுத்தா-நின்ற பிதாவுக்கு ராஜாவு என்றுண்டான ஸ்தானமே நிஷேதிக்கப்பட்டது என்றுநான் சொன்னதாக அவரிடத்தில் சொல்லுவீர் சும-ந்திரரே

கவி.

கானகம் பற்றிநற்புதல்வன் காய் உணப்
போனகம் பற்றிய பொய்யில் மன்னர்க்கிங்
ஊனகம் பற்றிய உயிர்கொடின்னும் போய்
வானகம் பற்றிலா வலிமை கூறுவாய் (10)

(இ-ள்.) தன்னுடைய சீமந்தகுமாரனாய் ஸர்வர்களா-
லும் ஆராத்திய புருஷனாய் ஸல்புமானாகிய ஒரு-
-வன் தனது வாக்குமூலமாக வனத்தில் சென்று
சேர்ந்து பிராணரக்ஷைக்கு வேண்டி காய்கனி
முதலானதுகளை புசித்தும் துக்கம் அனுபவித்தும்
ராஜாவு இஷ்டபத்னியோடும் அவன் புத்திரனு-
-ண பரதனோடு கூடியும் நகரமான ராஜதானி-
-யில் அதிவசித்து

(போனகம்—எ-து.) போனகமாகிய க்ஷீரம்,
ஆஜ்ஜியம், குளம், முதலான பக்ஷணங்களையும்
புஜித்து வசித்தும் ஒருவருக்கும் பொருந்த-
-ப்படாத காலக்ஷேபங்களை நடத்தாநின்ற
ராஜாவுக்கு. (ஊனகம்—எ-து.) ஊனக-
-மென்னும் மாம்ஸம் தங்கிய சரீரம் இந்த
பூமியில் பந்தப்படாது. அந்த சரீரத்தில் தே-
-ஹியை ஊட்க்ஷிக்காமல் சரீரத்தை தியஜித்து

(வானகம் பற்றிலா—எ-து.) வானகமென்னும்
சொர்க்கம் சேருவது மாத்திரமாகிலும் பூக்ஷண-
-மென்று லட்சுமணனை நான் சொன்னதாக
சொல்லவேண்டும் சுமந்தாரே. சீக்கிரம் மரண-
-மடைந்து போக பிதாவினிடத்திலும் இனி பர-
தனிடம் சொல்லவேண்டியது . ஒவி.

மின்னுடன் பிறந்தவாட் பரதவேந்தற்கு
மன்னுடன் பிறந்திலன் மண்கொண்டாள்கின்ற
தன்னுடன் பிறந்திலென் தம்பிமுன் அலென்
என்னுடன் பிறந்தயான் வலியென்னன்றியால்
(11)

(கி-ன்.) மின்னி பிரகாசிக்கும் வாளாயுதத்தை
தரிக்கிறவன்றபரதாள்வாருக்குபுத்தி தரிக்கி
றதற்க்காகதாஜாக்களுடைய பரம்பராகத-
-மாகிய வம்சவரிசையில் ஜனிக்கப்பட்டவன-
-ல்லெ- மஞ்ஞாகிய அயோத்தியை பரிக்கிற-
-தும் பூஷணமல்லெ- அந்த பரதனுடைய தம்பி-
-யாகலட்சுமணனெரன் பிறந்தவனுமல்ல
அந்த சுவாமியானவருடைய தம்பியென்றும்
எனக்கு முன்னவனென்றும் அவன் ஆலோ
சிக்கக்கூடாது

(என்னுடன்பிறந்த—எ-து-) என்னோடு
கூடி பிறந்தயான் எதற்க்கும் சக்தனாகிலும்
அந்த பரதனை இந்த காட்டில் இருந்தவும்
சுவாமியானவரை ராஜாவாக இருந்தும்படி
யாகவும் எதற்க்கும் சக்தனே லட்சுமணன்
என்று தரிக்கும்படி ரான்சொன்னதாக பர-
-தனிடம் சொல்லுவீர் சுமந்தாரே

அவதாரிகை-

என்றிப்படி லட்சுமணன் சொல்ல சுமந்திரன்
வணங்கி தேரேறி அயோத்திக்கு செல்லவும்
அப்போது சகலமானபேர்களும் சுவாமி அயோ
த்திக்கிப்போனார் என்று திரும்பினார்கள்-சும
ந்திரன் தென்று வசிட்டரிடத்தில் ராமன்வர
வில்லையென்று சொல்ல யினிமேல் தெசரதன்
பிறந்துபோவானென்று வசிட்டர் தெசர
தனிடத்தில் வந்தார் அப்போது தெசரதன்
யென்மகன் வந்தானோவென்றான் வசிட்டர்
ஒன்றும் பேசவில்லை சுமந்திரன் சொல்-

கவி

நாயகாகேட்டி நற்றோர்ணடத்தியேயடியேன்
சென்று-சேயநல்வுறுதியெல்லாம் திருட்டினைனது-
கேளாமல்-வேயுயர்கானம் தானும் தம்பியும் மிதி
லைப்பொன்னும்-போயினரிரேழாண்டில் வருவர்
நீபுலம்பிடாயே- (12)

(இ-ள்-) நாயகனென்னும் இவ்வுலகத்திலுள்ள எல்லாப்பேர்களுக்கும் கர்த்தாவாய் ராஜாதிராஜ--ஞகியஸ்ரீசுவாமிகேளும் அடியேனும் உம்முடை--ய கில்பஞனுஸரணம் ரதத்தைகொண்டு--போய்காட்டைக்காண்பித்து.

(சேயநல்வுறுதி-எ.து.) பொருந்திய உறுதி--களானவார்த்தைகளையும் சுவாமிதேவரீர் வனத்திற்குப்போகலாகாதுபோகுமாயிருந்தா--ல் பிதா துக்கமடைவார்- என்றுபலபலவா--ர்த்தைகளையுஞ்சொன்னவஞகிலும் அதை கேள்க்காமல்- (வேயுயர்-எ.து.) பசுமூங்கி--லுகள் உயர்ந்துநிற்கப்பட்ட காட்டிற்கு அந்தராமசுவாமியானவரும் தம்பியாகிய இளையசுவாமியும் மிதிலாதிபஞகிய ஜனக மஹாராஜாவின் புத்திரியாகியஜானகியம்ம--னுமாக. (போயினரிரேழாண்டில்-எ.து.) போயினோர்கள் ஈ·ரேழுபதிநாலுஸம்வல் சரம்முடிந்தால் வந்துசேருவார்கள் அதை குறித்து நீர்புலம்பி துக்கிக்கலாகாதே ராஜனே-

ஐயோஐயோவாராய்தெளசலையேன-க்கு நாலுஸந்ததிகளிருந்தும் ஒருவருமென் சமீபம்-

இல்லாமல் புத்திரசோகத்தினால் நான் மரணமடைய
வேண்டுமென்ற சாபமுண்டும் அதுயேதென்றால் ஆதிநா
ளாயில் வனத்தில் வேட்டையாடச்சென்று தொள்ளாயி-
-ரத்தி தொண்ணூற்றிஒன்பது ஆனைகளையும் வேட்-
-டையாடி ஒராணையைக்கூடி அம்பெய்யவேணும்
என்று பாடிவீட்டில் இருக்கும்போது பிரம்மகோ-
-த்திரத்தில் காசிபமஹாரிஷியின் புத்திரன் ஜலபோ-
-ஜனன் அவருடைய புத்திரன் சுரோசனன் என்ப-
-வன் தன்னுடைய மாதாபிதாக்கள் குருடர்கள் க-
-ண்தெரியாத அவர்களுக்கு ஜலம் கொடுக்க குட-
-த்தில் மொகுந்தபோது ஆனையாகிலும் தண்ணீர் கு-
-டிப்பதென்று நினைந்து நாதபேதியென்னும் அஸ்-
-த்திரம் தொடுத்தபோது குழந்தையின் மார்பில்
ப்பட்டு ரோதனஞ்செய்யவும் பாமரர்த்தமெல்லா
-மென்னிடஞ்சொல்லி இறந்துபோகவும் நானும் ஜ-
-லத்தை எடுத்து மாதாபிதாக்களிடம் சேதியைசொ-
-ன்னபோது காட்டாக்கினியில் வீழ்ந்து நா-
-ங்கள் இறந்துவிடுவோம் எங்களுக்கு புத்திர
சோகத்தால் மரணமடையவேண்டிவந்ததுபோல்
நீயும் புத்திரசோகத்தால் மரணமடையவேண்டு
மென்று சபித்த சாபம் எனக்கு ஸபலமாக
வந்தது வாராய் கௌசலையே என் பிராணன்
மேல் துரத்திவருகிறது ஐயயோ வாராய் ராம
ஹேராமகுமாரா ராமராம ஹேவ

கவி

நோயும் இன்றி நோன் கதிர் வாள் வேல் இவை இ-
ன்றி- மாயும் செல்வம் மக்களினாலோ மாமன்னன்.
காயும் புள்ளிக் காற்கடம் நாகம் கனி வாழை.
வேயும் போன்று என்னை செய்யுன் விதியாலே. (13)

(இ-ள்.) ஐயோ ஐயோ வாரீர் கணவா உமக்கு இந்த மரணாவஸ்தை வந்து பாதித்தது என்ன விபரீதம் ஸாதாரணமாக உலகத்திலுள்ள ஜீவராசிகள் விசேஷமாக எண்ணப்படாநின்ற மனுஷியராதிகள் மரணமடைவதற்கு ஹேதுவாகிய வாத பித்த சிலேஷ்மாதிகளான திரிதோஷ ஜன்னியங்களான நாலாயிரத்திநானூற்றி நாற்பத்தியெட்டு வகை வியாதிகளில் வல்ல விதத்திலுண்டான ஒருவியாதிதானோ அதுவுமல்ல கூர்மையான வேலாயுதம் வாளாயுதம் இவைகளினால் வெட்டு, குத்து முதலானவைகளினாலுமல்லாமல்

(மாயும் செல்வம் - எ-து.) மாய்ந்து கதாவ சேஷ்ஷக இஹலோக வாசம் வெடியாநின்ற இந்த செய்கையானது புத்திர சோகத்தினாலல்லவோ நிர்த்தயவானான உமக்கு யாமெண்ணும் தர்மபரிபாலனஞ்செய்வதையும் விட்டு ராஜாதிராஜனே ஹே கணவா

(காயும் - எ-து.) உணர்ந்த அழகினையுடைய நண்டு பாம்பு காய்களையுடைய வாழை அல்லாமல்

(வேயும் - எ-து.) வேயானமூங்கில் வர்க்கங்கள் இவைகளுக்கு உற்பாதனங்களான சந்ததிகள் உற்பத்தியாகாநின்ற காலம் நாசம் ஸம்பவிக்கு

அதுபோல் உமது விதியான ஈசுவரகல்பிதத்தி-
னில் மரணமடைய வேண்டி வந்ததோ கணவா.

கவி.

அருந்தோரணைச்சம்பரனைப்பண்டமர்வென்றுய்
இருந்தார்வானோர் உன் அருளாலே இனிதிருந்தாள்
விருந்தாகின்றுயெங்கினைவிட்டாய்வழிபாராய்
பொருந்தேனையாவென்னையிழந்திப்புவிமேலே.(14)

(இ-ள்.) அருமையென்னும் பெரிதான தேரையுடை-
-ய சம்பரன் அஷ்டதிக்குகளிலிருந்தும் மேல்
கீழான ஆகாசபாதாளத்திலிருந்தும் சத்து-
-ருக்களின் பாணங்களாவது மற்று பதினெ-
-ட்டுவகையான ஆயுதவிசேஷங்களில் ஏ-
-தாவதும் ஏல்க்காமல் பத்திரமாக பாதுகா-
-வலோடுகூடி தேவலோகத்தில் சென்று தனது
சங்கமாகிய அறுபத்தாறுகோடி அசுரவர்க்க-
-ங்களினும் ஸஹோதரர்களென்னும் நவ-
-வீரர்களான தம்பிமார்களாலும் இந்திராதிமு-
-ப்பத்திமுக்கோடி தேவர்களையும் சொர்க்க-
-த்திலிருந்து ஆட்டி துரத்தி இந்திரபட்டம் தா-
-னே தனதாக கைபற்றி சொர்க்கலோகமடக்கி
வாழாநின்ற சம்பராதிகளான பத்துஅசுரர்-
-களையும் அநுசராதிகளான பேர்களையும் உம
து திவ்வியாஸ்த்திர பிரயோகமான நாகபேதி
நிஜல்பேதி முதலான யுத்தமுறைமையினலே
அசுரவர்க்கங்களைக்கொன்று விஜயமடையக்
கூடின ஒருவரல்லவோ கணவா.(இருந்தார்-ஏ.து)
இந்திராதி தேவர்கள் சுரக்ஷிதமாக இருந்துவாசம்

செய்யகூடின பேர்களென்றும் இனிதென்னும் சுக-
-மாக இதுகாலமத்தாயும் தேவரீர்கொடுக்காதென்ற
சுகபோகபாக்கியங்களை அனுபவித்துவருகிறோர்க-
-ளென்று அந்ததேவகன்னிகைகளான ஊர்வசியாதிக-
-ளானபேர்கள் உமது வீரபராக்கிரமங்களைசொல்லி
யதேஷ்டமாக உம்மைக்குறித்துமங்களகீதங்களை
ஆடியும் பாடியும் வந்தோஷிக்காதென்ற தேவசமூஹ-
-த்துக்கு நேர்வழியாக அவரால் அபிவாத்தியங்களேற்க

(விருத்தாகின்றய — எ-து-) ஒருவிருத்தென்னும்
அதிதியைப்போல் தேவஸமூஹத்தில்சென்று சேரு-
-வதற்கு எம்போலிகளையெல்லாம் கைவிட்டு ப-
-குவென்னும் சிரஞ்சீவியென்றுண்டான உமது
ஆயுஷ்காலம்முடிந்ததோ ஐயயோ உன்னையிழந்து
உபேக்ஷித்தவராக உமது பத்னிமார்களான பெண்
வர்க்கங்கள்

(பொருந்தேணயா— எ-து-) இனிஇந்தபூமண்டல-
-வாசம் க்ஷமாபூர்வமாக செய்யமாட்டோம்ராஜனே

கங்கைப்படலம்- கவி-

அரியதாம் உவப்ப உள்ளத்தன்பினல்அமைந்தகாதல்
தெரிதரக்கொணர்ந்த என்றல்அமிர்தினும்சீர்த்ததன்-
றே- பரிவினிற்றழீஇயஎன்னிற் பவித்திரம்எம் -
அனோர்க்கும்- உரியன இனிதில்நாமும் உண்டனம்
அன்றேவின்றே- (1) அவதாரிகை-

இப்படி கௌசலியை முதலான அறுபத்தினாயிரம்
பத்னிமார்கள் ஸமூஹமாக ரோதனஞ்செய்-
யாதென்ற விலாபத்துவனியை கேட்டு வஸிட்டர்

ஸமீபத்தில் சென்று அந்த ஸ்தரீ வர்க்கங்களை
ஸாந்தனப்படுத்தி இந்த க்ஷணமாக நீங்கள் மரண
மடையகூடாது சந்ததிகளோடுகூடிய கௌசலியை
கைகேகி, சுமித்திரை இந்த ஜடத்தை பாதுகாவ
லிருக்கவேண்டும் மிக்குண்டான பத்னிமார்கள்
ஸம்ஸ்கார காலத்தில் சிதாக்கினியில் சாடி
மரணமடைந்தாலும் குற்றமில்லையென்று சொ-
-ல்லி அந்த தசரதராஜாவின் ஜடத்தை தை-
-லத்தோணியில் பத்திரமாக்கி பாதுகாவலில்
இருக்க. இப்பால் கேகயராஜ்யத்துக்கு தசரதர்
எழுதினல் போவுண்டான ஒரு பத்திரமானதை
வசிட்டர் தீட்டிப்பிட்டு ஒரு தூதுவன் கரத்தில்
கொடுத்து ராஜதாணியிலுண்டான ஸம்பவங்க-
-ளை ஒன்றும் வெளிப்படுத்தாமல் தசரதரா-
-ஜாவை கொடுத்தனுப்பாரென்ற பத்திரம் பரதன்
ரடந்துவாயித்து வரவேண்டுமென்று சொல்லி
கேகயராஜன் கரத்தில் கொடுக்கதூதனுப்பிதூது-
-வன்போக.

இப்பால் சுவாமியும் தேவியும் இளையசுவாமி-
-யும் கங்கயின் தீரத்துக்கு பிரயாணஞ்செய்து
வர சூரியதேவர் பொழுதுசென்று ஸாயாஹ்ன-
-காலம் வரைக்கும் சென்று இங்குதீ விருக்ஷமா-
-ன ஒருமரத்தின் கீழே கங்கையான ஒரு புண்-
-ணிய நதியை கண்டு நமஸ்கரித்து அந்த புண்-
-ணியவாஹினியில் ஸ்நாணஞ்செய்து இந்த
மார்க்கவிக்கினமான நதியைஎப்படி தரணம்

செய்வோமென்று ஆலோசித்து திற்க்க தக்ஷிணைத்
-மான கிருஷ்ணவேதபுரமென்னும் கிராமத்தில்
-திலகிக்காதென்ற திஷாத பிறமுகனை குறை
பதிவோரங்களும் தோணிகள் வஞ்சிகளை கட
யுறப்பித்து ஆகதர்கள் இன்னார் இனியார் எ
காணிக்கைகளான திரவியத்துக்கு தேன்
முதலானவைகளையெடுத்து தனது ஓடத்
ஆரோஹணஞ்செய்து வடபால் வந்து சுவாமி
சமீபத்தில் சென்று தீர்க்க தண்ட நமஸ்கா
செய்து எளியவென்ன அடியேன் கொண்டுவ
காணிக்கைகளை சுவீகரித்து அடியேன் பே
கிருபைசெய்யவேண்டும் எளியவன் திஷாதம்
சத்தில் உள்ப்படாதென்றவேடன் இந்த கிருஷ்ணகி
புரவாசிகளான கிராமவாசிகளுக்கு தலை
என்று தன்னைதெரியப்படுத்தி அஞ்சலிஹஸ்த
தில் க்காதென்ற காலத்தில் சுவாமியானவரும்
னுடைய பக்தி பாரம்பியமானதை கண்டு ஸ
வசச்சொல்லி அந்த குறைவிடத்தில்ச் சந்தோஷ
சொல்.

(அரியதாமுவப்ப—எ-து-) அபூர்வமான
-யத்தினால் ஆசையொடுகூடி கொண்டுவந்த
-த்துக்கள் தேன், மீன், தினை, முதலான பதா
என்பக்தனுகியதீ எங்களுக்குலபிக்க அ
வஸ்த்துவாகிலும் பிறியகரமாகிலும் தை
-திருந்ததான ஆருவிதரஸங்களில் ரசு
-கிபுஜித்து மனஸந்தோஷத்தோடு கூடிர

அனுபவித்து பரிபூர்ண்ணமாக பக்ஷியாற்றி உண்பேரில்
ஸந்தோஷமடையும் என்றுநினைத்து பக்திபூர்வ
மாக கொண்டுவந்த வகைகளையென்று உன்முகத்
தை பார்த்தால் பார்த்தபேர்களுக்கெல்லாம் நீ
சொல்லாமல் தானே உன்பக்தியையும் விவேகத்-
-தையும் உன்முகசை தண்ணியத்தால்

(தெரிதர கொணர்ந்த — எ-து.) தெரியத்தக்க
அபூர்வவஸ்துவாகிலும் உங்களுடைய பிரியகர
மான பக்ஷியமாகிலுமென்று தெரிந்தவனே நான்.
பக்தனை நீ கொடுக்கிறதென்ற அதிதிபூஜையான ஸாத-
-னங்கள் ஸல்க்கரிக்கிறதென்ற காலத்தில் அநுஉ-
-த்தமமென்றோ மத்தியமமென்றோ நிஷேத்திய
மென்றோ பரிகணிக்ககூடாது கொடுக்க
ப்பட்ட சுரீரியானவனுடைய ஆதரவையும்
விவேகத்தையும் பரிகணித்து இந்த வஸ்
த்துக்களை பக்ஷியங்களை அபக்ஷியங்க
ளென்று நாங்கள் பூர்வகாலமுழுதும் நி
ரோதித்து பக்தனை நீ தந்தபோது
தல்க்ஷணமே அங்கீகரித்துக்கொண்டேன்
குசேலனே-

(பரிவின்ற பூஜிய — எ-து.) பரிவென்னும்
ஸந்தோஷமாக கொடுக்குமாயிருந்தால் கொ-
-டுக்கிறதென்ற வஸ்து பக்ஷியயோக்கியமோ அப
க்ஷியவஸ்துவோ என்ற பிரஸ்னமேயில்லை.
பக்தனைவன் கொடுத்தவஸ்து பவித்திர
மென்னும் உத்கிருஷ்டமானது- எங்களைப்போல்

உண்டான பேர்களுக்கும் பிரம்ம க்ஷத்திரிய
கோத்திர ஜாதிகளான பேர்களுக்கும்

(உறியனவினிது — எ-து-) உறியதென்னும் எ-
-த்தனையோ இனிதாகிலும் ஆனதினால் கொடுக்க
ப்பட்ட வஸ்துக்களை தேவாமிர்தம்போல் அ-
நுபவித்தோம்

ஒப்புடன்முகமலர்ந்தே உபசரித்துண்மைபேசி
உப்பில்லாகூழிட்டாலும் உண்பதேஅமிர்தமாகும்
முப்பழமொடுபாலன்னம்முகங்கடுத்திடுவாரா-
யின்- தப்பியபசியினோடு கடும்பசியாகுந்தானே-

என்ற அருதிவாக்கியம்போல் நீ ஒருவன்
எங்களை ஸல்கரித்து வணங்கின காலத்தில்
எங்களுடைய பசிதாகமோகாதிகளெல்லாம்
தீர்த்தது அல்லாமல் நீவிபரீதமாக நதிக்கடா
-துகேட்டயோ குகனே-

என்று சுவாமியானவர் சொல்லி அந்த பக்ஷியவ-
-ஸ்துக்களை தேவியும் இளையசுவாமியும் எடுத்து
மறுபடியும் குகன் கரத்தில் கொடுத்து குகன் அடி-
-யேனால் செய்யவேண்டின உதவியென்னவென்று
சொன்னபோது சுவாமியானவரும் குகனைப்பார்த்து
இந்தராத்திரிகாலம் உன்னால் செய்யதகுந்த ஸகா-
-யங்கள் ஒன்றுமில்லை நாளை சூரியோதயகாலத்தில் உ-
-னது நௌகயான தோணியை கொண்டுவந்து எங்களை
மறுதீரங்கடத்திவிடவேண்டுமென்று சொல்ல சுவாமி
இந்த துஷ்டமிர்கங்களினால் உபத்திரவமேல்க்கொ-
-ண்ற இந்தவடதீரத்தில் அதிவஸிக்காமல் அடியேனுடைய

டியான வசதியிடம் போகலாம் அல்லவென்று வந்தால்
ந்த பிரமிருகங்களை ஆட்டி தூரத்தி உமக்கு பா-
காவலாக அடியேன் இவிடத்தில் நில்க்கலாமெ-
ன்று குஹனென் சொன்னபோது சுவாமியானவ-
ம் குஹன் பேரில் ஸந்தோஷித்து சொல்.

கலி.

ங்கரெறிணய வீரா பின்னரும் செப்பக்கேளாய்-
ங்குறை ந்தெறிநீர்க்கங்கை ஏறுதும் நாளையாணர்
பாங்குநின் சுற்றத்தோடும் போயுவந்திணிதுன்னூரில்
ங்கிநீராவாயோடும் சாருதிவிடியவின்றே. (2)

(இ-ள்.) அதோவாராய் வீரா குஹனே- நீ ஏவன்
த்தரமாத்திரம் ஆபல் சஹாயியாக ராப்பகல்
பதுமில்லாமல் ஸஹாயிக்க ஸன்னத்தராகியுமென்று
சொல்லி எங்களுக்கு பாதுகாவலாக நில்க்கொ ஏன்று
பண்டுவித்தை என்னவென்று சொல்வேண்டிந்த
ரிசத்தில் பாதிக்காதன்று ஹிம்ஸாமிருகங்களை-
ன கோட்டி காட்டான கரடிமுதலானவைகளை
ணியாக தூரத்தி ரக்ஷாத்தும் நில்க்கா ஏன்று நீ
ஸிம்கம் போலுண்டான வீரகேஸரி என்று
தான் சொல்லவேணும் இனியும் உன்னிடத்தில்
சொல்லி போற்றியப்படுத்துவது ஏதென்றால்

(இங்குறை ந்தெறி—எ-து-) இவிடத்திலிரு
ந்து இந்த புண்ணியவாஹினியான கங்கையை தா-
ணஞ்செய்து போகுவது ஏது ஸந்தர்ப்பமென்றால்
ராத்திரி காலமானதினால் ஸந்தர்ப்பபோகிறதமல்ல-
உல்லோல கல்லோலங்களினும் அத்தியகாதமான
நீர்சுழிகளோடு கூடின இந்த கங்கையை நாளைய-
தினம் தரணஞ்செய்து கரையேறி நாங்கள் போக
வம் வேணும் இப்போது நீ உனது வாஸஸ்தானத்தில்செ

-ன்று. (பொங்குநின்-எ.து.) உன்னைசுவீகரிக்கு-
-ம்படி உத்தியமித்து நிற்கா நின்ற மித்ரங்களோ-
-டும் ஸஹாயிகளோடும் நீஎங்களைகூடாமல் தனி-
-யாகச்சென்று உன்னுடைய ஊரானகிராமத்தில்.

(தங்கிநீநாவாயோடும்-எ.து.) தங்கிநீ -
-சுகமாகராத்திரிகாலங்கழிந்து விசரமித்து ஸா-
வகாசமாக எங்களுக்கு கங்கயை கடக்கும்
பொருட்டான நாவாய் என்னும் தோணியினை-
-யுமெடுத்து பொழுதுவெடியும் பிரபாதகாலத்-
-தில் எங்களை சமீபித்துகொள்வாய்குஹனே.

கவி.

கார்குலாம்நிறமும் செய்யகண்களும் கொண்டு
தோன்றி-பார்க்குலாஞ்செல்வ நின்னையிங்ஙன-
-னம் பார்த்த கண்ணை-ஈர்கிலாகள்வனேன்
யானின்னலினிருக்கை நோக்கித்-தீர்கிலேனை-
-தையசெய்குவனடிமையின்றே- (3)

(இ.ள்.) சரணம்சுவாமின் உங்களை இந்த நிஸ்-
-ஹாயமான தீரபிரதேசத்தில்விட்டுபோக
பொறுமையில்லெ ஏதிஞலென்றல் (கார்க்கு-)
மேககூட்டத்தைப்போல்நிலமேகசியாமள
-மான உமது சரீரகாந்தியும் அடியேனைப்போ-
-லுண்டான எளியோர்கள்பேரில் தயாதாக்ஷ-
-ண்ணியமாக பார்வைசெய்யாநின்ற செந்தா-
-மரை தளம்போன்ற உமது கண்களும் அடி-
-யேன் தர்சனஞ்செய்து உம்மிடத்தில் பக்தி
சிரத்தை, பகுமான, சினேக, வினய,

-ங்களோடு கூடி ஆவேசமடைந்து வந்தேன்
உம்முடைய வைபவத்தை காணுங்காலத்தில்

(பார்க்குலாஞ்செல்வ—எ-து-)

பாரான விசாலமாகிய இந்த பிரபஞ்ச-
-த்துக்கெல்லாம் தன்னியனாகிய ஒருவன்
யாரென்றால் தேவரீர் மட்டுமல்லாமல்
மற்றொருவருமில்லை- அம்மட்டும் வைபவ-
-சாலியான உம்மை இத்தனையும் வரு-
-வாக நேரில் கண்டு தரிசிக்கிறதென்ற இ-
-ந்த காட்சியை

(நோக்கிலா —எ-து-) அடியேனுடைய
கண்ணாகிய நேத்ரேந்திரியத்தினாலே
கண்ணிமை வெட்டாமல் உம்முடை இந்த
சொரூபத்தை எனது மனதில் உள்ப்படுத்
தினவஞனை கள்வனென்னும் மோஷ்டா
வான ஒருவனைபோல் உம்மை இருதை
யத்தில் உள்ளடக்கஞ்செய்த அடியே
ன் பாஹியேந்திரியமான இந்தமா-
-ம்ஸ ஸக்ஷஸினால் உமது கேசாதிபா-
-தம் பாதாதிகேசம் பார்வைசெய்து
இன்னலென்னும் வாதசீதாதபங்களோ-
-டு கூடி அதிவகிக்கிறதென்ற இந்த துரந்த-
-மான துக்காவஸ்த்தையில்ப்பட்டு
இருக்கிறதென்ற இந்தவேளையில் அடி-
-யேன்போவதில்லை என்னிருக்கையான

வசதிக்கு போக காங்க்ஷையாகதெரி
யவில்லை அதர்முகமான மனோதிர்ட்டத்தில்
தேவரீரை கண்டானந்திக்காமென்ற அ-
-டியேன் ஊரில் போகுமாயிருந்தால்
அவ்வெழுச்சியைசெல்வாது நேத்திரங்களை-
யில்லை சரீரம் நெரங்கில்மாவது உம்-
மைவிட்டு தூரம் சகிக்கமுடியில்லை-ஆ-
ஞையினால் உமதுடக்கமாகநின்று உம-
க்கு வேண்டின தாவியகிர்த்தியங்களை
அடியேனை செய்துகொள்வேன் அதற்
க்காக காருண்ணியம் வேணும் சுவாமின்
வாராய் குறையனே உனது அபிஷ்டம்போல்செய்-
-ய உனதுபரிவாரங்களுக்கும் புத்திரகளத்திரா-
-திகளுக்கும் உனதுபிரிவினால் சங்கடம்வரகூ-
-டாது என்று நினைத்து சொன்னதாகிலும்குறையனே
சுவாமி உங்களுக்கு அதிவசிக்க மூர்ச்சையேற்-
-ன ஆயுதத்தினால் மூங்கில்களைவெட்டி பன்னியா-
-னத்தை நிர்மமித்து ராத்திரிகாலத்தில் புறங்கா-
-வலாக வில்லும் சரமெடுத்து சுற்றுஞ்சூழாக
நின்றுகொண்டிறேன்- இளையசுவாமி தேவரீரும்
அடியேனைபோல் சுவாமிக்கும் தேவிக்கும் காவ
-லாக பிரதக்ஷிணமாக சுற்றிதிரிந்து ஸஞ்சரித்து
நித்திரையும் இல்லாமல் இருக்க காரணமென்ன?
ஸங்கடம்சேறுது வாக கண்ணீர் பொழிக்க காரண-
-மென்ன? மனோவியாதியினால் உசுவாஸநிசுவாஸ-
-ங்கள் வர காரணமென்ன இளையசுவாமின் வா-
ராய்குறையனே மாதுருபித்துரோரண்ணியாபதிநாலு
ஸம்வல்சரம் வனவாஸத்துக்கு வந்துபெற்றேன் என்
றுஎல்லாபரமார்த்தங்களும் சொல்லிதெரிப்பித்தேன்



GUHA TAKES ŚRIRĀMA SĪTA AND LAKṢMAṆA BY BOAT TOTHE OPPOSITE BANK OF THE GANGES

குஹனே. ஆனால் இரண்டு பேர்களுக்கும் ஒரேலட்சியமா-
க சுவாமிக்கு காவலாக பிரபாதகாலம் வரைக்கும்
புறங்காவலாக நின்று கொள்வோம் குஹனே. அதோ
வாராய் தம்பி லட்சுமணா சூரியோதயமல்லவோ வ
ந்து சேர்ந்தது கங்கையில் சென்று சௌசாஸ்மன
ஸ்நான ஸந்தியாவந்தனாதிகளை பிரபாதகா-
ல நியமங்களை நிறவேற்றி கொள்வோம் தம்பி.
வாராய் குஹனே எங்களுக்கு மறுதீரம் போக
தோணிகளை கொண்டு வந்து கொள்ள வீரா.
சரணம் சுவாமி உமக்கு இவ்விடத்தில் அதிவாச
த்தை செய்யலாம் இவ்விடம் அதிவசிக்குமாயிருந்-
தால். கவி.

தேன் உள திணை உண்டால் தேவரும் நுகர்தற்காம்
ஊன் உள துணைநாயேம் உயிர் உள விளையாடக்
கான் உள புனலாடக் கங்கையும் உளதன்றே
நான் உள தனையும் நீ இனிதிரு நட எம்பால். (4)

(இ-ள்.) சரணம் ராமசந்திரதேவரீர் அயோத்தியா
நகரம் விட்டு மாதுபித்ரோராஞ்ஞையாக பதிநா-
லு ஸம்வல்சரகாலமென்னும் அவதிமட்டும் வனதீ
க்ஷையை நிறவேற்றும்பொருட்டு ஸோதரபத்னீஸ-
மேதராயிவரப்பட்டவரென்று இளையசுவாமி-
யின் வாக்குமூலமாயி எல்லா காரியகாரணங்க-
ளையும் அடியேன் தெரிக்கப்பட்டவனாகிலும் சு-
வாமி பயங்கரமான வனவாசத்துக்கு இவ்விடம்
விட்டுபோகவேணுமென்றில்லை. தேவர் பிரிய
மான வனத்தில் பசிதாஹங்களுக்கு வேண்டின
யாதொன்றுங்கிடையாது இவ்விடத்தில் அப்படியல்ல.

(தேன்உள — எ.து.) புஷ்பவர்க்கங்களிலிருந்து ஸம்-
-பாதிக்கிறதன்ற தேனாகிய மதுவும் திணையும் மிகுதியா-
-க உள்ளது தேவர்களாகிய ஸகல திவ்வியர்களும்
புஜிக்கப்படாதன்ற

(ஊன் உள — எ.து.) ஊனென்னும் மாம்ஸ வர்-
-க்கங்களும் லபிக்கின்றன. ஆபத்து விபத்து-
-க்களேற்காமல் உமக்கு ஒரு காவல்நாய் போல்
எளியவனை அடியேனும் அதிவசிக்கின்றன.
உமது பிராணேசுவரியான தேவியோடுகூடி
உல்லாஸ ஸல்லாபங்களைச் செய்து ரமிக்கும்படி
பிரகிர்தியா உல்பவிக்கப்பட்ட பூங்காவனங்க
ளும் ஸ்திதிசெய்கின்றன.

(கான் உளபுனல்லூட — எ.து) இந்தகாட்டில்வன-
-வாசகாலம்முச்சூடும் நீராடி தீர்த்தஸ்நானமென்று-
-ண்டான புண்ணிய கர்ம்மம் நிறைவேற்ற பவித்தி-
-ரமான கங்காநதியும் ஸ்திதிசெய்கின்றன. ஆயயா
அற்புதகரம் அதிவிசேஷம் இவ்வளவு அற்புதகரமா-
-யி இவிடத்தில் உமது ஸம்ரக்ஷணார்த்தம்

(நான் உள திணையும் — எ.து.) உமது ஸேவனங்களை
நிறைவேற்றும்பொருட்டு மற்றொருபேர்களையும்
விக்கினப்படாமல் அடியேனும் எதற்க்கும் ஸ-
-ன்னத்தனாயிருக்கின்றேன். இனி தென்னும் எத்துணை
யோ ஸந்தோஷகரமாக உமது தைன்னியதினை-
-ங்களைச் சுகவிர்த்தி ஆணை நிறைவேற்றிய திநாவு

ஸம்வத்ஸரகாலம் வரைக்கும் இவிடத்தில் அதிவா-
-சஞ்செய்தால் குற்றமென்ன ராமசந்திரா. மாத்திர-
-மல்ல இந்தகாலத்தில் வனவாசத்துக்குவேண்டின
எல்லாவிதஸாதனங்களும் ஸஹாயிகளும் அதிகமாக
லபிக்கும்பொருட்டு இவிடம் விட்டால் மற்றொரு
இவிடமுங்கிடையாது அந்தஸஹாயிகளும் ஸாத-
னங்களும் எதென்றால். கவி.

தோல்உளதுகில்போலும் சுவைஉள தொடர்மஞ்சம்
போல்உளபறண் வைகும் புரைஉளகடிதோடும்.
கால்சிலைபூணும் கைஉள கலிவானின்.
மேல்உளபொருள்எனும் விரைவொடுகொணர்வேம்.
ஆல். (5)

(இ-ள்.) உம்போலிகளானபேர்களுக்கும் நகரவா-
-சிகளுக்கும் பக்ஷியஸாதனங்களைப்போல் அனுபே-
-க்ஷணியமான வஸ்துவே சரீரரக்ஷாதனத்துக்-
-கு வேண்டினவஸ்த்தரம். அதற்குவேண்டின பட்டு
பீதாம்பரம் முதலானவைகளைப்போல் உண்டான
தோலுகளும் மரவுரிகளும் அடியேனுக்கு மிகுதியாக
லபிக்கின்றன. அவையென்னும் எத்தனையோ மாதுர்ய
மேற்கிளரசமுள்ளவஸ்துக்களுமிருக்கின்றன.

(தொடர்மஞ்சம்போலுள--எ-து.) அதிகமாக உம்முடைய
இஷ்டப்படி சயனஞ்செய்ய மணிமஞ்சம்போலுண்டான
பாடிவீடுகளும் இருக்கின்றன. சீக்கிரம் ஓடுவதற்-
க்குள்ள பாதவேகமுடையோரொடுகூடின பேர்கள் அனே-
கர் இருக்கின்றன.

(சிலைபூணுங்கைஉள--எ-து.) சிலையாண்டவில்லைப்பி-
டித்த வில்லாளிவீரர்கள் அனேகர் இருக்கின்றனர்
சப்தமுகரிதமாயிராநின்ற அந்தரிக்ஷத்தின் உபரிபி

ஷுண்டான-

(மேவுளைபொருளெனும் — எ-து-) எதொருவஸ்த்-
-துவும் சீக்கிரம் கொண்டுவருவோம் சுவாமின்
ஆஞ்ஞையினால் இந்தவனவாசம் அவதிகாலம்வ-
ரைக்கும் இவிடத்தில் நிறவேற்றினவென்று சுவாமி-
இன்னும் இதுகூடாமல்- கவி-

ஐயிருபத்தோடைந்தாயிரர் உளர் ஆணை
செய்குனர் கிளைவேடர் தேவநின்வலியார் ஆல்
உய்குதும் அடியேம் எம்குடிலிடை ஒருநாள் நீ
வைகுதி எனில் மேல் ஓர் வாழ்விலை பிறிதின்றே (6)

(இ-ள்-) ஒருலட்சத்தி ஐயாயிரம் பேர்கள் அன்னி-
-யானுவர்த்திகளாக ஸேவனமனுஷ்டிக்குவதற்
-க்காக இருக்கின்றன எதொருகிர்த்தியத்தை
எப்போது சொல்லுமாயிருந்தாலும்

(செய்குனர் — எ-து-) உடனே செய்து நிறவேற்று
ன்ற வில்லாளிவீரர்கள் அமிர்துபானஞ்செய்த
தேவர்களைபார்க்கிலும் ஆரோக்கியமுள்ள சக்த-
ர்கள்

(உய்குதுமடியேம் — எ-து-) இப்படி தேவரீர் வன-
-வாசஞ்செய்யாநின்ற அவதிகாலத்தில் அடியேனு-
-டைய குடிலான வசதியில் ஒருநாளாவது எனது
வரவேற்பானதை சுவீகரிக்கும்பொருட்டு

(வைகுதி — எ-து-) தேவரீர் வந்து அதிவசிக்-
குமாயிருந்தால் உம்மை அடியேன் ஆதரிக்கவே-
-தற்க்கு மேலாக கொண்டு பிறியகரமான ஒரு
வாழ்வான மறோபாக்கிய சுபதினம் மற்றொன்-
-றுமில்லையே ராமசந்திரா-

ஏழிரண்டாண்டின் வாவென்றியம்பினைதசனின்றே
என்று மாதாவு சொன்ன வாக்கியப்படி அக்ஷரா
ர்த்தத்தில் நிறைவேற்றி அயோத்தியில் செல்லுகிறவ-
-னாகிலும் தாசரதீ ராமனென்று ஸ்வயமேவ அபிமானிக்-
-கவேணுமானாலும் கிர்தகிர்த்தியனாக வரவேணு
மானாலும்

(புண்ணியநதி—எ.து.) புண்ணியநதிகளானகங்கை
தமி கோதாவரி, பம்பைமுதலான தீர்த்தாடனங்க
ளைசெய்து புனிதரான பரத்துவாசன் அத்திரி சரப
ங்கன் ஸுதீக்ஷ்ணர் அகஸ்த்தியர் முதலான மஹாஸ்
-ம்மாக்களை தர்சனஞ்செய்து அவர்களுக்குவேண்-
-டினவழிபாடுகளென்னும் ரக்ஷாமார்க்கங்களையும்
க்ஷத்திரியகுலஜாதனை நான் நிறைவேற்றி, வேண்-
-டின தேவ பிராம்மண பிரீதிக்குவேண்டின, ச-
-த்கர்ம்மங்களையும் இந்தவனவாசகாலத்தில் நி-
-றைவேற்றி சரயூநதிசூழ்ந்த உத்தரகோசல
அயோத்தியென்ற ராஜ்ஜியத்துக்கோ பாக்கியங்க-
-ளுக்கோ பரதன் அல்லாமல் ராமனை நான் விதே-
-யனல்லாதபடிக்கு.

(எண்ணிய—எ.து.) எண்ணிபரிகணிக்க அத்திர
மாத்திரமில்லாமல் கொஞ்சமான பதினாலுஸம்வ
-ல்ஸரம்முடித்து இதேமார்க்கமாக இவிடத்தில்வ-
-ந்து உன்னைகாணலாம் நீபரிபவிக்காமல் தோணி-
-களை கொண்டுவந்து மறுதீரம் விட்டுவிடுவாய்கு-
-ஹனே-

ஸ்வாமி உம்முடைய கல்பனுஸரணம் ராஜா
ஜிதங்களான தோணிகளை கொண்டுவந்துகொள்-

கிறேன். சுவாமி இந்த கங்காஜலத்தினால் உம்முடைய
பாதத்தை க்ஷாளனஞ்செய்து அந்த ஜலத்தை ஸிர-
-ஸிலும் ஒழித்து பானஞ்செய்து கொள்கிறேன் தேவ-
-ரீரும் தேவியும் இளைய சுவாமியும் இதில் ஆரோஹ-
-ணஞ்செய்து கொள்வீர். அடியேனுடைய பரிவார-
-ங்களையுஞ்சேர்த்து பலபல தோணிகளையும் சுற்-
-றுஞ்சூழாக பாதுகாவலாகவும் அகம்படி ஸேவித்து
வாத்திய கீதங்களினால் ஸந்தோஷகரமாக மறுதீர
தரணஞ்செய்து கொள்வோம் சுவாமின்.

தேவிஜானகீ தம்பி லட்சுமணனுடன் ராம்
இந்த கங்காதேவியை நமஸ்கரித்து கொள்வோம்
இதின் பூர்வகால சேதியை அனுஸ்மரிக்குமாயிருந்தா
ல் - மேத்தியாசுவமார்க்க பரிமார்க்கணை சம்பவஹிய
திவ்வியவ்ஷேதிம் கபிலகோபமஹாசுவாகிய:
தாதாணுதர்ப்பணபசே லிவபாகதேயாம்
பாகீரதீம் பகவதிம் சரணம் பஜாமஹ:

யாகாசுவத்தை தேடி செல்லாதன்ற சகரபுத்தி
ரர்களான அறுபதினாயிரம் பேர்களுடையும் அந்திய-
-மான ஸம்பவபரம்பரையால் அனந்தரம் அவருடை-
-ய ஊர்த்தகதிக்கு தேவாமிர்தம்போல் மிர்தஸஞ்சீ
வினியாயும் கபில்கோப மேல்க்குடி பிதாமஹர்க-
-ளின் ஸல்கீர்த்திக்கு வேண்டி செய்யாதன்ற தீர்-
-த்தஜலமாயி அனைசரமாக ஜனது பிராயத்னவி-
-சேஷத்தையும் நாமதேயத்தையும் உலகுள்ளவ
ரைக்கும் நிலநில்க்க பாகீரதராஜாவினுடைய பை-
-துருகநாமம் போலுண்டான நாமம் ஸ்திக்க கங்கா
பகவதியை நாங்கள் மீண்டும் வணங்குகின்றோம்.

சுவாமிவேடர்களாகியெ அடியேங்கள் கிலதோ
ணிபாட்டுகளெ பாடுகின்றேம்.

அம்பிளித்தெல்லணியுந்ந தம்புராண்றெ மகனெற்ற
கொம்பனுண்ணி தம்புரானே கும்பிடுந்தேன்றான்
இம்பமம்போடுயர்த்தேணம் கம்பமெல்லாமொழிச்
சென்றே. முமபில்வந்நு விளங்ஙணம் கவிதம் சொல்
லாண்.

நல்லமீன் கண்ணியாம் வாணி நல்லபோலெ துணெக்
கேணம். நல்லதும் வல்லதாயிடும் நீ துணெக்காறால்
சொல்பொங்ஙும் திச்சூரமமரும் முப்பாதின்னுடையவ
னே. ஐயப்பநின் கழலிணெளனெப்போழும் வந்தேன்.
வியாசனுகுருக்கன்மாரும் ஈசனுமீசதியோடெ.
ஞசையத்தினாழ கோடெ வாசஞ்செய்யேணம்.
ஆற்றுமோளம் பெருத்துள்ள கோயலில் தம்புராக்க
ண்மார். உற்றமாயோரோடிவெச்சு களிக்குந்நோம்.
ரண்டு நாலல்லவதி தண்டும் வெச்சுவலிக்கும்போ
ள். மிண்டாதெ வலிச்செந்நாகில் வலச்சிலேறும்.
பாட்டுபாடிகொண்டு வலிச்செங்கிலோ வலச்.
கிலின்னு. கோட்டமுண்டாமதினெருபாட்டுபாடுந்நேன்.
கேட்டுகொள்விணெங்கிலென்றே கூட்டுகாரெல்லா
ரும் திங்ஙள்கள். மேற்றுபாடி கொள்வின் தானங்கோ
ட்டகூடாதே. பண்டுபரிசாஞ்ஞயொரநசன்றெ மகளா
யி. உண்டாயிபோலொருமுக்கோண் சாதியில் கன்னி
யா. உறுவசி மேனகையென்னல்லபஸ்ரஸ்த்ரீவர்
க்கங்ஙளும். ஸர்வருமவளேக்கண்டால் நாணிச்சொ
ளிக்கும். கூரெக்கும் தலமுடியும் பூவொக்கும் மேனி
யுநல்ல. மாறெக்குமுலயுங்கண்டால் நல்லொருபெண்ண

காளியென்னுபெருமிட்டு வளர்த்திருக்குவோனவளே.

காளிந்தியில் தோணிகடத்தீடுவனுக்கி

ஓளவெங்குண்டனையுள்ள காளிந்தியேகடத்துவான்

காளியமவன்க்கு ஒதல்லும் பேடியுமில்ல

மல்சியகந்தமவள்க்கேற்றமுண்டாமதுகாரணமை

பின்னே - மல்சியகந்தியென்னபேருபிரசித்தமாயி

அங்ஙனே வாழுந்தகாலம் மாமுனிபராசரனும்

அங்ஙெழுந்நள்ளினான் வழிபோக்கினயிட்டே

பேடைமான் கண்ணாளே மின்னல்கொடிபோலக்கண்ட

நேரம் - நாடிக்காரனோயோ தலகுலுக்கிபோயி -

ஆவேசு - ஆவேசு

அதோவாறாய் குறனே இனிசித்திரகூடத்திற்க்கு

போம்வழி சொல்லவேண்டும் குறனே

சுவாமி உம்மோடுகூடி அடியேனும் வனத்திற்க்குவர

வேண்டுமாயிருந்தால் - கவி.

நெறியிடுநெறிவல்லேன் நேடினனென்வழுவாமல்

நறியன கனிகாயும் நறவிவை தரவல்லேன்

உறைவிடம் அமைவிப்பேன் ஒருநொடிவரைஉம்

மை - பிறிகிலென் உடன் ஏகபெறுகுவனெனிறயேன். (8)

(இ-ள்.) சரணம் ராமசந்திரா அடியேனை விட்ட

னுப்பி உம்போலிகள் தனியாக வனவாசத்துக்கோ

போகிறது அடியேனைகூடி வனவாசார்த்தம்

கொண்டுபோகவேண்டும் அப்படிபோகுமானால்

சொல்லாநின்றமார்க்கங்களைநேர்வழியாக

செல்லும்படி நிம்மளேன்னதங்களான கல்லு,

முன்னுமுதலானதுகள் தடைவராதபடிக்கு உங்களு-
-க்கு மார்க்கங்களை வெளிப்படுத்துவன். ஆசிரதர்க-
-ளான பக்தர்களுக்கு நெறியாகிய ஸன்மார்க்கங்க-
-ளை தானஞ்செய்ய ஸத்துவகுணபிரதானியாகிய
ஹேராமசந்திரா உமது தர்சனத்தினால்நேடிய
ஜன்மஸாபல்லியமாகவந்ததை இடைவேளை-
-யில்மோசப்படாமல் அடியேன் சம்பாதித்த-
-தை வீண்போக உம்மை விட்டு போகுமாயிரு-
-ந்தால் சரியில்லை. வழுவலென்னும்முறைதெ
ற்றமல் நசணியாகிய
(நெறியனகனி-எ.து.) எந்த காலத்திலும்
எது உசிதமாக தேவையோ அந்த காய்கனிபல
மூலபக்ஷியங்களை உமதுபுரோபாகத்தில்கொண்டு
வந்து நிரந்தரக்கவல்லமையுள்ளவனே அடியேன்
மாத்திரமல்ல உமக்கு அதிவாசஞ்செய்ய
(உறைவிடமமைவிப்பேன்-எ.து.) உறைவிட
-மான வசதிஅமைவித்து சுகவாசஞ்செய்யதந்த-
-ருவன் நொடியென்னும் ஒருக்ஷணநேரமாவது உ-
-ம்மை விட்டுபோக மனோதைரியமில்லை ஆசையினால்
இன்றுநான்முதற்க்கு
(பிறிகிலேன்—எ.து.) உம்மை பிரியாதபடிக்கு
தொட்டுதொடர்ந்து மணமபிடிச்சுசெல்லாநன்ற
நாயைப்போல் உமதுவனவாசகாலம்முழுதும்
உம்மைதொடர்ந்துஅடியேனும் வருவேன்கே-
-ட்டீரோசுவாமின் சுவானன்ஒருநாயைப்போல்

அடியேனை ஸங்கல்ப்பித்தால் போரும் ராமசந்திரா
அப்படி ஸங்கல்ப்பித்து குறைஞன அடியேனோடு
கூடி தேவரீர் வனவாசம் போகுமாயிருந்தால் அடி-
யேனால் செய்யாதென்ற கஷ்டிவகளான கிர்த்திய-
-ங்களேதென்றால் அதையும் தேவரீர் தாரணைசெ-
-ய்ய சொல்லுவன். கவி.

தீயனவனைகயாவும் திசை திசை செலநூறி.
தூயன உறைகானம் துருவினைவரவல்லேன்.
மேயினபொருள்நாடித் தருவேன் வினைமுற்றும்
ஏயினசெயவல்லேன் இருளினும் நெறிசெல்வேன். (9)

(இ-ள்.) தீயவைகளென்னும் கொடூரமாக ஸஹிக்க ஒண்ணாத உபத்திரவங்களை எந்தெந்த இடத்திலிருந்து உல்பவித்ததோ அவிடம்வ-ரைக்கும் சென்றொழியுமாறு நசிப்பித்துவிட்டு அக-கினிபாதைகளினும் காட்டுமிர்கங்களினும் பல-வகையான உபத்திரவங்களை சமிப்பித்து

(தூயனவுறைகான— எ-து.) தேவரீர் அதிவசிக்காதென்ற கோராரண்ணியம சாந்தம் ஸௌம்-மியம் சுந்தரமாகவரும்பொருட்டாக செய்யும் வல்லமையுள்ளவனே குறைஞன அடியேன்

(மேயினபொருள்— எ-து.) வனவாசகாலத்தில் தேவரீருக்குபிகாம்மியமாகிய வஸ்துக்கள் அடா குறைனே இன்றைக்கு இன்னின்னதுகள் வேணுமென்று தேவரீர் சொன்னால் அதையும் அனுவேஷணஞ்செய்து உமது திருஸன்னிதியில்

கொண்டுவந்து தருவேன் வினைகளாகிய எதேது -
கிர்த்தியங்களை செய்ய ஆக்ஞாபிக்குமோ
அதுகளை முற்றும் முடிப்பேன்
(ஏயினை செயவல்லேன் - எ-து.) யாதொன்றுக்
-கும் பிசகு வராதபடிக்கு நிறைவேற்றவல்-
-லமையுள்ள ஒருவனே இறைவனே அடியேன்
இருளான அந்தகாரம் நிறைந்த அர்த்தரா-
-த்திரிகாலம் ஏதொரு மார்க்கம் போகவே -
-ணுமானாலும் ஸன்னத்தனை ஒருவனே அ-
-டியேன் கேட்டீரோ சுவாமின் - கவி.
கல்லுவன் மலைமேலும் இவைஸயின்முதல் யாவும்
செல்லுவென் நெறிதூரம் செறிபுனல்தரவல்லேன்
வில்லினும் உளைன் ஒன்றும் வெருவலன் இருபோதும்
மல்லினும் உயர்தோளாய் மலர்அடி பிரியாதேன் (10)
(இ-ள்.) சுவாமி ராமசந்திரா கிவஸ
க்கிழங்கு முதலான பக்ஷியங்களுக்கு மலைமேல்
சென்று மலையை கல்லிப்பிளர்ந்து அந்தபல
மூலங்களை கொண்டுவருவேன் யாதொன்றுக்கும்
யாதொரு வேளையென்று வந்தாலும்
(செல்லுவென் நெறிதூரம் - எ-து.)
தூரமார்கத்தில் சென்று செறிபுனலை-
-ன்னும் ஸொச்ச ஜலத்தை கொண்டுவ-
-ந்து தருவதற்க்காக வல்லமை உள்ள ஒருவ-
-னே அடியேன் - இந்தவிதம் உம்முடைய கல்ப
னைகளையெல்லாம் செய்யஸன்னத்தனாகிலும்

(வில்லினம் உளன்—எ-து-) ஸ்வாமி ராமசந்த்தி-
-ரா உம்முடைய தேஹரக்ஷார்த்தமாக தேவரீர்
எடுக்கிறதன்ற வில்லுசரம் முதலானதுகள்
யாதொன்றிலும் பயமில்லாமல் யாதொன்-
-றையும் செய்யத்தக்க அபாரமான சக்-
-தியெவ்வளவோ அதற்கு ஒன்றியோ
-திக்கிறதன்ற சக்தியுள்ள ஒருவனே அ-
-டியேன்

(மல்லினும் உயர்—எ-து-) பலங்களில் உய-
-ர்ந்த பலத்தோடு கூடின ஸர்வஸக்தனை
ஹேராமசந்த்திரா? உமது உயிர்த்தோழனாக
அடியேனை கூடவைத்துக்கொண்டுபோ-
-கவேணும்-உம்முடைய பாதபத்மங்களை பி-
-ரியாமலிருக்க காருண்ணியஞ்செய்யவே-
-ண்டும் ஸ்வாமின் இப்படி அபேக்ஷிக்கிறதன்ற
அடியேனுடைய யாசனையான ஸேவனத்தை
தேவரீர் அங்கிகரிக்க அடியேன் பேறில் தயை
உண்டென்று வந்தால் உம்முடைய

கவி-

திருவளம் எனின் மற்றென் சேனையும் உடனே-
-கொண்-டொருவலென் இருபோதும் உறைகு-
-வென் உளர் ஆனோர்- மருவலர் எனின் முன்னே
மாளுவென் வசை இல்லென்- பொருவரு
மணிமார்பா போதுவென் உடனின்றே (11)

(இ-[illegible]ராமசந்த்ரதேவரீருடைய ஸன்மன
ஹேஞ்ஞை அடியேனோடு கூடி உண்டானவனவாச

த்துக்கு உண்டென்று வருமாயிருந்தால் மற்று
பலகாரியங்களுஞ்செய்ய அடியேன் ஸங்கல்ப-
-பித்தவன். எனது லட்சத்தையாயிரம் படன்-
-மார்களையும் அதிவேகமாக வரவழைத்து
உம்முடைய ஸன்னிதானத்தில் கொண்டுவந்து.
(பொருவலன் இருபோதும்-எ.து.) ஒரேலட்-
-சியமாக தேவரீருடைய பாதுகாவலென்னும்
நியமத்தில் நிறுத்தி உறைகுவர் உமது இரண்டு
பார்சுவங்களிலும் அதிவசிக்க கல்பனை கொடு-
-ப்பேன். அப்படி தமது ஆக்ஞையை அனுஸரிக்க ஒரு
லட்சத்தையாயிரம் பேர்கள் யோசிக்குமாயிரு-
ந்தால். (மருவலரெனின்-எ.து.)
மருவலராகிய பிரதிகூலிகள் சத்துருக்கள் எந்த
சக்தியார்ச்சித்தவரென்றுவந்தாலும் அவரை
செறுத்து தோற்பிக்க சத்துருக்களைமுன்னேறி
மாண்டு மரணமடைந்து போக வசையென்னும்
தைரிய குறைவு இல்லாத பேர்களாகிலும்
(பொருவரும் மணிமார்பா- எ.து.)
பொருந்தி ஒருபேர்களாலும் ஜயிக்க பிர-
-யாசமேறினை ஒப்பற்ற அழகோடுகூடினதான
விஜயஸ்ரீவிலசாநின்ற மார்போடுகூடின
ஹேராமசந்திரா உம்மோடுசேர்ந்து அ-
டியேனும் பரிவாரங்களும் வந்து
கொள்வோம் ஸ்வாமி.

வாராய் குறைனே மேலும் மேலும் இந்த விதமாக
ச்சொல்லாநின்ற உன்வார்த்தைகளை கேட்டேன்.
கவி.
அன்னது சொலுமையா காரிய மதுவாகும்.
என்னுயிரனையாய் நீயிளவலுன்னிளையனிந்.
நன்னுதலவணின்கேணனிர் கடனிவமெல்லாம்.
உன்னுடையதுநானுன்றெழிலுரிமையினுள்ளேன். (12)
(இ·ள்·) அதோவாராய் குறைனே நிஸ்ஹா
யர்களாய் மாதுருபித்தரோரான்னியயினால்
ராஜ்ஜியமும் பாக்கியமும் வெடிந்து பதிநாலு
ஸம்வல்சரம் வனவாசஞ்செய்யாநின்ற ஸோ-
-தரபத்னீஸமேதனுன எனக்கு வேண்டிய எதை-
-யும் செய்ய ஸன்னத்தனே நான் என்று சொ-
-ல்லி அந்தஸஹாயப்பிரார்த்தனையை சுவீகரி-
-க்க யாசனையைசெய்து என்பேரில் ஆர்த்தமா-
-ன பக்தியுள்ள ஒருவனேநீ- பக்தனைன்றால்
அந்தவிதமாகசொல்லும். அடிமையென்று
பாவனை செய்து வாயினால் சொல்லி சரீரச-
-க்தியினால் செய்யாதவன் ஸேவனமனுஷ்டி-
-க்காமல் நில்பது பூஷணமல்ல என்றுஆலோசனை
செய்து அந்தஸஹாயத்துக்கு வேண்டி சொல்-
-லுகிறயே. உத்தமபக்தனே நீ. ஐயனைன்னும்
எனது பிதாவை போலுண்டான வால்சல்லிய-
-த்தையுடைய ஹேகுறைனே. பிதாதன்ஸந்ததி-
-களின் பாவியை ஓர்த்து அந்தஸந்ததிகளிடத்தில்
சொல்லும் நிர்த்தேசம் போலயாகிலும் உனது

அபேக்ஷைகள்

(என்னுயிரனை — எ-து.) ஆனதினால் இந்தவிதமா-கபலதும்சொன்னவனாகிலும் என்னுடையபிரா-ணனுக்கு பிராணனாகிய ஆல்மஸஹியராகிலும் என் அருத்ததம்பி உடல்பிறப்பென்று சொல்வாரன்ற ஒருவனும் நீயே. எனது பரதன் லட்சுமணன் ச-த்துருக்கினன் என்றமூன்றுபேர்களும் உனது தம்பி மார்களாகிலும்

(நின்னுதலவனின் — எ-து.) நின்னுதலென்னும் சுந்தரமான பாலபிரதேசமுள்ளவனும் என் பத்னி யான ஜானகியானவள் உனது ரக்தபந்தத்தில் உன்-ப்பட்டவளாகிலும். அச்சஜலபரிபூர்ண்ணமான ஸ-ரயூநதியென்னும் புண்ணியவாஹினியால்சூழ்ந்த உத்தரகோசல அயோத்தியென்று சொல்வாரன்ற எனது மாதுருபூமி

(உன்னுடையது — எ-து.) உனது ஜன்மபூமியான ஒன்றாகிலும். இந்த தினம் வரைக்கும நாம் விபின்-னமானபேர்களல்ல. ஒருமாதா ஒருபிதா ஒரேரா-ஜ்ஜியம். நாமனை நானும் உனது தொழிலுக-ளைனும் ரக்ஷோர்த்தம் செய்யத்தகுந்த கிர்த்திய-ங்களுக்கு உடமையான ஒருவன். நாம் ஏகோதர ஸஹோதரர்கள் கேட்டயோதம்பி.

"ஸ்னேஹபந்தகிருதபந்தனம் மறைத்து"

மறைத்தான ஸ்னேஹபந்தத்தால் நாம் ஒன்றுசேரா-நன்ற கெட்டுறப்போடுகூடினபேர்களைன்று நிதரித்து

கொள்வாய்குறையே எனது வேர்பாடாகிய விஷ
யத்தில் உனக்கு அபாரமான ஸங்கடம் உண்டென்று
வருமாயிருந்தால் அந்த விஷயம் எப்பிரகாரமென்றல்.

கவி.

துன்புளதெனின் அன்றோ சுகம் உளது அன்றி
பின்புளதிடை மன்னும் பிரிவுளதென உன்னேல்.
முன்புளெம் ஒருநால்வேம் முடிவுளதென உன்னா
அன்புள இனி நாம் ஓர் ஐவர்கள் உளர் ஆனோம் (13)

(இ-ள்.) துக்கம் உண்டென்று வந்தாலல்லவோ சுகம் என்றுண்டான மறுவசம் காணுகிறது. துக்கமே இல்லையென்று வந்தால் அதுவே சுகம். அதுவுமல்லாமல் ஸ்னேஹ பந்தமென்றுண்டான பந்தம் நாம் ஏகோதர ஸஹோதரர்கள் பாவனை அதற்கு

(பின்புளதிடை மன்னும் — எ-து) பாவியில் மன்னி விசுவாசமாக பந்திக்குமாயிருந்தால் பிரிவென்ற வேர்ப்பட்ட பேர்களென்றே வியோகதுக்கமுள்ள பேர்களென்றே நாமனை இன்றேடுகூடி விஸ்மரிக்குமென்றே நீ உன்னி ஆலோசனை செய்யகூடாது

(முன்புளம் ஒரு — எ-து) முன்பு மாதாபிதாக்கள் ஸந்ததிகளில்லாமல் துக்கித்து அனந்தரம் நாலுபேர்கள் ஸந்ததிகள் ஜனித்து ஸந்தோஷித்து அந்த ஸந்தோஷத்துக்கு முடிவு விராமம் வராமல் இந்த ஸமயம் குஹனை உனது ஸந்தர்ஸனை ஹேதுவினால்

(அன்புள இனி நாம் — எ-து) அன்பென்னும் ஸ்னேஹ வாத்ஸல்லியம் நாம் பரஸ்பரமாக அங்கீகரித்து பந்தப்பட்ட ஸந்தோஷ காலமல்லவோ வந்து சேர்ந்து

வாராய் குஹனே ஸந்தோஷமல்லாமல் தான் யா-
-தொரு ஸங்கடத்தையும் காணவில்லை. எதிலெ-
-ன்றால். குசலம் கேள்க்காதென்ற பேர்களிடத்தில்
"இவர்கள் உளராம்" ஐந்து பேர்கள் ஸந்ததிகளுள்ள
பேர்கள் என்று வார்த்தை வசனிக்கும் பொருட்-
-டாக ஸந்தர்ப்பமும் வந்து சேர்ந்தது வாராய்
குஹனே. கவி.

படருறவனை உம்பிரான் உரைபகல் எல்லாம்
இடர்வறுபகையா போயான் என உரியாய் நீ
சுடர் உறுவடிவேலாய் சொன்முறைகடவேல்யான்.
வடதிசை வரும் அந்நாள் நின் உழைவருகின்றேன் (14)

(இ-ள்.) வாராய் குஹனே வாராய் தம்பி எனது
அபிஷேகவிக்கினம் நேரிடாதென்ற காலத்தில் அபி-
-ஷேகத்தை சிதிலப்படுத்தாதென்ற பேர்களை பந்தன-
ஞ்செய்து பூர்வாசாரப்பிரகாரமான எனது அபிஷே-
-கம் நிறைவேற்றி என்புரோபாகத்தில் வைத்து
குற்றவாளிகளானபேர்களை கொல்லும் அதை
நீர் காணவேண்டி வருமென்று சொல்லிவில்-
-லும் சாவமெடுத்துபுறப்படாதென்ற லட்சுமணன்
எனது வார்த்தை தன்றுதுகமாக கோபமாறி பரதன்
கைகேயிமாதா பித்ரா என்றிவரோடுகூடி தான்
ராஜ்ஜியத்தில் அதிவாசஞ்செய்யுமாயிருந்தால் சரிய-
ல்லவென்று தன்னுடைய

(இடர்வறுபகையா — எ-து.) தனது சரீரமே தன-
-க்கொரு சத்துருவாக தன்னை தகிப்பிக்குமென்று

ஸங்கல்பித்து நான் வனத்தில் அதிவசிக்காநின்ற
காலமெல்லாம் எனக்கொரு ரக்ஷாகவசம் போல
உன்னுடைய தம்பியான இந்தலட்சுமணன் உண்டும்.
வாராய் தம்பி குஹனே நீ போயி அதிவேகமாகசெ-
ன்று ராமனை என்னைப்போல் கீர்த்தியங்களை
நிறைவேற்ற பாத்தியனை உள்ளவனாகவும் என்று
நினைத்து என் ஆஞ்ஞியயானதை லங்கிக்கா-
மல் சிருங்கிபேரபுரத்தையும் உனது களத்திர
புத்திராதிகளையும் ஸம்ரக்ஷணம் செய்யவேணும்
(சுடர் உறு வடிவேலாய் — எ. து.)

சுடர்ப்பிரகாசம் பொருந்திய கூர்முனையோடுகூ-
-டின வேலாயுதபாணியான ஹே குஹனே நான் சொ-
ல்லும் வார்த்தையினுடைய முறையான தர்மங்களை
லங்கிக்காமல் அனுஷ்டிப்பது நல்லவாஸ்னேஹபந்த-
-ங்களின் லக்ஷணம்.

(வட திசை வரும் — எ. து.) நான் தக்ஷிணமுக
மாகவனவாசஞ்சென்று அவதிநாள் ஆகிய பதினாலு-
-வருஷம் கழிந்து வடதிசையான அயோத்தியாரா-
ஜ்ஜியம் வரும் நாளில் உனது வசதியில் வந்து சேருவேன்
குஹனே.

கவி-

அங்குள கிளைகாவற் கமைதியின் உளன் உம்பி
இங்குள கிளைகாவற் கியார் உளர் உரைசெய்யாய்
உன் கிளையென தன்றோ உறுதுயர் உறல் ஆமோ.
என் கிளை இது காஎன் றேவலின் இனிதின்றே. (15)

(இ. ள்.) அந்த பதினாலு ஸம்வல்ஸரகாலமளவும்

ராமனானவன் என் மாதாபிதாக்களை வெடித்து
என்னைத்தொடர்ந்து வாராதென்ற பௌராவலிகளையும்
கைவிட்டு வனவாசத்துக்கு ஏதோருமனஸ-
-மாதானத்தால் வரப்பட்டவனென்றால் அவிட-
-த்திலுண்டான அயோத்தியாதிவாசிகளையும்
எல்லாப்ரத்துவர்க்கங்களையும் ஸம்ரக்ஷணஞ்-
செய்ய உன் தம்பியாகிய பரதன் மாதுறுபித்த
ப்ரேராண்ணியயான கல்பனை அனுஸரித்துஇருக்கி
ன்றான்.

(இங்குளகிளைகாவற் — எ·து·) இங்குஇவிடத்தி
லிருந்து பிரயாணஞ்செய்யாதென்ற காலத்தில் நீயும்
என்னோடுகூடி வருவேனென்று சாட்டியமாகசொ
-ல்லுமாயிருந்தால் இந்தகிளைகளானகோத்திரசன்
மார்களனைபேர்களை ஸம்ரக்ஷணஞ்செய்ய யா-
-தொருபேர்களாகிலும் அங்கீகரிக்கும் நாதர்·நா
-தனில்லாத அனாதர்களாகவல்லவோ உன்னுடைய
வியோகம்ஹேதுவாக இந்த சிருங்கிவேரபுரம்
பரிணமிக்கிறது·

(உன்கிளைஎனதன்றே — எ·து·) அத்தியகாதமான
கெட்டுறப்பெண்ணும் பந்தமேறின நீயும் நானும்
பேதாபேதமில்லை அப்படியிருக்க உனது பிரஜை-
-களும் வேறல்ல உன்னை எனது ஸேவனார்த்தமா-
-க நான் கூட்டிசென்று இவருக்குச்சேராதென்ற
ஸங்கடம் அனுபவிக்கலாமோ என்றால் அவர்
ஸங்கடம் அனுபவிக்ககூடாது



SAGE BHARADHVĀJA

(என்கிளைஇது—எ.து.) என்கிளைகளான இந்த பிரஜாவிர்த்தங்களை நான் வருகிறமட்டும் நீகாவல் செய்து ரக்ஷிக்கவேணும் அந்தவிதம் எனக்காக செய்யாதென்ற ஸேவனத்தை இந்த விதமாக நிறவே-ற்றினல் போரும் மற்றென்றும் நீசெய்யவேண்டின கிர்த்தியமில்லை கேட்டயோகுறைனே.

## வனம்புகுப்படலம். கவி.

அகலிடம்நெடிதாளும் அமைதியைஅதுதீரப்
புகலிடம்எமதாகும்புரையிடை இதுதானில்
தகவிலதவவேடம் தழுவினைவருவானேன்
இகல்அடுசிலைவீர இளையவனொடும்இன்றே. (1)

(இ-ள்.) தாசரதீராமோறைம் தாசரதீராமோறை: பாரத்துவாஜஇருஷியே.

அதோவாராய்ராம வாராய்ராகவ அயோத்தியா மன்னனான உன்பிதாவு அடுத்த சுபமுகூர்த்தத்தில் பட்டாபிஷேகமென்று விளம்பரப்படுத்திஅவ-ரால் உனக்கு பைதுருகமாகலபிக்காதென்ற அக-லிடமென்னும் விசாலமாகியராஜ்ஜியத்தையும் பாக்கியத்தையும் தீர்க்ககாலவதியாக ஆண்டு பரிபாலனஞ்செய்யும் அமைதியென்னும் பிதுரு ஸாஸனமாகிய நிபந்தனையை கை ாழி-த்தஒவேளைபோலும்

(புகலிடம்எமதாகும்—எ.து.) புகலிடமென்-னும் ஆஸ்ரயஸ்தானம் எனது ஸன்னிதான-த்திலாகும் என்றுசொல்லிஎனதுஆஸ்ரமத்தில்

என்று சொல்லி எனது ஆஸ்ரமத்தில் இந்த தினத்-
-தில் க்ஷத்திரிய கோத்திர ஜாதர்களாகிய உங்க-
-ளைப்போலுண்டான ராஜகுமாரர்களுக்கு

(தகவில தவவேடம் - எ.து.) தகவென்ற ஔ-
சித்தியமில்லாமல் தவசிகளினுடைய வே-
-ஷமான மரவுரியும் ஜடையும் தரித்து
தபோவேஷமே ஆதரித்து தவசியைப்போ-
-ல் என் சமீபம் வருவதற்க்கு காரணமென்ன

(இகலடுசிலைவீரா - எ.து.) இகலென்னும்
சத்துருவிர்ந்தங்களை யுத்தஞ்செய்து ஜயிக்-
-குந்தன்மையுடைய வில்வாளிவீரனனறே
ராகவா இளையவலான ஸோதரனுடஞ்சேர்-
-ந்து இந்தவேஷவிதானங்களோடுகூடி வரக்-
-காரணமென்ன ராகவா.

சரணம் பரத்துவாஜ இருஷியே திரிகால
வேதியான உம்மிடத்தில் தபோவேஷதாரிக
-ளாக வனவாசத்துக்கு வந்த கூடமாகிய காரிய-
-ங்களையும் காரணங்களையும் சொல்லவேண்டி-
-னதில்லை. எல்லாம் தேவரீர் தெரியகூடிய ஒன்-
-றகிலும் மாதுருபித்ருராஞ்ஞியரான நி-
-ர்ப்பந்தத்தினால் பதிநாலு ஸம்வல்சரம்
வனதீக்ஷைக்கு வரப்பட்டவன் இருஷியே.

வாராய் ராமராகவ இந்தமார்க்கமாக
தபோவேஷதாரியாக வருமென்றுமுண்மை

நாண்ஸங்கல்ப்பித்தவன் அபிஷேகத்தை
உபேக்ஷித்துவந்த அடவுகளையும் இப்போது
தெரிந்தது அந்தவனவாசமென்றுண்டான
பதிநாலுஸம்வல்சரகாலம் இவிடத்தில் செய்து
முடிக்கவேண்டும். கவி.

நிறையும்நீர்மலர்நெடுங்கனிகிழங்குகாய்நேர்த்த
குறையும் தீயவை தூயவைகுறைவில எம்மோ-
டுறையும் இவ்வழி ஒருங்கினில் உயர்தவம்முயல்வா-
-ர்க்-கிறையும் ஈ-தலாதினியதோர் இடம் அரிதின்னும். (2)

(இ-ள்-) பரிபூரணமாக நிறைந்துநிற்கி-
-ன்ற ஜலாசயங்கள் அர்ச்சனைசெய்யும்படி
திவ்வியபுஷ்பங்களான, ஜாதி, கேதகி, துளசி,
மந்தார, கல்ஹார, கரவீரியாதிகளான
புஷ்பங்கள் நெடிதென்னும் லோபமில்லாமல்
காய்கள் கிழங்குகள் முதலான பக்ஷியவஸ்துக்க-
-ள், இருக்கின்றன

(குறையுந்தீயவை—எ-து-) தீயவைகளாகி-
-ய கொள்ளை கொலை வஞ்சனை துராசாரங்கள்
குறைந்தவிடமாகிலும். வேதபாடம், தேவபூஜை
தசேந்திரியநிக்கிரஹம், தீர்த்தமாடல், ஹிஸை,
பரித்தியாகம், நிவ்வியாஜம், முதலான, ஸல்கு-
-ணங்களுக்கு யாதொருகுறைவான லோப-
-வம் இங்கில்ஸனங்களைபோலுண்டான பேர்-
-களோடுகூடி

(உறையும் இவ்வழி— எ-து-)

தபோவேஷத்தை எடுத்து அதிவாசஞ்செய்யு-
மாயிருந்தால் இந்தவிதமாகிய மார்க்கத்தில்
யோஜித்து அஷ்டாங்கயோகங்களாகிய
யமம் நியமம் ஆஸனம் பிராணாயாமம், பிரத்-
தியாஹாரம், தியாரணை, தியானம் ஸமா-
தியென்னும் உபரி உபரியாக செய்யாநின்ற
யோகீசுவரர்களுக்கு
(இறையும் ஈ.தலா — எ-து-) சற்றேனும்
தபோபங்கம் வராதபடிக்கு காமம் வெகுளி
மயக்கம் முதலான இடையூறுகளில்லாமல்
தவசை நிறைவேற்ற இந்தபிரதேசமல்லாமல்
மற்றொருபிரதேசம் வேறில்லையென்று தெரிந்-
துகொள்ள இனியும் இந்தஸ்தலமாஹாத்மி-
யத்தை சொல்லுவன் ஏதென்றால்

கவி.

கங்கையாளொடுகரியவள் நாமகள் கலந்த
சங்கம் ஆதலிற் பிரியமலர் தாமரைச்செங்கண்
அங்கநாயக அயனுக்கும் அரும்பெறற்தீர்த்தம்
எங்கள்போலியர் தரத்ததன்றிருத்திராண்டின்றே

(இ-ள்) கங்கையென்ற புண்ணியவாஹினி
யோடு யமுனா ஸரஸ்வதியென்றுண்டான பு-
-ண்ணியநதிகள் ஸங்கமித்து தீர்த்தஸஞ்-
-ஞமாக திரிவேணியென்னும் தீர்த்தமாகிய
(சங்கமாதலிற் — எ-து-)
இந்த புண்ணியதீர்த்தத்தை எதேது

பேர்களையெல்லாம் ஆக்கிரமிக்கின்றபேர்க-
-ளென்றால் தாமரையென்னும் செந்தாமரைபோ-
-ல் அழகேறின கண்களையுடையவரானம
ஸத்தியலோகவாசியான ஸிருஷ்டி தொ-
-ழிலை நடத்தாநின்ற பிரம்மதேவருக்கும்
சுலபமாக லபிக்காமல் உள்ள அபூர்வமான
தீர்த்தம் ஒன்றே இந்த திரிவேணி.

(எங்கள்போலியர் - எ-து) எங்களை
ப்போலுண்டான பலபேர்களும் உனது ஸமீ-
-பத்தில் அதிவஸிக்க ஸஜ்ஜன ஸமூஹங்க-
-ளினால் கேந்திரீகரிக்கப்பட்ட இவிடத்தில்
அதிவாசஞ்செய்து கொள்வாய் ராகவா.

சரணம் பரத்துவாச இருஷியே

கவி.

பூண்டமாதவா வருளினால் அணைந்தனை இவிடம்
நீண்ட தன்றிது நிறைபுனலுட்கு நடுவாம்
மாண்ட சிந்தைய விவ்வழி வைகுவனென்றால்
ஈண்டயாவரு நெருங்குவரென்றனற் கிரங்கி (4)

(இ-ள்) அல்லும் பகலும் அனவரதகாலமும்
தவசை செய்யாநின்ற தீவிரவைராக்கிய
முள்ள தேவரீர் மாதவனென்னும் ஸித்தியும்
முக்தியும் பிராபிக்காநின்ற ஒருவரா-
-கிலும் அந்தரீதியாக வரும்படி அடி-
-யேனிடத்தில் உபதேசம் செய்தீரே.
இவிடம் இந்த பிரதேசம் அடியேனுடைய

உத்தேசத்துக்கும் தவசுக்கும் யோசிப்பான
இடமல்ல

(நீண்ட தென்றிது — எ-து.) நெறிபுனலென்-
-னும் சரயூர்நதியால் சூழும் அயோத்தியென்ற
நகரத்துக்கும் உத்தரகோசலமென்ற நாட்டுக்-
-கும் விதூரபிரதேசமான ஒருபிரதேசமல்லா-
-மலும் வனபிரதேசத்துக்கும் நாட்டுநகரத்து-
-க்கும் மத்தியஸ்தானமான முல்லைநிலமெ-
-ன்னும் பிரதேசமாகிலும் இவிடம் வனவா
சஞ்செய்ய சரியல்ல.

(மாண்ட கிழ்தைய — எ-து.) மாட்சிமையு-
-டைய மஹானுபாவ: ஹே இளகியே. இவி-
-டத்தில் ராமனென்பவன் வனவாசஞ்செய்கி
றவனென்று காதோடு காதாக கேட்டு நக-
-ரவாசிகள் தெரிந்தால்.

(ஈண்டுயாவரும் — எ-து.) ஈண்டு இவிடத்தி-
-ல் ஸகலமானபேர்களும் வந்து என்பேரிலு-
-ண்டான தயாதாக்ஷிண்ணியத்தினால் என்னை
வந்து நெருங்கி ஜனசூன்னியமான வனவா-
-சம் அல்லாமல் வந்து சேரும் ஆனதினால் இ-
-விடம் விட்டு மற்றொருபுண்ணியபிரதேசத்-
-துக்கு பிரயாணஞ்செய்தால் குற்றமுண்டோ
தகுதியான ஒருவிடத்தை நிர்த்தேசிக்குமா-
யிருந்தால் குற்றமில்லை இளகியே

வாநாய் ராமராகவயானும் உன்னிடத்தில்

உபசாரமாக சொல்லாநின்ற நிர்த்தேசங்கள்
யதார்த்தத்தில் உனக்கும் சுவீகாரயோக்கிய
மல்ல                    கவி.

ஆவதுள்ளதே அய்யகேள் ஐயிரண்டமைந்த
காவதப்பொழில் கப்புறங்கழிந்தபின் காண்டி.
மேவுகாதலின் வைகுதி விண்ணினும் இனிதால்.
தேவர்கைதொழும் சித்திரகூடம் என்றுளதால் (5)

(இ-ள்.) இந்தபதினாலு ஸம்வல்சரகாலத்து-
-க்குள்ளே தேவபிராம்மணாளுக்கு வேண்-
-டி துஷ்டநிக்ரஹம் சிஷ்டபரிபாலனஞ்செ-
-ய்து பூபாரத்தை தீர்க்குவதான ஒருமஹல்கிர்-
-த்தியத்தை முடிக்கும் ஸவிசேஷணமான காரி-
-யமுண்டும். ஐயனென்னும் ஜகல்பிதாவாயி ஆசிரி-
-தவல்ஸனனை நீ இவிடத்திலிருந்து தென்பால்
பத்துகாதம் போகுமானால்

(காவதப்பொழில் — எ-து.) சுகந்ததிரவியங்க-
-ள், விளையாநின்ற ஏலாங்கோலம் விழாலம் தி-
-ப்பலிமுதலாகிய கலுபடுதிரவியங்கள் நிறையும்
உத்தியானவனங்களையுங்கடந்து தென்பால்
பார்வைசெய்யுமாயிருந்தால்

(மேவுகாதலின் — எ-து.) அவிடமுள்ள திப்ப-
-விகாட்டை பிரியகரமாகத்தழுவி ஒழுகாநின்ற
காளிந்தியென்னும் நதியின் தீரமாக தெம்பால்
சென்று விண்ணுகிய ஸொர்க்கத்தைபா-
-ர்க்கிலும் ஸந்தோஷகரமாக அதிவாஸஞ்செய்

-ய தருந்த

(தேவர்கைதொழும் — எ-து.) முப்பத்திமுக்கோடி தேவர்களும் கைகூப்பித்தொழுகாநின்ற விசி-த்திரமான பளிங்குகளோடுகூடின சித்-திரகூடம் ஒன்று உள்ளது. அவிடத்தில் யதோ-சிதமாக வனவாசஞ்செய்துகொள்ளாராகவெ-கௌதமியென்னும் புண்ணியதீர்த்தத்தில் ஸ்-நானஞ்செய்து அந்தவனவாசம்முடிந்து உ-னது ஆக்ஞைகளை நிறைவேற்றி அயோத்தி-க்குபோகாநின்றகாலத்தில் இந்தவழியாக வரவே-ண்டும் ராகவா.

அவதாரிகை.

இப்படி சித்ரகூடத்திலிருக்கலாமென்று சொல்ல மறுநாள்காலையில் புறப்பட்டு காளி-ந்தியை வணங்கி இந்தநதியைப்படி கடக்-கிறதென்று ஆலோசிக்க லட்சுமணன் மூங்கில் வெட்டி தெப்பம் கட்டி அதுவழியாக ராம-ணையும் சீதையையும் நடத்தி கரையில்செ-ன்று ஒருபாலைவனமானதை கண்டு இந்த வனம் எரிந்துகொண்டிருக்கிறதே என்று பார்க்கிறபோது ஆதித்தன் சந்திரனைப்போ-ல தழைத்தும் புட்பங்களெல்லாம் பூத்தும் நிற்கிறதுகண்டு அதுவழியாக நடந்துசி-த்திரகூடஞ்சென்று அவிடத்திலுள்ள விசேஷ-ங்களையெல்லாம் சீதைக்குக்காட்டி ராமன்சொல்

சித்திரகூடப்படலம். கலி.

வாளும் வேலும் விட்டனாயின அணைய கண்மயிலே
தாளின் ஏலமும் மாலமும் தொடர் தரு சாரற்
நீளமாமலை துயில்வன நீர் உண்ட கமஞ்சூற்
காளமேகமும் நாகமும் தெரிகில காணாய். (1)

(இ-ள்.) வாளும் வேலும் எடுத்து யுத்தஞ் செய்யப்-
பட்ட யோத்தாக்கள் பரஸ்பரமாக நின்று
பிரயோகிக்கப்பட்ட வாளாயுதமும் வேலா-
-யுதமும் ஸங்கட்டனஞ் செய்து சலிக்காந-
-ன்ற தன்மைபோலுண்டான கண்களையுடை-
-ய மயில்போல சாயலொடு கூடியும் அன்னம்போ-
-ல் நடையழகோடு கூடினவளே ஜானகி

(தாளினேலமும் - எ-து.) நிஸ்சலமாக நிற்க-
-கா நின்ற இந்த சித்திரகூடபர்வதத்தினுடைய
தாழ்வரைகளாகிய ஸானுபிரதேசங்களில் ஏல
மென்றுள்ள விர்க்ஷங்கள் ஆலமென்றுள்ள அதை-
-யால் வடவிர்க்ஷமென்றுள்ள விர்க்ஷங்கள் தொ-
-டர்ந்து உன்னதமாக வளர்ந்து நீண்டு அக்கிரபாக-
-ங்கள் மலையுபரிமட்டுஞ்சென்று காற்றினால் அப்புறமும்
இப்புறமும் ஆடியாடி நிற்கப்பட்ட விர்க்ஷவிசே-
-ஷங்களினால் நிபிடீகிர்தமாகிய இந்த பர்வதஸா-
-னுவில்

(நீளமாமலை - எ-து.) மத்தகஜங்களானகா-
-ட்டானைகள் சுகநித்திரையை பிராபிக்கின்றன.
மலையின் உபரியில் நீருண்ட காளமேகங்கள் நீர்

பொழிந்து வர்ஷதாரைகளை பொழிகின்றன.
இப்படிஸாநுபிரதேசம்முதல் மூர்த்தனியான முகள்
பிரதேசம் வரை ஜலதாரைகளை யொழுக்கி சயி-
க்காநின்ற

(காளமேகமும்-எ.து.) காளமேகங்களான
கார்மேகங்கள் யேது! நாகங்களாகிய மத்தக-
-ஜங்கள்யேது! என்ற பேதாபேதங்கள் தெரியா-
-தபடிக்கு தூங்கி கிடக்கும் காட்டானைகளின-
-வும் தங்கிநிற்கும் கார்மேகங்களினுடைய
ஆபாதகூடம் அலங்கரிக்காநின்ற பர்வதத்தி-
-லுள்ள மேகமேதென்றும் ஆனையேதென்றும்
ஊன்னிடத்தில் சொல்ல வித்தியாசம் தெரிந்தவ
னல்லவே ஜானகி. கவி.

குருதிவாள்எனச்செவ்வரிபரந்தகட்குயிலே.
மருவிமால்வரைஉம்பரிற்குதிக்கின்றவருடை
சுருதிபோறறெளிமரகதக்கொழுஞ்சுடர்சுற்றப்
பருதிவானவன்பசும்பரிபுரைவனபாராய். (2)
(இ-ள்.) குருதியென்னும் ரக்தம் கறைபுரண்ட
வாளாயுதம்போல் சிவந்தரேகைகளோடு
கூடின விசாலமான நேத்திரங்களோடும் குயி-
-ல் போல் மொழியோடுங்கூடின ஹேஜா-
-னகீ பாருபாரு

(மருவிமால்வரை உம்பரிற்-எ.து.)
இந்த சித்திரகூடமான பர்வதத்தை
ஆசரயித்து அந்தபர்வதத்தின் நி-
-ம்மஞ்ஞென்னதாவ-

ஸத்தையில் இணங்கி அப்புறமும் இப்பு-
-றமும் குதித்து சாடி உம்பரென்னும் மேக
மூகளில் காட்டாடுகள் குதித்து ஏறுகின்ற
காலத்தில்

(சுருதிபோற்றெனிர் - எ-து-)

சுருதியான வேதங்களைப்போல் பிர-
-காசிக்கா நின்ற மரகதகல்களின் பிர-
காசமேற்று அந்த காட்டாடுகள் பிர-
-காசிக்குந்தன்மையை காணுமாயிரு-
-ந்தால்

(பருதிவானவன் - எ-து-) சூரியபகவா-
-ன் உதயகிரியில் நின்று உதிக்குங்கா-
-லத்தில் சூரியதேவருடைய ரதத்தில்
கெட்டப்பட்ட ஏழு பச்சை குதிரைக-
-ளான ஜயன், விஜயன், அஜயன், ஜி-
-தபிராணன், ஜிஸ்கிரமன், ஜிதக்ரோ-
-தன், மஞ்ஜுவேன் என்ற பச்சைகு-
-திரைகளைப்போல் விளங்குந்தன்-
-மையை நீயும் பார்த்தில் ஸயோ
ஜானகி. கவி

வடங்கொள் பூண் முலை மடமயிலே
மதக்கிதமா- அடங்குபேழ்வயிற்ற
ரவெரி அமைதொறும் தொடக்கி-
தடங்கள்தோறும் நின்றுவெ தண்ட
ஸஅயோத்தி - துடங்கும் மாணிக்கை

துகிற்கொடி நிகர்ப்பனநோக்காய். (3)

(இ-ள்) வடமென்னும் முலைக்கச்சையை-
யும் பூணென்னும் ஆபரணங்களையும் தரித்து அழ-
-கிய ஸ்தனபாரங்களையுடையவளாயும் மயில்
போல் சாயலோடுகூடினவளே ஜானகி. மதக-
-தமென்னும் தன்மதத்தை பொழியப்பட்-
-ட மத்தகசங்களைப்போல் ஓரே ஒருவழி-
-யென்னும் பெதனத்துவாரத்திலுல்
(அடங்கு பேழ் — எ-து) அடங்கி ஆசமன-
ஞ்செய்யாதென்ற பிளர்ந்த பெரியவாயோ-
-டு கூடின மலைபாம்புகள் உபெசிக்காந-
-ன்ற வளைகள் புது வர்ஷகாலத்தில் மு-
-ளைத்துயராநின்ற மூங்கில் குழைகளின்
அக்கிரபாகத்தில்பட்டு

(தடங்கள் — எ-து) தடங்களான மலை-
-வாரங்களின் ஒவ்வொரு இடத்தில் ஆடிநில்-
-க்காநின்ற தன்மைகளை காணுகிறபோது
அயோத்தியாநகரத்திலுண்டான
(நுடங்கும் மாளிகை — எ-து) மாளி-
கையினுடைய உப்பரிக்கையில் நிறு-
-த்திய கொடிகூறைகளைப்போல் ஆ-
-டிக்களிக்காநின்ற தன்மையை கா-
ணுகிறது வாராய் ஜானகி. கவி.
அளிக்கும் நாயகன் மாயைபுக்கடங்கி-
னன் என்னினும் - களிப்பிலிந்தியத்தி

யோகியை காக்கிலன் அதுபோல்.
ஒளித்துவைக்கனராயினும் உருத்தெரிகின்ற.
பளிக்கறைச்சிலபரிமுகமாக்களைப்பராய். (4)

(இ-ள்.) பல்லாயிர கோடி ஜீவஜால-
-ங்களையும் பாதுகாத்தருளாநின்ற ஸ்ரீமந்-
-நாராயணஸ்வாமியானவர் மாயை தன்னி-
-டத்தில் உண்டாக்கஞ்செய்து மாயைக்கதீ-
-னனாகி நிற்கும். மாயாமயனாகி மாயை
விட்டுவிடாமல்.

(களிப்பிலிந்திரியத்தி — எ.து.) களிப்பா-
-ன ஸந்தோஷத்தோடுகூடி ஸர்வ்வேந்-
-திரியங்களையும் ஜயிக்கப்பட்ட யோகீ-
-ஸ்வரர்களை மறையாதபடிக்கு தர்சன-
-ங்களை கொடுக்குந்தன்மை எதொரு-
-பிரகாரமோ அந்த தன்மைபோல்

(ஒளித்துவைக்கன — எ.து.) ஒளித்து
கூடமாக அதிவாசஞ்செய்யகூடினவ
ரென்றிருந்தாலும் அவருடைய வடிவான
சரீராகிர்தி இன்னவிதத்திலென்று நாம்
காணுவதற்க்காக

(பளிக்கறை — எ.து.) பளிங்கறை
யான மலையிருக்கில் அதிவாசஞ்செ-
-ய்யும் அசுவனி தேவகளானபேர்களைப்
நீ தர்சனஞ்செய்துகொள்ளஞானகீ

கவி

வில்லிவாங்கிய சில்லெனபொலிநுதல் விளைக்கே
வல்லிதாங்கழை தாக்கலில் வழிந்திழிபிரசம்
கொல்லிவாங்கிய குன்றவர்கொடி நெடுங்கவலை
கல்லிவாங்கிய குழிகளை நிறைப்பனகாணாய். (5)

(இ-ள்.) வில்லாளிவீரர்கள் வளைத்த வில்லைப்போல் வளைந்த புருவங்களோடும் பத்திரதீபம்போல் பிரகாசமுள்ளவளையும் சோபிக்கிறவளே ஜானகீ

(வல்லிதாங்கழை—எ-து.) வல்லிகளாகிய பெரியபெரிய கொடிகள் அமைகளானபெரியமூங்கில்களில் படர்ந்து அதினுடைய அக்கிரபாகத்திலுண்டான தேன்கூடுகள் கழைகளானமூங்கில்களில் அடித்து உடைந்து

(கொல்லிவாங்கிய—எ-து.) கொல்லியென்னும் கிழங்குகளைசூழ்ந்த தடுக்காருன்ற குறவர்கள் நெடியகொடிகளையுடைய கவலைக்கிழங்குகளைஎடுக்கிறபோது

(கல்லிவாங்கிய—எ-து.) கல்லிபிளர்ந்துவிஸ்தீர்ண்ணப்படுத்தினபோது அந்தகுழிகளில் நிறைந்து நிற்கும் தன்மையையும் நீபாரு பாருஜானகீ. கவி.

சீலம்இன்னதென்றருந்ததிக்கருளியதிருவே-நீலவண்டினம்படிந்தெழவளைந்துடன்நிமிர்வ-சேரவேங்கையின் கொம்பர்கள்பொன்மலர்தூவி- காலிற்நிற்றெழுதெழுவனநிகர்ப்பனகாணாய் (6)

(இ-ள்-) சீலமான பதிவிரதா தர்ம்மம் இன்ன பிரகாரம் என்று வசிஷ்ட பத்தினியான அருந்த-தி தேவிக்கும் அருளிசொல்லி கொடுக்கப்பட்ட திருவென்னும் ஸ்ரீமதியாகிய ஹே ஜாநகீ

(நீலவண்டினம் — எ-து-) நீலவண்டுகளான ஷட்பதங்கள் ஸமூஹமாகவந்திருந்து மகரந்தங்களையும் தேனுகளையும் புஜித்து தல்க்ஷணமே பறந்துபோகும்காலத்தில் (சோலைவெங்கையின்-எ-து-) சோலையானது-ஞ்சோலையின் சமீபமான வெங்கைமரத்தின் கொம்-புகள் தாழ்ந்தும்பொங்கியும் விளங்குகிறதை காணுகிறபோது நம்மைவரவேற்க்கும் பக்த-ர்கள் புஷ்பங்களை அர்ச்சனைசெய்து

(காலினிற்றொழு — எ-து-) பாதாபிவாத்தி-யஞ்செய்யுந்தன்மையைப்போல் ஸமாந்த-ரமுள்ளதாகவும் காண்பாய் ஜாநகீ. ஆன-தினால் நமக்கு அதிவாஸஞ்செய்ய நல்ல ஒரு பிரதேசமாகிய இந்த இடத்தில் தம்பியானவன் நிர்ம்மாணஞ்செய்யாதன்றோ இந்தபர்ண்ணசா-லையினுடைய வைபவங்களை பாருபாரு ஜாநகீ.

கவி.

மாயம் நீங்கிய சிந்தனைமாமறை
தூயபால்க்கடல் வைகுந்தம்சொல்லல் ஆம்
ஆயகங்கைஅரும்புனலன்னவே
ஏயஎம்பிசமைத்தன சாலையே. (7)

(இ-ள்-) மாயமென்னும் மதிமயக்கத்தை



DŪTAN (MESSENGER)

உபேக்ஷித்து நிர்ம்மலமான மனசைப்போலவும்

மாமறையென்னும் மஹத்தான வே-
-தங்களைபோலவும்

(தூயபால்க்கடல்—) தூயமென்னும் பரிசு-
-த்தமான பால்க்கடல் சூழ்ந்த வைகுந்தத்தை
போலவும்

(ஆயகங்கை — எ-து-) கங்காதீர்த்தத்தைபோல்
நிர்ம்மலமாயும் என்தம்பியானவன் கரகௌ-
-சலத்தினால் நிர்ம்மிக்கப்பட்ட இந்தபர்ண்ண-
-சாலைக்கு ஸமானமாக

(எம்பியம்பி—எ-து-) பூர்வோக்தசொல்லப்பட்ட
யாதொன்றைதான் சொன்னும் இதற்க்கு
ஸமஞ்ஞ வருகிறதில்லை அம்மட்டுமேன்மை
யுடைய இதற்க்கு இன்னும் சொல்லுமானால்

கவி.

மேவுகான மிதிலையர்கோன்மகள்
பூவின்மெல்லியபாதமும்போந்தன
தாவில் எம்பிகைசாலைசமைத்தன
யாவையாதும் இலக்கிவையாவதோ. (8)

(இ-ள்-) அனேகமான உத்தியானங்களினால்
சுந்தரமான மிதுலாநகரத்துக்கு ராஜாவா-
-ன ஜனகராஜாவுக்கு மகளாக மின்னல்
கொடிபோல் பிரகாசிக்காநன்றஜோனகி
இந்தபர்ண்ணசாலையானது

(பூவின்மெல்லியள்—எ-து-) பூவாகியதைய்வ

செந்தாமரையில் அதிவாஸஞ்செய்யாநின்ற
மஹாலட்சுமியின் பாதம்போல் மநோஹர-
-மான ஒன்றாகிலும்

(தூவில் எம்பினைக—எ.து.) ஒருபேர்க-
-ளாலும் ஜயிக்கமுடியாமல் வீரபராக்கிரமசா-
-லியான என் தம்பியானவன் தனதுகையினால்
யுக்திபூர்வகமாக செய்யப்பட்ட பர்ண-
சாலைக்கு

(யாவை—எ.து.) இதற்கு இணையென்-
-னும் ஸமானந்தரமாக யாதொன்றும் இல்லையே-
ஜானகீ-

## பள்ளி அடைப்படலம்.

அயோத்தியில் நின்று வந்த திருமுகம் கண்ட
பரதன் சேனைமுகத்தோடு கேகயராஜனை வ-
-ணங்கி புறப்பட்டு வருகிறபோது ராஜ்ஜிய-
-த்திலே யலங்காரமில்லாமல் துக்கித்திருக்கிறதை
க்கண்டு பரதன் தம்பியோடு சொல்- கவி.

ஏர்துறந்த வயலிளமைந்தர்தோள்
தார்துறந்தன தண்டலை நெல்லினும்
நீர்துறந்தன தாமரை நீத்தென
பார்துறந்தனள் பாக்கியச்செல்வியே- (1)

(இ-ள்-) அதோவாராய் தம்பி சத்துருக்கினா நாம்
நமது சைன்னியங்களை பொதுவழியாக அ-
-னுப்பி பிதுருஸந்நிதியில் சீக்கிரஞ்செல்ல
வேண்டுமென்று நினைத்து அயோத்தியாநகரத்-
-தின் சுற்றுஞ்சூழுமுண்டான நீர்பெருக்கங்களான

அருவியாறுகளைக்கடந்து வயல்வழியாகவருங்-
-காலத்தில் எல்லாம் அமங்களமாகக்கொண்டா-
-கிலும் காணுகிறது ஏதென்றல்

(ஏர்துறந்த — எ-து.) ஏரான உழவுதொ-
-ழில்களும் கொஞ்சதினமாக உபேக்ஷைசெ-
-ய்து கிடக்கா நின்ற வயல்களும் இளைஞ்த-
-ர்களான புவார்கள் தனது தோள்களினி-
-டத்தில் பூமாலைகள் உபேக்ஷித்தும் தண்டுலங்களான
தான்னியங்கள் விளையா நின்ற நெல்முதலான
தான்னியங்களுக்கும்

(நீர்துறந்தன — எ-து.) நீராகிய ஜலம் வய-
-லுகளுக்கும் தோப்புகளுக்கும் விடுகின்-
-றதையும் உபேக்ஷித்ததினுல் எல்லா இடங்க-
-ளும் வறள்பட்டுகிடக்கின்றன. தாமரை-
-யை உபேக்ஷை செய்து இந்த பூமியை ஆஸ்தான-
-மாக்கி அதிவாசஞ்செய்யா நின்ற மஹாலட்சுமி

(பார்துறந்தன் — எ-து.) ஸமிர்த்தமான வி-
-ஸ்தீர்ணத்தையுடைய பாரான இந்த அயோத்தியா
பூப்பிரதேசத்தை விட்டு பங்கையசெல்வியான
மஹாலட்சுமியானவள் வெடிந்துபோனவள்
தானேதம்பி. கவி.

பிதிர்ந்துசாறு பெருந்துறைமண்டிடச்
சிதிர்ந்துசிந்தி அழிந்தன தேங்கனி
முதிர்ந்து கொய்புனர் இன்மையின் முக்கமிழ்த்து
துதிர்ந்துலர்ந்தன ஒண்மலர் ஈட்டமே (2)



ŚATRUGHNA

தென்னை மரங்களிலுள்ள தேங்காய் குலைகள் சோதனையில்லாமல் அக்கிரபாகத்திலிருந்து குலை-
-யற்று பிதிர்ந்து நானா பிரகாரமாக விழுந்து உடைந்து இளநீர் தண்ணியானது பெருந்துறை-
-யான ஒரு ஜலவாஹினியைப்போல் ஒழுகவும்.

(சினைதந்துசிந்தி—எ-து) சினைதந்துசி-
-ன்னபின்னமாகவிழ்ந்து தேங்காய்கள்மு-
-தலான பலன்களெல்லாம் அழிந்துநாசப்பட்டு கிடக்கின்றன.

(முதிர்ந்துசொய்யுனர்—எ-து-) முதிர்ந்து பருவமானமுப்பெத்தி விளைவெடுக்காநின்ற நாதர்களில்லாமையினால் முப்பெத்தினதுகளும் இளங்காய்களும் பூக்களும்

(உதிர்ந்துவர்ந்தன—எ-து-) வகைபேதமில்-
-லாமல் தோப்பிலுள்ள பலவிர்க்ஷங்களின் பு-
-ஷ்பங்களும் கனிகளும் பழங்களும் ஈட்-
-டமென்னும் கூட்ட கூட்டமாயி அதிகரித்து இ-
-டக்கின்றனது வாராய் தம்பி- கவி.

ஓதுகின்றில கிள்ளையும் ஓதியர்
தூது சென்றில வந்தில தோழர்பால்
மோதுகின்றில பேரிமுழாவிழா
போதுகின்றில பொன்னணிவீதியே (3)

(கிள்.) கிள்ளைகளாகிய பஞ்சவர்ண்ணகிளி-
-கள் கர்ண்ணாநந்தகரமாக பேசாநின்ற

சப்தகோலாஹலங்களும் இல்லை- ஒதியர்க-
-ளுடைபெண்கள்

(தூதுசென்றில — எ-து-) அந்தகிளிகளை
தனது நண்பர்களான நாயகர்களிடத்தில்
தூதுபோகின்றதையும் காணகிறதில்லையேதம்பி-
அந்த காமுகிகளிடம் அவர்வருவதுமில்லை-

(மோதுகின்றில — எ-து-) மங்களவாத்திய-
-ங்கள் ஸந்தர்ப்போசிதமாக ஸப்திக்கவுமி-
-ல்லை- திருவிழாவாகிய உல்சவங்கள்

(போதுகின்றில — எ-து-) ஊர்வலமாக செ-
-ல்லாநின்ற பொன்மையமான வீதியில்
அந்தநகரபிரதக்ஷிணம் வரும் தன்மை-
-யும் காணவில்லையே தம்பி-     கவி-

பாடல்நீத்தன பண்ந்தொடர்பண்கு-
ழல்- ஆடல்நீத்த அரங்கொடகண்புனல்
கூடல்நீத்தன கூடிணைக் குளிகை
மாடம்நீத்தன மங்கலம் வள்ளையே- (4)

(இ-ள்-) சுருதிமதுரங்களான பலவிதவாத்திய
விசேஷங்களையும் பலவகைராகங்களான
வீணைவேணுநாதங்களையும் சுருதிமீட்டி
ஸமுஹகரணமாக ஆலபிக்காநின்ற ஸங்கீத
மேளங்களையும் உபேக்ஷைசெய்தன பலராக-
-ங்களிலுண்டான குழலோசைகளான கா-
-னங்களும் உபேக்ஷைசெய்துவிட்டன-

(ஆடல்நீத்த — எ-து.) நடனரங்கங்களான மேடைகளில்நின்று ஆடலென்னும் பல்வகை-யான நடனநாட்டியங்களை நடத்தாநின்ற நாடகஸபைகளில் நடர்களும் காணிகளும் உபேக்ஷை செய்துவிட்டன. விசாலம்பொருந்-தின ஜலபூர்ணமான தடாகங்களில் ஸ்-ஞானஞ்செய்யாநின்ற நீர்விளையாடும் பாகங்க-ளிலும்மொருபேர்களுமில்லை.

(கூடல்நீத்தன — எ-து.) மாலைகள் கூடுவது-மில்லை. கூடிகைகளாகிய மாளிகையின் உப்பரி-க்கையில்

(மாடநீத்தனள்—எ-து.) மங்கலவாத்தியங்கள் முழக்கிரஸிக்காநின்ற தன்மையும் ஒருபேர்களும் செய்துகாணவில்லையே தம்பி. கவி.

நகையிழந்தன வாண்முகநாறகிற்
புகையிழந்தன மாளிகை பொங்கழற்
சிகையிழந்தன தீவிகை தேமலர்
தொகையிழந்தன தோகையர் ஓதியே.(5)

(இ-ள்.) ஒருவருக்கொருவர் முகாமுகமாக காண்கிறபோது குசலஞ்சொல்லப்பட்ட அ-வஸ்த்தையான க்ஷேமான்வேஷணம் லே-சமாவது மில்லையென்றுமாத்திரமல்ல. நகை-யான மந்தஹாஸமாயி ஸந்தோஷம் பிரக-டிதமாக்கவுமில்லை விகஸிதானமுகத்தில்

ஸங்கட பாவனையடைந்து காண்கிறது. அகில், கொட்டம் சந்தனம் முதலாகிய

(புகையிழந்தன — எ-து.) அஷ்ட கந்தங்களின் புகையாகிய தூமமெழும்பும் நறுமணங்களோடு கூடின மாளிகைகளின் அந்த வாசனையும் புகையும் ஒழியப்பட்டது. பொங்கியெரிந்து விளங்கா நின்ற ஓமகுண்டங்களிலிருந்து

(சிகையிழந்தன — எ-து.) சிகையான தீபநாளங்களும் ஒழியப்பட்டன. தேன்மலராகிய புதுபுஷ்பங்கள் மல்லிகை, முல்லை, மந்தாரம், இருவாட்சி, செம்பகம் முதலான மலர்கள்

(தொகையிழந்தன — எ-து.) தொகையென்னும் கற்றை கற்றையாக கெட்டியணியா நின்ற பெண் மணிகளின் கேசபாரங்களின் பூக்கள் சூடப்பட்ட அவஸ்தையையும் காணவில்லையே தம்பி.

கவி.

நாவிநீத்தருநல்வளம் துன்னிய
பூவிநீத்தென நாடுபொலிவொரீஇத்
தேவிநீத்தருஞ்சேணெறி தாவிட
ஆவிநீத்த உடல்எனலாயதே. (6)

(இ-ள்.) வாராய் தம்பி சத்துருக்கின நாவியென்னும் பரிமளமுள்ள அந்த சுகந்தம் போய்விட நல்வளங்களான தனலட்சுமி, தான்யலட்சுமி, முதலான அஷ்டலட்சுமிகள் வசிக்கும்

(பூவிநீத்தென—எ-து-) இந்தபூமியான அயோ-
-த்தியிலிருந்து லட்சுமிதேவி இந்த நாடுபொலி-
-வாகிய ஸந்தோஷம், ஸமாதானம், என்றிவை
களில்லாமல் ஐசுவரிய தேவதையான ஸ்ரீதேவி-
-யாவென் ப:ஃ தூரம்போனதினால் ஏதோதுர
ந்தமானதில்ப்பட்டு இந்தபட்டணம் ஏதுபோல்
அமங்களமடைந்ததென்று உனக்குதெரியவேணு-
-மானால்- (ஆவிநீத்த—எ-து-) ஆவியாகியசைதன்-
-னியமான ஆல்மாவு போன ஜடமான மிர்தச-
-ரீரம்போல் இந்தபட்டணத்தின் சைதன்னிய
மற்று நாசமடைந்ததுபோல் இருக்கின்றதுவா-
-ராய் தம்பி- கவி-

அன்னதன்மையதுநகர்நோக்குவாய்
பின்னையப்பெரியோர்தம்பெருந்தகை-
மன்னன்வைகும்வளநகர்போலுமீ
தென்னதன்மை இளையவனேயின்றே- (7)

(இ-ள்-) வராய் தம்பி சத்துருக்களு நாமின்னோரமட்-
-டும் அமங்களமாகிக்கண்ட வயலுகள் தோப்புகள்
சாலைகள் சந்திகள் எல்லாம் விட்டு உன்கோட்டை
யில் பிரவேசிக்கிறதன்றகாலத்தில் அவிடமும் அ-
-மங்களமாககிரணக்கிறதல்லயோ தம்பி- நீயும்
உற்று பார்வையைசெய்ய

(பின்னைய—எ-து-) என்னுடைய உயிருக்கும்
உயிராகிபெருந்தகையென்னும் அதிகரித்ததயாதா-

க்ஷண்ணியமுடையவராயிபிரஜைகளையும் ஸந்-
-ததிகளையும் ஒரேபோல் பாதுகாவல்செய்யப்பட்ட
தயாதரக்ஷண்ணியநிதியான அயோத்தியாமன்ன-
-ரென்றுசொல்லப்பட்ட தசரதமஹாராஜாவான-
-வர் அரசுவீற்றிருக்கும் அரசாங்கத்துவமடையும்
மற்றொருவிடந்தானே

(என்னதன்மை — எ.து.) என்னதாகும் இந்த
நாட்டுக்கும் நகரவாசிகளுக்கும் பெரியபயகம்ப-
-னதிகளடைந்து நிஸப்தமாக கிடக்குந்தன்மை
-எதொரு காரியகாரணத்தால் வந்ததாகும்
ஒன்றும் தெரியவில்லையே தம்பி. கவி.

ஒருமணிப்பூண் அரசிளைகோளரி
இருகைகூப்பி இறைஞ்சி உணர்த்துவேன்
தெருவகைத்தன்றுறு துயர் உளழிவாழ்
திருநகர்த்திரு தீர்ந்தனள் ஆமின்றே.(8)

(இ.ள்.) பிரகாசமுடைய நவரத்னங்க-
-ளை அவிழ்த்தி பணிவிடைசெய்யாந-
-ன்றபூணென்னும் ஆபரணங்களை தரி-
-த்து மார்பால் அலங்கிர்தனும் கோள-
-ரியென்னும் சிங்கம்போல் பராக்கிர-
-மசாலியாகிய ஹேதமைய

(இருகைகூப்பி — எ.து.) தேவரீர்சு-
-ங்கையடைந்துபோன சங்கைகள் சரி-
-யாகிலும் இருகரங்களினாலும் உம்மை-

அபிவாத்தியஞ்செய்து ஆதரவாகசொ-
ல்லுகிறேன்

(ஒருவகைத்தன்று — எ-து.) நமதுரா
-ஜ்ஜியத்தில் வந்து ஏற்படும் ஸங்க-
-டங்கள் ஒருதரத்திலுள்ள வகைகளல்ல.
ஒவ்வொருபேர்களையும் வந்துபாதிக்
-கிறதன்ற ஸங்கடங்கள் ஒன்றே இரண்-
-டோ மூன்றே மேல்க்கு மேலாகவந்து அ-
-வை பலவகைகளாகிலும் உளைழ்வியன்-
-றும் யுகம்முடிவுகாலம் வரைக்கும் அ-
திவாசஞ்செய்யாதென்ற

(திருநகர் — எ-து.) திருவாணமகா
லட்சுமி இந்த நகரமான பட்டணத்தி-
-லிருந்து அப்பரத்தியக்ஷமாக போய்
விட்டாள் கேட்டீரோ அண்ணே
தம்பி சத்துருக்னா பரதா வை அரண்
மணையில் காண்கிற திவ்ய கைகேயி
மாதாவின் அரண்மணையில் பார்த்து
கொள்வோம் மாதாவல்லவோ வருகி-
-றது. சரணமே சரணம் தாயே. கவி-
மூண்டெழுகாதலால் முறைதிறன்தொழ
வேண்டினன் எய்தினன் உளைம்விம்மும்-
ஆல்-ஆண்டகை நெடுமுடி அரசர்கோமகன்
யாண்டையான் பணித்தீர் என்றிருகைகூப்பினன்
(௯)

ஸந்ததிகளான எம்போலியரிடத்தில் முன்னே
றி முன்னேறி நாள்தோறும் பெருகிவாராநின்ற புத்
-திரவாத்சல்லியமுள்ளவராயும் அந்தப்பிதாவினிட-
-த்தில் வளர்ந்துவாராநின்ற பக்திசாரத்தைப்ப-
-மான சினேஹ வினயாதிக்கியத்தினல் பவித்-
-ரமாகிய அவருடைய பாதபல்மங்களில் தீர்க-
-க தண்ட நமஸ்க்காரஞ்செய்து அனுக்கிரஹம்
ஸம்பாதிக்க

(வேண்டினேன் — எ.து.) ஆசிக்கிரஹித்தநுக்
கிரஹித்து பிதுர்மந்திரமான அரமணையில் பிர-
-வேசித்தேன் ஐயயோ தாயே பிதாவையங்கெ-
-ங்கும் காணமல் எனது மனது விம்மி வியாகுலத்-
-தில் மூழ்கினது.

(ஆண்டகை — எ.து.) ஆண்டகையென்னும்
புருஷவர்க்கங்களில் அஸாமான்னியனையும் அர-
-சர்களென்னும் ராஜாக்களுக்கு பாதாபிவாதந்
-யஞ்செய்யுந்தன்மையுடைய சக்கிரவர்த்தியாயுஞ்
சேவிக்கப்பட்ட என்பிதாவானவர் இஷ்டப-
-த்னியாகிய உம்முடைய ஸமீபத்திலும் இல்லையென்
வந்தால் என்னைபெற்றெடுத்து வளர்மை செய்
-யாநின்ற தேவரீர் (யாண்டை — எ.து.) அவர்எங்
-கேயென்றுண்டான பரமார்த்தத்தை சொல்ல
வேண்டுமே தாயே.                கலி.

ஆனவாறுரைசெய்வேனழிவில் சிந்தையாய்
தானவர்வலிதவ நிமிர்ந்த தாளனை அத்

தேனமர் தெரியலான் தேவர் கைதொழ
வானகம் எய்தினன் வருந்தல் நீயின்றே. (10)

(இ-ள்.) வாராய் பாதா பிதாவெங்கேயென்று கேள்க்கா நின்ற உன்னிடத்தில் பிதாவின் க்ஷேமத்தை சொல்லுவேன். அழிவென்னும் க்ஷயமில்லாத சிந்தையானமனசில் யாதொருஸங்கடமில்லாமல்

(தானவர் — எ-து.) தானவராகிய சம்பராசுராதிகளின் பலத்தையும் தவசின் வைபவத்தையும் துலைத்து ஜயமடையும் சைன்னிய ஸமேதனை உன்பிதாவு

(தேனமர்தெரியலான்-எ-து.) "விர்ந்தாரகாரி விஜயே சுரலோகலப்தா மந்தாரமால்லியமது வாஸிதவாசபூமி"

என்ற சுருதியிருந்ததினால் முப்பத்திமுக்கோடி தேவர்களுநல் ஆதரவோடுகூடி ஸதாகாலமும் தேனொழுகப்பட்ட மந்தாரமாலையே தரித்தவராயும் அந்த மந்தாரபுஷ்பத்தின் பரிமளமான வாசனையைபொருந்திய இந்த அயோத்திக்கு அதிபதியாகிய உன்பிதாவு இந்திராதிகள் ஆதரிக்க இந்த அயோத்தியாவாசம்கை விட்டு

(வானகம்-எ-து.) வானகமாகிய சொர்க்கத்துக்கே போய்விட்டார். வருந்தி நீ துக்கிக்க கூடாது கேட்டயோமகனே.

கவி.

அறந்தனைவேரறுத்தருளைக்கொன்றனை
சிறந்தநின்றணிணித்திருவைத்தேசழித்
திறந்தனையாமெனிவிறைவநீதியை
மறந்தனையுனக்கிதின்மாசுமேவுண்டோ (11)

(இ-ள்.) ஐயோ ஐயோ வாரீர் பிதாவே. அறமாகிய ஸத்தியம் புண்ணியம் காருண்-ணியம் தவசு என்றிவைகளையும் உண்-மூலநாசஞ்செய்து அருளாகிய ஜீவகாரு-ண்ணியம் தன்னுயிரைப்போல் மன்னுயிரெ-ன்றெண்ணி பாதுகாவல் செய்யாநின்ற உமது கர்த்தவ்வியம் பெரிதாகிலுமென்றெண்ணா-மல் அந்த கிர்த்தியங்களையெல்லாம் தேவ-ரீர் பரித்தியஜித்துவிட்டீரே பிதாவே.

(சிறந்தநின்ற—எ-து.) சிரேஷ்டமாகிய பாக்கியத்தையும் ஒளிகெடச்செய்து அ-மங்களமாய் (இறந்தனை—) இறந்துபோன-வரென்றுவந்தால் இறைவனென்னும் ராஜாக்கள் அனுஷ்டிக்கவேண்டிய ராஜநீதி-யை சற்றேனும் ஆலோசனை செய்யாமல் (மறந்தனை - எ-து.) மறந்துவிட்டீரேயானால் என் பிதாவான உமக்கு இதில்பரமாகிய ஒரு அபராதம் வேறுண்டோ பிதாவே. கலி.

முதலவன் முதலிய முந்தையோர் பழம்
கதையையும் புதுக்கிய தாஸவன் கண்ணுடை
நுதலவன் கிஸவிலின் நேரண்மை நூறிய
புதல்வனை எங்ஙனம் பிரிந்துபோயினை (12)

ரின்-ர இந்தச் சூரியவம்ச ராஜாக்களுக்கு ஆதி
முதல்வனாயி குலகூடஸ்தனாயி சோபிக்கிறான்ற
இக்ஷ்வாகு சக்கிரவர்த்திமுதல் உமது பிதாவா-
கிய அஜனென்னும் சக்கிரவர்த்திமுதற் கொண்டா-
ன பிதா பிதாமஹனென் பிரபிதாமகன்மார்கள்
என்றிவர்களான உம்முடைய பூர்விகர்கள்
செய்யாநின்ற வீரஸாஹஸகீர்த்தியங்களையெ-
ல்லாம் பழமையோடுகூடினகதையென்னும்
சரித்திரங்களை புதுமையில்லாமல்வரச்செய்து
(கதையையும் — எ.து.) தான்செய்யப்பட்ட
ஸம்பவத்தை புதுமையாக ஸர்வர்களையும்
புகழ தாடகைநிக்கிரஹம் யாகரக்ஷணை
நுதலென்னும் பாலலோசனத்தோடுகூடின
சிவபெருமானெடுக்காநின்ற திரியம்பகத்தை
தன்வலிமையான கரபலத்தால் கண்டித்து
ஸீதாதேவியானவளை திருமணஞ்செய்து
பெருமை ஸம்பாதிக்காநின்ற உமது
(புதல்வனை — எ.து.) ஸ்ரீமந்த்ரோமாதனையென்
புஜிரப ஸ்வாமியை ஏதொருபிரகாரம்வி
ட்டு தேவரீர் சொர்க்காரோஹணஞ்செ
ய்துவிட்டீர் பிதாவே. கவி
பற்றிஸ் தவெத்தினிற் பயந்தமைந்தர்க்கு
முற்றுலகளித்துமுறையினெய்திய
வெற்றவெண்குடி மணகோலம்கண்ணவும்

பெற்றிலேபோலுநின்பெரியகண்களால் (13)
(இ-ள்-) ஐயோ ஐயோ பிதாவே தேவரீர் தவ-
-சையும் பிரபலமாக சுவீகரித்தவரல்லவ-உம-
-க்கு ஸந்ததியாகப்பெற்றெடுத்த என் தமை-
-யனைவருக்கு இந்த
(மூற்றுலகுளி— எ-து-) உலகமாகிய ராஜ்ஜி-
-யத்தின் பூர்ணாதிகாரங்கொடுத்து உமதுமுறை
யாகிய கல்பனையில் சேராநின்ற
(கொற்றவன்— எ-து-) கொற்றவன் என்னும்
வெற்றியையுடைய ராஜாதிராஜனாகிய
ஸ்ரீராமசுவாமியானவருடைய கிரீடதா
ரணை செய்யும் அபிஷேகருபவும் ராஜ-
-ரீக பிரவேசையையும் காணும்பொருட்டா-
-கவும் அதை கண்டு ஆனந்திக்கவும்
(பெற்றிலே — எ-து-) பெற்றிலே தேவரீர் சௌ-
-பாக்கியம் செய்தவரல்லவே- உமது நிறைந்த
கண்களினால் அந்த வைவ்வபட்டாபிஷேக
மானைதைக்கண்டு ஸந்தோஷகரமாக மர
ணமடைந்தாலும் உமக்குபாதமில்லையேபிதாவே

கவி-

எந்தையும் யாயும் எம்பிரானும் எம்முனும்
அந்தம் இல் பெருங்குணத்திராமன்ஆதலால்
வந்திலே அவன்கழல் வைத்தபோதலால்
சிந்தை வெங்கொடுதுயர்தீர்க்கலாகுமோ (14)

(இ-ள்-) ஐயோ ஐயோ தாயே உமதுபுரோபாகத்

-தில் நின்று பிதுருமரணத்தைகேட்டு துக்கி-
-த்து பிரயோஜனமில்லை.

(எந்தையும் — எ-து.) பாவிகாலங்களில் எந்-
-தையாகிய பிதாவும் மாதாவும் என்ன. அவரனும்
என்முன்பிறக்காருன்ற ஜேஷ்ட பிராதாவும்
மற்றொருமில்லை அவராரென்றல்.

(அந்தமில் — எ-து.) அந்தபரிதியில்லாமல் ஸல்கு
ணஸம்பன்னனுயி சோபிக்கப்பட்ட ஸ்ரீராம
சுவாமியல்லாமல் மற்றொருவருமில்லை ஆகை-
-யினுல் முன்னமுன்னமாக அவர்புரோபாகத்தில்
சென்று (வந்தனை — எ-து.) எனது தீர்க்கதண்ட
நமஸ்காரங்களை அபிவாத்தியங்களை அவ-
-ர்பாதங்களில் ஸமர்ப்பித்தாலல்லாமல்

(சிந்தைவெ — எ-து.) சிந்தையென்னும் மன-
-திலுண்டான கொடூரமான கடின துக்கங்கள்
நீங்கி மனோநிர்விருதி வரவில்லையே தாயே.

அதோவாராய் மகனே பரத

அவ்வுரை கேட்டலும் மசனியேறென
வெவ் உரை நின் செவிகேட்டதில்லையோ-
தெவ்வடு சிலையினய் தேவி தம்பியோ
டிவ்வயின்ராமனும் கானத்தேகினன் (15)

(இ-ள்.) அதோவாராய் பரதகுமாரா பிதாவின்
மரணவார்த்தையைகேட்டு நீதுக்கித்தவ-
-னுயி இடி முழங்கும்படி நடுங்கிவாயிலும் வயற்றிலு

மடித்துதுக்கிக்காநின்றநீராமன்விஷயத்தை
தெரிந்தவனல்லயோ.

(வெவ்வுரைநின் — எ-து.) ஸோதரபத்னீஸமேத-
-னாகவனத்திற்குபோய்விட்டானென்றதன்மை-
-யைநீமற்றுருஞ்சொல்லிகேட்டதில்லையல்லவோமா-
-தனே

(தெவ்வடு — எ-து.) தெவ்வர்களானசத்துருக்க-
-ளை ஜயிக்கவல்லமையுள்ள சக்தியையுடைய
கோதண்டத்தை கரத்தில்பிடித்தவீரபரதகு-
-மாரா உனது அண்ணனானவன் அவன் பத்னியான
சீதையோடும் தம்பியான லட்சுமணகுமாரனோ-
-டும்

(இவ்வயிலிராமனும் — எ-து.) சீதாலட்சுமணர் என்ற
இரண்டுபேர்களோடுங்கூடி நாம் ஒருபேர்களும் கா-
-ணமலிருக்கிற பெருவனமான கோராரண்ணிய-
-த்தில் சென்று சேர்ந்திருக்கிறது-அந்தராமகுமா-
-ரனைக்கண்டு பாதாபிவாதியஞ்செய்து உனது
துக்கநிவர்த்திவருத்த அவசரமல்லாமல் வந்த
-து வராய்ப[illegible]குமாரா.        சரணம் தாயே.

கவி.

ஏங்கினை விம்மவோடிவந்த ஏந்தல்அப்
பூங்கழல் காலவன் வனத்துப்போயது
தீங்கிழைத்த தனினோ தைவம் சீறியோ
ஓங்கிய விதியினோயாதினோயின்றே. (16)

(இ-ள்.) ஐயோ ஐயோ தாயே பிதாவானவர்

மரணமடைந்து ஏங்கி அவரது வியோக துக்கத்
திஞல் பலவகைகளுஞ்சொல்லி துக்கித்து துக்கித்து
மஞேநிர்விருத்தி வாராமல் தமையனைக்கண்டு து-
-க்கநிவர்த்தி வருத்தலாமென்று சொன்னபோது
தமையனும் விதூரமான கோராரண்ணியத்தில்
போய்விட்டாரென்று சொன்ன விஷயத்தை கேட்டு
விம்மல் என்னும் மனதிலுள்ள ஆசைய குழப்பங்க-
-ள் வர்த்திச்சு அதிகரித்து விம்மிஷ்டப்பட்டேன்

(பூங்குழல் — எ. து.) இன்னமும் காரியங்கள்
யாதொன்றும் தெரிந்தவனல்ல-பூவைபோல
மார்த்தவமான பாதங்களில் பாதரக்ஷை கூட
அணிந்தவராயி சேவிக்காதன்ற என் பூர்வஜன்
வனத்தில்போயிவிட்டாரோ! அப்படி வனத்-
-தில் போகுமாயிருந்தால்

(தீங்கிழை — எ. து.) சத்துரு ஸமூஹங்கள்
உபத்திரவமேற்பித்ததிஞலோ அதோ
என்பூர்வஜனல் வல்லபேர்களுக்கும் அபராதம்
செய்ததிஞலோ ஈசுவரகோபத்திஞலோ.

(ஓங்கியவிதி — எ. து.) ஓங்கி உன்னதமாகிய
கடினமான ஸாமர்த்தியதிஞலோ யாவதோ
நிர்ணயகமாக வனத்தில் சென்றுவஸி
க்ககாரணம் ஏதிஞல் ஸம்பவிச்சதாகியு
மென்று பரமார்த்தஞ்சொல்லுவீர் தாயே.

கலி.

தீயனஇராமனே செய்யும் மேலவை
தாய்செயல் அல்லவோ தலத்துளோர்க்கெலாம்
போயது தாதைவிண் புக்க புக்கபின்னரோ
ஆயதன்முன்னரோ அருளுவீரென்றே. (17)

(இ-ள்) தீயவைகளான அபராதகிர்த்தியங்களை என்பூர்வஜனான ராமஸ்வாமியால் சம்பவித்ததெ-ன்றுவருமாயிருந்தால் அது

(தாய்செயல் — எ-து) பூமியிலுண்டானபேர்களு-க்கெல்லாம் மாதாவானவள் செய்யக்கூடிய தின்மைபோல் பொறுப்பான அபராதஞ்சொ-ல்லாமலிருக்கிற காலமல்லவேயோதாயே.

(போயது தாதை — எ-து) அப்படியிருக்க அவர் வனத்தில்போகாநின்ற வனயாத்திரை என் பிதாவானவர் சொர்க்காரோஹணஞ்செய்த-தினுடைய பிற்காலந்தானோ

(ஆயதன்முன்னரோ — எ-து) அந்த பிதாவான-வர் மரணமடையாநின்ற தூரத்த ஸம்பவ-த்துக்கு முன்னந்தானோ என்ற பரமார்த்தம் சொல்லுவீர்தாயே — கவி.

குருக்களையிகழ்தலினென்று கூறிய
செருக்கினல் அன்றெருதெய்வத்தால் அன்
றுருக்கனே அனைய அவ் அரசர் கோமகன்
இருக்கவே வனத்தவன் ஏகினானென்றே. (18)

(இ-ள்) குருக்களான ஸஜ்ஜனங்களை

நிந்தித்ததினாலும் ராஜ்ஜியபிரஷ்டனாக வரலாம்
அல்லாதபடிக்கு

(செருக்கினால் — எ.து.) செருக்கான மத்சசெ-ருக்கினால் ஸர்வர்களையும் தோல்பிக்கதகுந்த ப-ராஜயத்தினாலும் நாட்டைவிட்டு காட்டிலொளி-க்கலாம் தைவமாகிய ஈசுவரகல்பிதத்தால் துர்க்கதியடைந்து விதிவசமாகவும் ஸம்பவிக்கலாம் இச்சொல்லப்பட்ட காரணகாரியங்களி-லொன்றும் ராமசுவாமி ராஜ்ஜியம் உபேக்ஷை செய்துபோனவரல்லவென்றால் பிதாவான-வர் மரணமடைவதற்குமுன்னமோ மரண சேஷமோ வனவாசமாக போனதென்று கேள்க்கிறாயே.

(அருக்கனே — எ.து.) அருக்கனென்னும் ஸஹ-சிரகிரணதாரியாகிய சூரியதேவனைப்போல் பிர-தாபத்தோடுகூடின உன் பிதாவான சக்கரவர்-த்தியானவர் பிராணனோடுகூடி நல்லசுபோதமு-ள்ளவராயி இந்த ராஜதானியில்

(இருக்கவே — எ.து.) இருக்குங்காலத்தில்தானே-யும் அவர் எல்லாபேர்களுங்காண வனத்தில் போனதென்று தரித்துகொள்ளபாதகுமாரா.

கவி.

குற்றமொன்றில்லையேல் கொதித்துவெறுளோர்
செற்றதும் இல்லையேல் தெய்வத்தால் அன்றேல்

பெற்றவன் இருக்கவே பிள்ளை கொண்டுக
உற்றதென் பின்னவன் உலர்ந்தவாறின்றே (19)

(இ-ள்.) குற்றம் ஒன்றுமில்லாமலிருந்தால் நிரபராதியாகிய என் தமையன் நாடுநகரங்களை விட்டுவனம்போகக்காரணம் மற்றுசிலபேர்களை பிரகோபிக்க அந்தபிரகோபனம் ஹே-துகமாக அவர்கள் ஆட்டிதுரத்தினலும்போ-கலாம் அப்படியொன்றும்வராமல் இதார்களி-ஞலே-

(செற்றதும்—எ-து-) செற்றுபராஜயபிதியி-ஞல்போனவருமல்லயேயென்றால் தைவனிதியாகிய விதியைமாணித்துவனவாசஞ்-செய்ய தனது யௌவனகாலத்தில்போனவருமல்ல இப்படியாதொருகுற்றவுமில்லாம-லிருக்க. (பெற்றவனி—எ-து-) பெற்றவன் என்னும் பீஜகர்த்தாவானபிதாவுபிரா-ணனோடுகூடி ராஜ்ஜியத்தில் இருக்குங்கா-லத்தில் பிள்ளையான தனது அருமை மகனை ஒருவன் வனவாசமானஏகாந்தவாசத்துக்குபோனது ஏதொருகாரணவசத்தாலே-யாகிலும் (உற்றதென்—எ-து-) அந்தஸம்ப-வம்நேரிட்டதற்கனந்தரம் என்பிதாவானவர் பிராணன்வெடிந்து மரணமடைவதற்க்கும்

ஏதொரு ஸம்பவம் நேரிட்டது வாரீர் தாயே.

ஒரு காரியம் ஸம்பவிக்க வேணுமானல் ஒருகா-
-ரணம் வேணும் அந்த காரணமோ மற்றொருகா-
-ரியத்தின் துடர்ச்சையாகவரும்

"காரிய நியத பூர்வ விர்த்தி காரண:
காரண பச்சாத்தவ விர்த்தி காரியஹ:"

என்ற நியமமானதை ஆலோசணை செய்தால்
புத்திரவியோக ஜன்னிய துக்கமோ பிதுருமரண-
-த்துக்கு காரணமென்று நான் ஸந்தேகமடை
கிறேன். அந்த தாருணமாகிய ஸம்பவம் தனது
பிரிவினல் வருமென்று நிச்சயிக்கத்தகுந்த புத்-
-திமதியோடு கூடின என் பூர்வஜன் பிதாவிருக்க
வனயாத்திரை செய்ய காரியம் யாரொருவரு-
-டைய திரிவித கரணங்களினல் செய்யும்
கிர்த்திய விலேபனம் ஹேதுவாக வந்த
தென்று சொல்லவேண்டும் தாயே.

வாராய் பரதா இந்த விஷயங்களை அகாத
மாக சிந்தித்துநில்க்காமல் நாம் மேலிற் என்
-ன செய்யவேணுமென்று கேள்க்காமல் காரி
-ய காரணங்களை விசாரணை செய்கிறாயே.
எல்லாம் உனக்குவேண்டி உன்னிடத்தில் சேரவே-
-ண்டி நீயொருவனிடத்தில் அதிஷ்டிதமாகிய
இராஜ்ஜம் ஆரொருவருடைய வாக்குமூலமாக
பிரத்தியக்ஷமடைந்ததென்றல் புத்திரவாஸ்ச

ல்லியமான பிரேமாதிக்கியத்தோடுகூடின கை-
-கேயியான என்னுடைய வாக்குமூலமாகிலும் அந்த
புருஷவாக்கியம் ஸம்பவிக்ககாரணம் உனது
பிதாவுக்குறைதுவாகிலும் அனுஷேத்தியமாகிய
பிதாவுகேட்டு மரணமடைந்தது ஒருபூர்வகால
ஸம்பவத்தினுலென்றுகேட்டுதரிக்கவேண்டும் பாதா-
கலி

வாக்கினல் வரந்தரக்கொண்டுமைந்தனை
போக்கினேன் வனத்திடை போக்கிபாருனக்
கிராக்கினேன் அவனதுபொறுக்கலாமையால்
நீக்கினன் தன் உயிர் நேமிவேந்தனென்றுன் (20)

(இ-ள்-) பூர்வகாலத்தில் உன்பிதாவானவர் சம்-
-பராசுராயோதனங்கழிந்து விஜயசாலியாக
அந்தயுத்தத்தில் விஜயிக்க ஸாரத்தியவேலை-
-யை நடத்தாநின்ற என்னிடத்தில் ஸந்தோ-
-ஷசித்தராயிதேவி உனக்கு இரண்டுவரங்களை
தரலாம் அபிஷ்டங்களான இரண்டு காரியங்கள்
எதொன்றைகேட்டாலும் உன்னிஷ்டப்படி நி-
-றவேற்றலாம் என்று அந்தபுண்ணிய உலகமான
அமராபதியில்வைத்து சொல்லும் ஸந்தர்ப்பத்தில்
என்னுடைய அபிஷ்டங்களை ஆகிக்குங்காலத்தில்
தேவரீர் நிறவேற்றினல் போதும் என்றுநான்சொ-
-ல்லி அந்தவாத்துவயங்களை உன்பிதாவினிடம்
ரக்ஷித்ததை நான் சுவீகரிக்கத்தக்கதாக வா-
-த்துவயங்களை கேள்க்க ஒன்றொ வரத்துவயங்கள்

எப்பாகாரமென்று வந்தால் சொல்ல ராமகுமாரா-
-னணப்படிக்கு தரும்பொருட்டு ஸன்னத்தனென்று
ஸத்தியவாசகமான வார்த்தைசொல்லும் அவ-
-சரத்தில் புத்திரவால்ஸல்லியமோ ஸத்தியஸந்த-
-தையோ பெரிது என்று தெரியத்தக்கதாக பிதா-
-வைபார்த்து மகனை சீமந்தகுமாரனை
(போக்கினேன்—எ.து.) வனத்திற்க்குபோக
ஒருவரம்வாங்கி இன்னும் மற்றொரு வரத்தி-
-னல் பாராகிய இந்த பூமிக்குண்டான அதிகா-
-ரத்தை பதிநாலு ஸம்வல்சரகாலவதிவரைக்கும்
நீ ராஜஸ்தானத்தை வஹிக்கமறுபடியும் இ-
-ரண்டாம் வரமாக வாங்கி
(ஆக்கினேன்—எ.து.) உன்னை ராஜாவெ
ன்றுண்டான ஸ்தானத்தில் நியமனங்களை
நடத்தி ராமனை இந்த ராஜ்ஜியத்திலிருந்து
மாற்றப்படுத்தின அந்த ஸந்தர்ப்பத்தில் ஸ-
-த்தியஸந்தனாகிய உன்பிதாவெ இந்த நியமன-
-ங்களும் மாற்றங்களும் ஒருபெண்ணான
கைகேயியானவளிடத்தில் நான் சொன்ன
வாக்குமூலமல்லவோ ஸம்பவித்தது அந்தஸ-
-ம்பவத்துக்கு கர்த்தாவான ராஜாவெ அது
பொறுக்கமுடியாமல்
(நீக்கினேன்—எ.து.) நீக்கினேன் தன்னுயிரான

பிராணனை சரீரத்தில் நிறுத்தாமல் ராமராமராம
வென்று குமாரன் நாமத்தை சொல்லி புத்திர
வியோக ஜன்னிய துக்கமென்றுண்டான வியாதி-
-யினால் மரணமடைந்தது கேட்ட யோமகனே.

வாராய் துஷ்டயே வாராய்பாபி
கவி.

மாண்டனன் எந்தை என்தம்முன் மாதவம்
பூண்டனன் நின்கொடும் புணர்ப்பினால் என்றால்
கீண்டிலன் வாய்அது கேட்டும்நின்றயான்
ஆண்டனனே அன்றே அருசை ஆசையால் (21)

(இ-ள்.) என் பிதாவரனவரை மாண்டுமரண
மடையவுஞ்செய்வித்து பிதுர்துல்லியனான என்
பூர்வஜனானவர் உனது வரத்தை ஹேதுகமாக
ஸன்னியாச விர்த்தியை சுவீகரித்து வனபிர
தேசத்திலும் சேர்ந்தது-இந்த கடின மரண து-
-க்கங்களையெல்லாம் உன்னுடைய கொடூரமான
புணர்ப்புசகம் என்றெண்ணி பிதாவை உன்னை
இஷ்டபத்னியாக சுவீகரித்ததினாலல்லவோபாபி

(கீண்டிலன் — எ-து.) இந்தஸம்பவங்களை
என்புரோபாகத்தில் வெளிப்படுத்த தைரிய
-த்தோடு கூடின உனது நாவை முறித்துவிடுவேன்
கேட்டுநின்றயான் இதைகேட்டு நிற்கும்பொ-
-றுப்பில்லாத ஒருவன்

(ஆண்டனனே — எ-து.) உனது வாக்கியம்
ஹேதுகமாககொண்டோ உன் நாக்கை சேதி-
-க்காமல் இருந்தது வாராய்பாபி. கவி.

நீயினம் இருந்தினை யானும் நின்றனென்
ஏயெனும் மாத்திரத்தெற்று கிற்றிலென்
ஆயகன் முனியும் என்றஞ்சினேன் அலால்
தாய் எனும் பெயர் எனை தடுக்கற்பாலதோ (22)

(இ-ள்.) துஷ்டயே பாபி எல்லாம் என்னிடத்தில் சொல்லி சொன்ன நிமிஷமே என் வாள் கோன் ஏற்று சாகாமல் நீயிருக்கிறாய் உன்னை கொல்லாதபடிக்கு வாளாயுதமானதை ஓங்கினாலும் நிறுக்கப்பட்டவன்

(ஏயெனும் — எ-து.) ஹேயென்றும் அருதேயென்றே இது செய்யகூடாது என்றே சொல்லுவதற்க்கு ஸமயம் கொடுக்காமல் உனது சரீரத்தை துண்டமாக கண்டித்து விடாமல் நான் பொறுத்து நிற்க்க காரணம் என்னவென்றால் என்

(நாயகன் — எ-து.) எனது அதிபதியான சுவாமியானவர் அவரை நான் முகதர்சனஞ்செய்யுந்தருணத்தில் எடாபாதகா தம்பி மாதுருபித்தனே ராணியையானதை ஸிரஸாவஹித்து ராஜ்ஜியத்தை உபேக்ஷிக்க தியாகசீலமுள்ளவனே நான் அந்த ராஜ்ஜியமான புண்ணியபூமியை ஸம்ரக்ஷணை செய்வதற்க்கு உண்டான பரதநிபுணனே நீயென்று ஸமாதானமடைந்து எல்லா காரியங்களையும் நீ சரியாக நிறவேற்றுமென்று நினைத்து நீ இந்தவிதமான மாதுருஹத்தியானதுயோர

கிர்த்தியத்தை செய்துவிட்டாயே அந்தபாபகிர்-
த்தியத்தை செய்யாதென்ற உன்முகதர்சனமே
காணகூடாது என்று சொல்லி என்பேரில் கோ
-பிக்கும் என்று பயமடைந்தேன் அல்லாமல்

(தாரையெனும்பெயர்— எ-து.) நீயொருமாதாவாகி-
-லும் ஸ்திரீயாகிலும் என்றுண்டான நாமமாத்திரமா-
-ன ஒன்று என்னை நடஸ்த்தப்படுத்த சக்தியுண்டோ
நீ என் மாதாவென்ற நடஸ்தத்தினால் உன்னை
கொல்லசெய்யாமல் இருந்தவனல்லவேயே பாபி.

கவி.

மானவும் உளன் ஒருமன்னவன் சொலால்
மீளவும் உளன் ஒருவீரன் மேயபார்
ஆளவும் உளன் ஒருபாதன் ஆகிலால்
கோளல தறநெறி குறை உண்டாகுமோ. (23)

(இ-ள்.) வாராய் துரோகி பாபி உன்னுடைய
பருஷவைராக்கியத்தினால் ஸத்தியம் பெரிசென்றெ-
-ண்ணி உன்னுடைய குற்றத்துக்கு உன்னை சி-
-க்ஷிக்காமல் விர்தாவில் ஒருராஜாவானஎன்
பிதாவுமரணமடையவும் அதேவார்த்தையி-
-னால் ஸமாதானப்படும் மனஸ்ஸக்தியில்லாமல்
பிதாவினுடைய ஸத்தியத்தை ரக்ஷிக்கவேணு-
-மென்று விர்தாவில் நினைத்து

(மீளவும் உளன்— எ-து.) ராஜ்ஜியம் விட்டு கா-
ட்டைலட்சியமாக்கி திரிக்கவும் ஒருவீர

புருஷன் செய்யாநின்ற கடிமை ஷைகளை யாதொரு பேர்களிடத்திலும் செய்யாமல் தன்னுடை அதிகார பரிதியில் உள்ப்படாநின்ற ராஜ்ஜியத்தை சும்மா ஒன்றுஞ்சொல்லாமல் உபேக்ஷிக்கவும்

(ஆளையும் உனை — எ. து.) அந்தராஜ்ஜியத்தை-யும் பழிபாபங்களுக்கு ஆளாகநின்று பரிக்-குவதற்க்கு வியக்தித்துவமடைந்து பாதக-கியநான் அவசேஷித்தால்

(கோளை — எ. து.) அறநெறியாகிய தர்ம்ம-த்துக்கும் ஆசாரங்களுக்கும் இற்றமாக முடி-யுமேயல்லாமல் மற்றொருஞறைவுகளும் உண்டாகுமோ சொல்லு சொல்லுவாய் பாபி.

கவி.

நோயீரல்லீர் நுன்களைவன்றனுயிருண்டீர்
பேயீரேநீர் இன்னமிருக்கபெறுவீரோ
மாயீர்மாயாவண்பழிதந்தீர் முனிதந்தீர்
தாயீரேநீர் இன்னும் எனக்கென் தருவீரே (24)

(இ. ள்.) வாராய் துரோகி வாராய் பயங்கரியே நீயொருவியென்றால் ஸகலமானபேர்களும் உ-ன்னிடத்திலிருந்து விலகிபோகாநின்ற ஒருவி-யாதிசொரூபமோவென்றால் அந்தவியாதிரூப-வுமல்ல- உமது கெட்டின களைவனை புருஷ-னுடையபிராணனை பருகாநின்ற ஒரு

(பேயீரேநீர் — எ. து.) பேயாகிய உணர்வில்-லாத ஒருபிசாசுதானோ நீ இன்னும் இந்த உலகத்தார்கள் காண பேயென்றும் பிசாசென்றும்

பூதமென்றும் அவனைக்க உத்தியமிக்கிறீரே நீர்

(மாயீர் மாயா — எ-து-) வாராய் பாபி நீ சிக்கிரமாகச்சென்று மிர்த்தியடைந்து கொள்ளுவாய் பாதகனை எனக்கு வேண்டி மாயா கெடாத பழி-யையும் தீராத களங்கமான அபவாதத்தையும் செய்து முடித்துவிட்டீரே பாபி முலைதந்தவளல்லவோ நீ

(தாயீரே — எ-து-) ஹே தாயே முலைதந்து பா-லூட்டி வளர்த்தாளன்றோ நீ இன்னும் இந்தவிதமாகிய அபவாதஹேதுக்களான அழிமதிகளைச் செய்து மேலிலும் புத்திரனை எனக்கு ஏதேது ஸஹிக்க ஒண்ணெய் உடகிலை செய்ய உஜ்ஜீவித்திருக்கிறீர் பாவி- கவி.

ஒன்றும்பொய்யாமன்னனை வாயால் உயிரோடும்
தின்றும் தீராவண்பழி கொண்டும் திருவெய்தி
என்றும் நீரே வாழ உவந்தீர் அவன்னெக
கன்றும் தாயும் போலவனை கண்டும் கழியீரே. (25)

(இ-ள்-) வாராய் பொல்லாதவளே பொய்யாகி-ய ஒன்றும் ஒருவாக்கியமும் உச்சரிக்காமல் ஸத்தியஸந்தனாகிய என்பிதாவானவரை உன் வாயாகிய நாவினால் பிராணனைப் பிடுங்கி அ-வரை ஆசமனஞ்செய்து

(தின்றும் தீரா — எ-து-) தின் பிராணநாயக-னுடைய சரீரநாசஞ்செய்து வண்பழியென்னும் கெட்ட அகீர்த்தியமான தீராத அபாராதத்தை நான்சுமக்க

நான் பாக்கியமாக ஸம்பாதித்தேன் என்றும்

(என்றும் நீரே—எ-து.) எக்காலமும் நீ ஒருவியே வாழ்ந்து சுகிக்கலாமென்று ஆலோசனை செய்து நீயொருவி அரசனாகிய நாயகனிறந்து யுவாவாகிய என் தமையனையும் தாயாகிய சீதாதேவியென்னும்

(இன்றும் தாயும்—எ-து.) இன்றைகிய கிடாவும் தாயான பசுவும் போகும் மரியாதையைக் கண்டும் உண்மையான இருதயத்தில் விகாரமழியாமலிருக்கிறாயோ பாவி-

கவி.

பாரோர் தொள்ளார் யான் உயிர் பேணிப்பழிபூணேன்
தீராதொன்றே துன்பம் இவ் ஊரில் திருநில்லாள்
ஆரொடெண்ணிற்றுரைதந்தாய் அறம் எல்லாம்
வேரொடும் கேடாகமுடித்தென் வினைவித்தாய். (26)

(இ-ள்.) பாரோர் களென இந்தபூமியிலுண்டான யா-தொருபேர்களும் பாதகனென்னை ஒருஜன்மமெ-டுத்த சரீரியைபோலெண்ணமல் ஒருமிர்துல்லி-யனைப்போல் நிந்திக்கிறானொருவனவசேவித்து எனது பிராணபரணஞ்செய்து பழியான அபவா-தத்தையும் ஸஹித்து இருக்கிறவனுமல்ல-

(தீராதொன்றே—எ-து.) எனது சரீரத்தை நசி-ப்பித்தாலல்லாமல் இந்தபட்டணத்திலுண்டான துக்காவஸ்த்தைகளும் நீங்காது இந்தநகர-த்திலுள்ள க்ஷேமவும் அபிவிர்த்திவராது

(ஆரொடெண்ணி—எ-து.) யாவரோடு கூடி ஆலோசனைசெய்து உன்னைப்போலொத்தியாரொருவர் உனது பரிபூர்ண்ணமான அபிப்ராயத்தை

இந்தவிதமான உபதேசத்தை நிர்த்தேசித்துதரப்பட்டது உனது சுயவம் கிர்தார்த்தம் தானே. அறமென்ற தர்ம-மத்தையெல்லாம் நீ செய்யும் அனர்த்தத்தினால்

(வேறொடும் - எ. து.) ஸத்தியம் புண்ணியம் காருண்-ணியம் தவசுஎன்னும் சாகைகளோடு கூடி வளர்-ந்து விகஸிக்கிறதன்ற தர்ம்ம விர்ச்சத்தை ஊசிவேரு பறிய பிடுங்கெடுத்து சுட்டுசாம்பலாக்கிகெ-டுத்துவிட்டீரே தாயே நீயென்னவெல்லாம் செய்து விட்டாய் பாவி.

கவி.

என்றுன்பாபிகும்பிவயிற்றின் இடை வைகி.
தோன்றும் தீராப்பாதகம் அற்றென்துயர்தீர
சான்றும் தானேநல்லறமாகத்தனைகௌவலம்
மூன்றும் கரண மாதவம்யானேமுயல்கின்றேன் (27)

(இ. ள்.) எடீபாவீ துரோகி உனக்கு பிள்ளையாயி உனது கர்ப்பாசயமான அடிவயிற்றின் அந்தர்-பாகத்தில் ஒரு ஸந்ததீபெருக்க நான் உன்-னுடைய கும்பீபாகமான நரகத்தில் துராந்தமான நாடகத்தில் உள்பட்டு கோமாளியைப்போல் பத்துமாசம் அதிவசித்து அந்த கும்பீபாகமான நரகத்திலிருந்து ஒருகுஸியில் உல்பவிக்கிறந-ன்ற பதினைப்போல் ஒருவரும் மதிக்காமல் பி-றந்து உன்வயிற்றிற் பிறக்கும் பாவம் அந்த பிறப்போடுகூடி அழிந்த அவஸ்த்தையல்லா-மல் என்னுடைய பிராணனை கிளைந்தாலல்லா-மல் இந்த பாவம் போகாது. எனது பாவகர்ம்மம்

தீருவதற்க்காக

(மூன்றும்தானே—எ.து.) சகுதன தர்ம்மமாகிய ஒன்றை ஸாக்ஷியப்படுத்தி ஒப்பற்ற அந்தர மத்திய பாதாளாதிகளாகிய

(மூன்றும் காணே—எ.து.) மூன்றுலகத்திலுள்ள தேவாசுர மனித வர்க்காதிகளெல்லாம் காணும்பொருட்டாக ஒருகடின தவசை நீசெய்யும் பாவகிர்த்தியத்துக்கு பிராயச்சித்தமாக நான் உன்முலையுண்டு உன்கர்ப்பத்தில் சயிக்கும் பாவம்வராமல் நல்லஜன்ம்மம் லபிக்க தவசாகிலும் செய்கிறது கேட்டாயோ பாவி.

கவி.

சிறந்தார்சொல்லும்நல்வுரைசொன்னேன்செயல் எல்லாம்-மறந்தாய்செய்தாய் ஆகிமாயாஉயிர்தன்னை துறந்தாய் ஆகில் தாயையும் ஆதி உலகத்தே பிறந்தாய் ஆதிஎ.தலதில்லை பிறிதின்றே. (28)

(இ.ள்.) சிறந்தார்களென்ற உத்தமோத்தர்களான பண்டிதசிரேஷ்டர்கள் சொல்லாநின்ற நல்வழி மார்க்கங்களை சொன்னேன் உன்னால் நடத்திய செயலான நடவடிக்கைகளையெல்லாம்

(மறந்தாய்—எ.து.) அனைத்தங்களை செய்யகூடினவளென்று நீசுயமேவ விஸ்மரிக்கப்பட்டவளைப்போல் அதிவசிக்கிறேயே பாவி- ஆக்கிரிஷேதிக்ககூடாத உன்னுயிரைவிடுவாயேயானால் நீபரிசுத்தியடைவாய்-பூமியில்கைகேயியென்னும் நாமமெடுத்து ஜனித்தவளாகவும்

வருவாய். நீமரணமடைந்ததில்லையென்று வந்தா-
-ல் பூமியின் பாரமுங்குறையாது.

(பிறந்தாய்— எ.து.) நீ ஒரு பிறந்தவனாக உல
கத்தார் அங்கீகரிக்கப்படவேணுமானால் என்மகனெ
ன்றோ என்பத்னியென்றோ எனது மாதாவென்றோ
எனது மாமியார் என்றோ பலபலஸ்தானங்களில்
உன்னை அங்கீகரிக்கப்படவேணுமானால் இச்சொ-
-ல்லாதன்றோ உனது மரணமல்லாதபடிக்கு வேறெயா-
-தொரு விதப் பிராயச்சித்த பரிஹாரங்களும் நீ
செய்யவேண்டினவனல்லையே பாவிதுஷ்டே உன
துமுகதர்சனமே செய்யகூடினவலல்ல.

தம்பி சத்துருக்கினனமது மாதாவாகிய கௌச
ல்லியாதேவியின் ஸமீபம் போவோம். சரணந்தாயே

கவி.

எந்தையெவ் வுலகுளான் எம்முன்யாண்டை
யான். வந்தது தமியென் இம்மறுக்கம் காண-
வோ- சிந்தையின் உறுதுயர் தீர்த்திர் ஆல்எனும்
அந்தரத்தென்னுயிர் துறக்க அஞ்சினேன். (௨௯)

(இ-ள்.) எந்தையாகிய என் பிதாவெவ்வி
டத்திலிருக்கிறார் தாயே. எம்முன்னவனாகிய
தமையனானவர் எவிடத்தில் போய்விட்டார்
தாயே பாதகியாகிய அடியேன் கேகயபுரத்திலி-
-ருந்து சத்துருக்கினனை தம்பியுடன் பாதசாரண
பிரயாணஞ்செய்து உமது ஸமீபத்தில்

(வந்தது தமியென்— எ.து.) வந்து சேர்ந்தபோது
தேவரீர் தனிப்பட்டவளாயிசோகமடைந்தவளாயி

விரஹவியோக துக்கம் அனுபவிக்கா நின்ற
தை காணவோ தாயே.

(சிந்தையின் — எ-து.) உம்முடைய சிந்தை-
யிலுள்ள மனோதுக்கத்தை தேவரீர் விட்டு
விடவேண்டும் தாயே அப்படி செய்யாமல்
இருக்குமாயிருந்தால்

(அந்தரத்தென்னுயிர் - எ.து.) என் பிராணனை நான்
உபேக்ஷிக்கவேண்டும் - அந்தரிக்ஷமாகிய வெளியில்
எனது ஆத்மாவை தியசிக்க பயமடைந்தேன் -
ஆனதினால் ஸமாதானசித்தயாய் இருக்க
வேண்டும் தாயே - கவி-

கொடியவர் யாவரும் குலங்கள் வேரற
நொடிகுவென் யானது நுவல்வதெங்ஙனம்.
கடியவள் வயிற்றிடை பிறந்த கள்வனேன்.
முடிகுவென் அருந்துயர் முடிய என்னும் ஆல் (30)

(இ-ள்.) கொடியவர்களான பாவிகள்
எதொரு வம்சத்தில் பிறந்ததோ அந்த வம்ச-
-த்தை வேரோடு கூட கெடுத்து விடுவேன்

(நொடிகுவென் - எ.து.) இப்படி க்ஷணப்பொழு-
-துக்குள்ளே பாபிகளின் வம்சத்தை கெடுத்து
விடுவேன் என்று கைகேயி புத்திரனாக பிறக்கா நி-
-ன்ற நான் சொன்னதினால் என்ன பிரயோசனம்

(கடியவள் - எ.து.) துஷ்டையாயும் கல்லான பாஷா
ணத்தைப்போல் கடின இருதயையாகிய

கைகேயிமாதாவின் வயிற்றில் புத்திரனாக உற்-
-பவித்து கள்வனாகிய திருடனைப்போல் உள்ள
யானும் ஸம்சயமானதிற்கு அவசரம் கொ-
-டுக்காமல் இறந்துவிடுவேன்.

(முடிகுவன்—எ.து.) இப்படியான் மரண
மடையாதபடிக்கு இந்த அபராதமான ஸங்க-
-டத்துக்கு பாத்திரீபவித்து விட்டேனேதாயே

அதோவரராய் மகனேபரதகுமாரா. கவி.
மையறுமனத்தொருமாசுணான் அவன்
செய்யனேயென்பது முன்னம்தேறினேன்
கய்கையர் கோமகளிழைத்தகைதவம்
அய்யநீயறிந்திலை போலுமாலின்றே (31)

(இ-ள்.) மகனேபரதா உன் களங்கமற்ற
மனசுக்குள்ளே ஒரு குற்றவும் இல்லாத ஒருவன்
(செய்யனே—எ.து.) ஸஜ்ஜனக்கிரேஸரனென-
-ன நீ ஒருகுற்றவாசனையுள்ளவனென்றே அ-
-னர்த்தங்களை செய்யுமென்றே உன்பேரில் ஸம்-
-சயிக்காமல் நீ குற்றமே செய்யவில்லையென்று
நாங்கள் முன்னமே தீர்மானமடைந்தபேர்கள் எ-
-ன்றிருந்தாலும்

(கய்கையர்—எ.து.) கேகயபுத்திரியான கை-
-கேயியானவளால் செய்ய கூடின வஞ்சனைகிர்த்திய
மான மோசங்களை. (அய்யநீ—எ.து.) அய்யனெ-
-னும் பெருமையையுடைய அப்பாமகனேபரதா
நீமுன்னமே தெரிந்தவனல்லையென்றே சொன்னாய்
குமாரா-

சரணம் தாயே இந்த ஸம்பவங்களை அடியேன்
தெரிந்தவனென்று வந்தால் எதேது நரகங்க
ளுக்கெல்லாம் ஆளாகக்கடவதென்றல்

கவி.

தாய்ப்பசியுழந்துயிர் தளரத்தான்தனி
பாய்பெரும்பாழ் வயிறளிக்கும்பாவியும்
நாயகன்படநடந்தவனும் நண்ணும் அத்
தீயெரிநரகத்து கடிதுசெல்கயான் (32)

(இ-ள்.) தாயேகேளும் தாயாகியமாதாவா
னவள் பத்துமாசம் கர்ப்பத்தில் சுமந்து
தன்னை வளர்த்தி தன்னுயுஜ்ஜீவிக்க
ஸாத்தியதையில்லாமல் வார்த்தக்கிய
மடையும்காலத்தில் அந்த தாய்வயிற்றி
லிருந்து பிறக்கிறாநென்ற புத்திரன் மாதா
வினுடைய பசியோ க்ஷீணமோ தளர்ச்சி
யோ அவசரம்பார்த்து பசியும் க்ஷீணமும்
மாறுவதற்க்கு மாதாவுக்கு ருசிகரங்களான
பக்ஷணங்களைக்கொடுத்து தளர்வை தீருவ
தற்க்கு சுசுரூஷாதிகளை செய்யாமல்
தானொருவன் தன்பாடாக அல்லது ஒற்றை
யாக பிரிந்து இருந்து

(பாய்பெரும்—எ.து.) பாழாககொண்டு தன்
னுடைய மலமூத்திரபாத்திரமாகிய உதரத்தை
மாத்திரம் பூர்ணமாக்கி அளித்து தனது உபா
திமட்டும் புலர்த்தாநென்ற யாதொருபாபியுண்டோ
அந்தமஹாபாவியானவனும்

(நாயகன்பட — எ-து.) நாயகனென்னும் தனக்கு
அதிபதியாகிய தலைவன் சத்துருபாதையில் அக-
-ப்பட்ட ஸந்தர்ப்பத்தை தன்னால் ரக்ஷிக்கவேண்-
-டின அவசரத்தை பாழாக்கி அந்த தலைவர்கள்
சத்துருபாதையினால் நசிக்க அதை கண்டும்
கேட்டும் ஸஹாயிக்காமல் நடக்கும் நன்றிகெ-
-ட்ட படன் சென்றுசேரும்

(தீயெரி — எ-து.) தீயாயி கடூரமாயி கத்தி
சுவலிக்கும் நரகாக்கினியில் சுவாமிதுரோகம்
விசுவாஸபாதகம் செய்யும் பாவியானவன்
சென்றுசேரும் அந்தநரகத்தில் யானும் சீக்கி-
-ரமாக சென்றுசேருவேன் கேட்டீரோ தாயே

கனி
தாளின்வடைந்தவர் தம்மைத்தற் கொரு
கோளுறவஞ்சினன் கொடுத்தபேதையும்
நாளினும் அறமறந்தவனும் நண்ணுறும்
மீள் அரும் நரகிடை கடிதுவீழ்கயான் (33)

(இ-ள்.) தாயேகேளும் தானாகிய தனது புரோ-
-பாகத்தில்வந்து சரணம் பிராபித்து அபயம்
கொடுக்கவேண்டுமென்றுசொல்லி அவனுக்-
-காக அதேஸந்தர்ப்பத்தில் அபயதானத்தை-
-யுஞ்செய்து தக்கவண்ணம் ஸஹாயம்நின்று

(கோளுறவஞ்சி — எ-து.) இவன்ஹேதுகமா
-க கொண்டு இவனை துரத்திவிடும் சத்துரு-
-க்களினால் தனக்கும் தன்வசதிக்கும் புத்-
-திரகளத்தராதிகளானபேர்களுக்கும்

தனது நாசம் பிராணநாசம் வருமோ என்று ஸம்சயித்து அஞ்சி பயப்பட்டவனாக அவனை துரத்திவிட்டு சத்துருக்கள் பிடிப்பிக்க கொடுக்கும் முழுமூட்டாளர்களானபேர்கள்

(நாளினும் அற — எ-து.) எல்லாநாள்களிலும் அறமாகிய தர்மத்தை நிஷேதிக்கப்பட்டவனும் எந்தவிதமான பாபத்தில் உள்ப்படாதென்றபே-
-ர்களோ அந்த

(மீளரும் நரகிடை — எ-து.) மீண்டுமோசனமி-
-ல்லாமல் பரிசாகக்கொண்டு அனுபவிக்கும் நரகத்தின் மத்தியில் தானுஞ்சென்று விழக் கடவது கேட்டீரோ தாயே. கவி.

பொய்க்கரிகூறினேன் போருக்கஞ்சினேன்
கைக்கொளுமடைக்கலம் கரந்துவவ்வினேன்
எய்த்திடத்திடர்செய்தோன் என்றிவர்புகு
மெய்க்கொடு நரகிடை விரைவின் வீழ்கயான். (34)

(இ-ள்.) ஞாயபீடத்தில் சென்று ஞாயாதிபதியின் ஸமக்ஷமாக ஸத்தியவார்த்தையை சொல்லி ஒ-
-ருவனுக்குவேண்டிய யதார்த்தம் தெரிந்தும் அதைவெளிப்படுத்தாமல் பொய்யாகிய அ-
-சத்தியவார்த்தையை சொல்லி ஞாயசபையில் அசத்தியமொழிகளை கொடுக்காநின்ற பொய்ஸாட்சிகளும் யுத்தகாலத்தில் அந்த நாள்வரைக்கும் சிலவைகளையும் வாங்கி ச-
-ரீரஸம்ரக்ஷணைசெய்து யுத்தநேரிட்டபோது தனது ராஜாவுக்கு ஸஹாயஞ்செய்யாமல்

தனது பிராணநாசம் வருமோ என்று பயமடைந்து
சத்துருபக்ஷஞ்சொல்லப்பட்டாரையிருக்கிறான
பேர்களும்

(கைக்கொளுமடை — எ-து.) ஒருவனால் ரட்சி-
-க்கக்கொடுக்கிறதென்ற திரவ்வியத்தையோ ஜீவ-
-னாதிகளையோ அவனுக்கும் அவன் பின்காமி-
-களுக்கும் கொடுக்காமல் பொதுவில் தெரியாமல்
சூட்சமமாக ரட்சிக்கும் ஸம்பத்துகளை தான் கவ-
-ர்ந்து தட்டியெடுக்கிறதென்றபேர்களும்

(எய்த்திட திடர் — எ-து.) ஆபல்காலங்களைக்கண்டு
தனது சத்துருவானவனுடைய போராதகால-
-மென்று சொல்லி தன்னுடைய பூர்வவைரா-
-க்கியத்தினால் உபத்திரவஞ்செய்யும்பேர்க-
ளும். எதொருநாகத்தில் சென்றுசேருமோ

(மெய்க்கொடு — எ-து.) அந்தயதார்த்தமா-
-கிய கொடும் நாகத்தில் நான்சென்று சேர
-க்கடவது கேட்டீரோ தாயே. கவி-

அந்தணர் உறையுளை அனலி ஊட்டினேன்
மைந்தரைக்கொன்றுளோன்வழக்கில்பொ-
-ய்த்துளோன். நிந்தனைதேவரைநிகழ்த்தினே-
-ன்புகும்-வெந்துயர்நரகத்துவீழ்கயானுமே. (95)

(இ-ள்.) அந்தணர்களாகிய பிராம்மணர் அதி-
-வசிக்கும் கிராமவிடுதிகளில் அனலென்ற அக்-
-கினிபாணத்தையானதைஎல்ப்பித்து பிராம்மணையும்

அடப்பட்டபேர்களும்

(மைந்தனை — எ.து.) மைந்தர்களென்ற சிசுக்-களை வளர்த்து வருவது பாரமாகுமென்றெண்ணி கொலைசெய்யாநின்றபேர்களும் வழக்கிலே கப-டத்தினால் வழக்கடிப்பிக்கப்பட்டபேர்களும்

(நிந்தனை தேவரை — எ.து.) திவ்வியர்களான தேவர்களையும் தைவீசகணங்களையும் சில சில யுக்திவாதங்களை சொல்லி நிந்திக்காநின்ற பேர்களும். (வெந்துயர் — எ.து.) இச்சொல்லப்-பட்ட பேர்கள் வெந்துவெந்து உருகி ஸங்க-டமடையும் நரகயாதனையினிடத்தில் யானும் சென்று வீழக்கடவது கேட்டீரோ தாயே.

கவி.

கன்றுயிர் ஓய்ந்துக கறந்து பாலுண்டோன்-
மன்றிடைப்பிறர்பொருள் மறைத்துவவ்வி-
-னேன்- நன்றியை மறந்திடும் நயமில்நாவினேன்.
என்றிவர் உறுநரகென்னதாகவே. (36)

(இ-ள்.) கன்றாகிய பசுகுட்டிக்கு பாலை கொ-டுக்காமல் உயிர்நிலை பால்குடிக்காததினால் நாள்-தோறும் பலக்ஷயமாக வந்து இந்தவிதமாக கறவை-டுத்து பால்புசிக்குமாயிருந்தால் அந்த மாட்டுக்குட்டி-யை கறவினால் கொல்லப்பட்டபேர்களும்

(மன்றிடைப்பிறர் — எ.து.) ஸமீபவாசிகளான பேர்களில் சில துர்ப்பலர்களினுடைய ஸொ-த்துக்களை ராஜசபையில் அசத்தியமாக சொல்லி கவர்ச்சையாக கொள்ளையடிக்கா-நின்றபேர்களும்

(நன்றியைமறந்திடும் — எ-து.) நன்றியாகிய உப-
-காரத்தை மறந்து ஒருபிரத்தியுபகாரவுஞ்செ-
-ய்யாமல் தனக்குபகாரஞ்செய்யும் பரோபகா-
-ரியை உபத்திரவிக்கப்பட்டபேர்களும்
"எந்நன்றி கொன்றார்க்குமுய்வுண்டாம்
உய்வில்லை செய்நன்றிகொன்றமகற்கு"
என்றிருந்ததினாலும். இப்படியே சிசுஹத்தி,
கோஹத்தி, பரசுவாபஹரணம், சுவாமித்து
ரோகம், விசுவாசபாதகம் என்றுண்டான ம-
-ஹாபாதகங்களை செய்தாரென்ற பாவிகள்
(என்றிவருறு — எ-து.) முன்சொல்லும்பா
பகர்மங்களை செய்யப்பட்டபேர்கள் சென்று
சேரும் நரகங்கள் இன்னபாவங்களை செய்தா
ரென்றபேர்கள்களுக்கு இன்னின்ன நரகங்களை
ன்றுண்டான இருபத்தெண்கோடி மஹாநர
-கங்களான நரகங்களை விபசித்து ரௌர-
-வம் மஹாரௌரவம் தாமிஸ்கிரம் அ-
-ந்ததாமிஸிரம் காலசூத்திரம் கும்பிபாகம்
பூயோதம் அசிபத்திரரரண்ணியம் திந்த
சூகம் சூலப்பிரோதம் முதலான நரகங்-
-களினிடத்தில் பாபகர்மங்களைசெய்யும்
பேர்கள் சென்றுசேரும் எல்லா நரகங்க-
-ளும் எனக்காகவரகடவது கேட்பீரோதாயே
கனி
ஆறுதன்னுடன்வருமஞ்சொன்மாதரை
ஊறுகொண்டலைக்கத்தன்னுயிர்கொண்டேகினேன்

சோறுதன்னையவுளோர்பசிக்கத்துய்த்துளேன்
றெறுமக்கதியிடையானுமேறவே (37)

(இ-ள்.) வழியேபோகாநின்ற காலத்தில் உங்களைத்தொடர்ந்து நானும் வருகிறேனென்று சொல்லிதான் போகாநின்ற விதூரயாத்திரையில் பங்காளியாய் தன்னுடன் பிரயாணஞ்செய்யும் அஞ்சொல் என்னும் அழகினவார்த்தையினுவும் சுநீரசௌந்தரியத்தினுவும் சிறந்த உத்தமிகளை பெண்களை பத்திரமாகசேர்த்தாமல்

(ஊறுகொண்டஞ்சுக-எ-து.) மார்க்கமத்தியத்தில் இவரால் தனக்கு ஆபத்து வருமென்றெண்ணி தனது பிராணரக்ஷக்காக அந்த அபலையாகிய ஸ்திரீயை விட்டுபோகும் பேர்களும்

(சோறுதன்னையவுளோர்-எ-து.) சோறாகிய ஆஹாரமானதை தனது அயல்வாசிகள் புசிக்காமல் தளர்ந்திருக்குங்காலத்தில் தான் தனது உதரபூரணஞ்செய்யகூடியபேர்களும்

(றெறுமக்கதியிடை-எ-து.) சென்றுசேரும் துர்க்கதியாகிய நரகத்தில் நானும் சென்று சேரக்கடவதுகேட்டீரோதாயே. கவி.

மறுவில்மைந்தனே வள்ளவுந்தையார்
இறுதிசெய்திநாளேழிரண்டினை
சிறுவர்செய்கடன்செய்துதீர்த்திடுவென்
றுறுவதாகவேயுலகையாளுவாய். (38)

(இ-ள்.)
ஐயனேபாதகுமாரா மகனே பாபபுண்ணியங்க-
-ளையும் நரகபேதங்களையும் இந்தநேரமாக
சொல்லியாதொருநரகயாதனைக்கும் ஹேது
பூதனல்லவென்று ஸத்தியவார்த்தையை சொ-
-ல்லி ஸங்கடப்படாநின்ற
(மறுவில் மைந்தனே—எ-து.) களங்கரஹி-
-தனுகியும் நிரபராதியுமான ஹேபாதகுமா-
-ரா வள்ளலென்னும் சிரேஷ்ட தாநியாயி
மேகவருஷம்போல் யாசகர்களுக்கு யாதொரு
வித பிரதிபலேச்சையுமில்லாமல் கல்பகவி-
-ர்க்ஷம்போல் தானஞ்செய்யப்பட்டவரும் நிஷ்-
-காமபுண்ணிய புருஷனுமாகிய உனது பிதாவு-
(இறுதிஎய்தி—எ-து.) இறுதியென்னும் மரண-
-வஸ்த்தையில்ப்பட்டு நாள்களுனதினராத்த-
-ரங்கள் பதிநாலுநாள் முடிந்தும் ஸந்ததிகள்
ஒருபேர்களும் சமீபாத்தில் இல்லாமல் இருந்த
தினல் மரணனந்தராபேக்ஷித கர்ம்மங்களும்மு-
-டங்கி பிரேதசாலையில் தைலத்தோணியில் ஜட-
-மாக கிடக்கின்றன
(சிறுவர்செய்கடன்—எ-து.) சிறுவரான புத்-
-திரர்கள் நீங்கள் இரண்டுபேர்களும் ஸம்ஸ்கா-
-ராதிகளாகிய கர்மங்களையும் தீர்க்கடன்
நீர்க்கடன்முதலான கடன்களையும் கழித்து
அனந்தரம் பரோபகாரார்த்தமாக.
(உறுதியாக—எ-து.) உறுதியென்னும் உம்மால்

உண்டான சஹாயம் பிரஜைகளுக்கு உபக-
-ரிக்க அரசாங்கத்தை வஹித்து உலகத்தார்களை
பாதுகாவல்செய்வாய் பரதகுமாரா

வாராய்பரதா நீ பிரேதசாலைக்குள் புகுந்து
பிதாவானவருடைய சவசரீரத்தை தொட-
-லாகாது. எதினாலென்றால் பிதாவும் கைகேயி
பத்னியுமல்ல பரதன் மகனுமல்லவென்று
சொல்லியாகிலும் மரணமடைந்திருக்கிறது
ஆனதினால் நீ இந்த மிர்த சரீரத்தை தொடகூடாது.
சத்துருக்கினை கடன்களைசெய்யட்டும் பரதகுமார.

ஐயோ ஐயோ குருவே வாரீர்வஸிஷ்டாசாரி-
-யரே.

கவி.

உரைமன்னன் மற்றுன்னிலென்னில்யார்
இரவிதன்குலத்தெந்தைமுந்தையோர்
பிரதபூசனைக்குரியபேறிலேன்
அனாதசெய்யவோவாவதாமினேன் (39)

(இ-ள்-) உரைத்துசொல்லப்பட்ட பிரதானமான
ஸல்கீர்த்திகளை சம்பாதிக்கும் சூரியகோத்திர
ராஜாக்கள் பெரைடுத்துசொல்லும் மூதாதைகள்
வல்லபேர்களும் என்னைப்போல் உண்டோவெ-
-ன்று ஆலோசனை செய்யுங்காலத்தில் ஒருபேர்க-
-ளும் என்னைப்போல் அதபதிக்காரன்றபேர்
களில்லை- (இரவிதன்குலத்தெந்தை—எ.து.)
ஸஹஸ்ர கிரணதாரியாகிய சூரியதேவனுடை-
-ய வம்சத்தில் உற்பவிக்கும் என் பிதாவெ

பிதாமகன், பிரபிதாமகன், என்றுண்டான
அதேவம்சத்தில் ஒருராஜகுமாரனாக ஜனிக்கப்பட்ட
பரதனான எனக்கு

(பிரதபூசனை—எ-று.) ஒருபிதாவானவரு-
-டைய பித்ருசரீரமானதை ஸ்பரிசித்து பூசை-
-யாகிய ஆதரவை செய்ய த்தக்கதாகவுண்டான
பாக்கியமில்லாமல் ஐயயோ நான் ஒரு நிர்ப்பாக்-
-கிய குக்ஷியாகவோ ஜன்மமெடுத்தது வாரீர் குருவே

(அரசுசெய்யவோ—எ-று.) பரதனாகிய நான்
ஜனித்து ஒருராஜாங்கம் நிறைவேற்றுவதோ-
அதற்க்காகும் நான் அனுஷ்டிக்கவேண்டின
கர்ம்மமாக முடிந்ததுவாரீர் குருவே. கவி.

பூவின்முகன் புதல்வனாதியாம்
தரவின்மன்னர்தந்தருமநீதியால்
தேவராயினர்சிறுவனாகியே
ஆவனன்பிறந்தவத்தனவோ. (40)

(இ-ள்.) பூவாகிய வாடாத செந்தாமரையென்-
-னும் புஷ்பத்தில் மனைபதியாகிய பட்டணத்-
-தில் அதிவசிக்கும் சிருஷ்டிகர்த்தாவாகிய
சதுர்முகனான பிரம்மதேவர் முதற்க்கு பிரம்ம
புத்திரனான மரீசி அந்த மரீசி புத்திரனாகிய
காசிபர் அந்தகாசிபபுத்திரனாகிய விவஸ்வா-
-னாகிய சூரியதேவர் அந்த சூரியதேவருக்கு புத்-
-திரனாகிய வைவஸ்வதமனுவென்னும் மனுகு-
-லத்தில் ஜனிக்கும் இக்ஷுவாகு முதல் எனது
பிதாவபரியந்தமுண்டான.

(தாவில்மன்னர்—எ-து-) ஒருசத்துருவோதிக-
-ளுக்கும் ஸாம, தான, பேத, தண்டங்களான,
சதுர்வித உபாயங்களினால் விஜயிக்கத்தக்கஸா-
-த்தியதையில்லாமல் தாந்தாங்களே விஜயசாலி-
-களாககொண்டு சத்துருக்களிடத்தில் பராஜய-
-ப்படாமல் ஸார்வபௌமன்மார்களாயிசக்க-
-ரவர்த்திகளாய் தர்மமென்னும் ஸன்மார்க்க-
-மென்னும் புரோகதிக்குவேண்டின ஸல்கீர்த்திய-
-ங்களை அடுக்கடுக்காகசெய்து அந்தராஜநீதிக-
-ளின்ஹேதுகமாக

(தேவராயினர்—எ-து-) சிலபேர்கள் அனை
சுவர்க்கமாகிய திவ்வியஉலகத்தை பிரகாசித்து
நக்ஷத்திரம்போல் விளங்குகின்றன. அந்த
திரசங்குவென்னும் ராஜாவானவர் ஹரி
ச்சந்திரன் ரகு இப்பேர்ப்பட்ட மஹாராஜாக்க-
ளுடைய வம்சத்தில் சிறுவனென்னும் அற்
பனை ஒருபுத்திரனாக ஜன்மமெடுத்து
(ஆவனன்பிற—எ-து-) எனதுபூர்வஜன்-
-ம கர்மவிசேஷத்தினால் அபராதங்கள்
எல்லாம் என்னிடத்தில் ஆரோபிதமாய் அ-
-ந்த அபராதங்களுக்கு விதேயனாயிநான்
இந்த சூரியவம்சத்தில் பிறந்தவன் அபத்
-தன் என்னும் யாதொன்றுக்கும் பந்தப்-
-டாதவனாயியான் என் பிதாவுக்கும் புத்ர
பந்தம்போலுமில்லாமல் இறைபரங்களில்

உபயபிரஷ்டனாகவோ ஜன்மமெடுத்து வாரீர்குருவே. கவி

துன்னுதாள்வளஞ்சுமந்த தாழையில்
பன்னுவான் குலை பதடியாயினேன்
என்னையென்னையே யீன்றுகாத்தவென்
அன்னையாதெனக்கழகு செய்தவா (41)

(இ-ள்.) துன்னிநெருங்காநின்ற பூர்ண்ணமான விர்க்ஷத்தின் தாளான ஸானுபிரதேசத்தில் இருந்து நீர்வளம் முதலானதுகளை அக்கிரபாகத்தில் செலுத்த தடியினால் சாகைகளையும் பலங்களையும் சுமையாக சுமந்து தன்னை ஸம்ரக்ஷணை செய்யாநின்ற சரீரிகள் இந்த கர்மபலமாகிய பலமானது இந்த விர்க்ஷத்தில் லபிக்குமென்று தென்னை விருக்ஷம் முதலான விர்க்ஷங்களை புத்திரநிர்விசேஷமாக

(பன்னுவான்—எ-து.)

யாவரும்மெடுத்து காட்டத்தகுந்த தான கர்மபலமான ஒரு குலையில் ஒருபதடாகிய பொட்டக்காயைபோல் நானொருவனை விட்டனே குருவே

(என்னையென்னையே யீன்று—எ-து.)

இனிஎன்ன வரவேண்டும். இந்த சூரியவம்சத்தில் என்னை பெற்று ரக்ஷித்தகைகேயியென்னும் மாதாவானவள் எனக்கு என்னென்ன சிருங்காரமுண்டாக்கினது இப்படிவெண்மைக்காக சரீரத்தை

தேய்த்துரைத்து அவிடத்தில் ஒருகலையாக பரிணமித்துவிட்டதே இது என்ன ஆச்-சரியம் குருவே- அவதாரிகை.

இப்படி சொல்லி சம்ஸ்க்காராதிகளை ச-த்துருக்கினனைக்கொண்டு நடத்தி பத்துநா-ள் சூதகம் கழிந்து சுமந்திரன் வசிட்டனி-டத்தில் பரதனுக்கு ராஜ்ஜியபாரசெய்ய சொல்லவேணுமென்று சொல்லவும் அப்போது வசிட்டர் சொல்

# ஆற்றுப்படலம்.

கவி.

வள்ளுறு வயிரவாளரசில் வையகம்
நள்ளுறு கதிரிலாப் பகலுநாளையும்
தெள்ளுறு மதியிலாவிரவுந்தேவுடன்
உள்ளுறை யுயிரிலாயுடலுமொக்குமே. (1)

(இ-ள்.) அதோ வாராய் பரதா இந்நகரமாக்கள் சா-மந்தராஜாக்கள் அரண்மனைநிவாசிகளெல்-லாபேர்களும் சன்னிஹிதராயி இந்தராஜ்ஜி-ய சபையாகிய சபாவேதியில் சோகமுகனாய் தனிப்பட்டிருக்கப்பெட்ட உன்னை எதற்க்-காக வரவழைத்திருத்தினது என்றுதெரிய-வேணுமானால் நமது ராஜ்ஜியத்திலுண்டான ஸ்திதிகதிகள் கௌரவபூர்வம் நீ தெரிந்தவ-னல்லவெ. இந்த ராஜ்ஜியமான அயோத்தியாபட்ட-ணமும் அயல் ராஜ்ஜியங்களான ஐம்பத்தாறு

ராஜ்ஜியங்களும் ராஜாதி ராஜர்களென சக்கரவர்
-த்திகள் என்றுண்டான ஸ்தானத்தில் பரணஞ்செ-
-ய்து இருந்த சூரியகோத்திர ராஜாக்களுடைய கேந்-
-திரீகிர்தமாகிய, பரணத்தில் உள்ளடங்கி அந்த
சக்கரவர்த்தியானவர் மரணமடைந்தும் அனந்த
ராவகாசியான தசரதமஹாராஜாவின் சீமந்த கு-
-மாரனான ஸ்ரீராமசுவாமியானவர் ராஜ்ஜியத்தி
-லிருந்து பஹிஷ்கிர்தராக வந்ததினாலும் அ-
-ராஜகத்துவமென்றுண்டான அவஸ்த்தை பி-
-ராபித்து விட்டது வரராய்பரத ஆகையினால்.

(வள்ளுவைவரவா — எ.து.) சத்துருவிர்-
-ந்தங்களிடத்தில் தண்டனை ஒல்ப்பிக்க கூர்-
-மையோடும் மூர்ச்சையோடுகூடிய கண்க்கமான
வாளாயுதத்தை தர்மம் உலகத்தில் நிலைநிறுத்து
வதற்க்காக கரத்தில் வஹித்து ஸாமபேததான
தண்டமென்னும் சதுர்வித உபாயத்தினாலும் ஷட்-
-குணங்களாகிய சந்தி, விக்கரஹம், யானம், ஆச-
-னம், ரதாய்த்தீபாவம், சமாஸ்ரயம், என்ற ஷட்
குணங்களை மந்திரிமார்களுடன் ஸதாஸர்வ
காலமும் ஆலோசனை செய்தும் எல்லாராஜாக்-
-களையும் கீழடக்கி பரிக்கும் ஸர்வாதிபதியா-
-ன ஒருராஜாவும் பரணதந்தரங்களானநி-
-யமங்களும் இல்லாமல் அராஜகத்துவமடை-
-யும் பூமண்டலம் எதொருபிரகாரத்தில் ரக்ஷ-
-வரமாக வருமென்றால்.

(நன்றாகுதிரிலா—எ-து-) தெளிமையாகிய
கிரணங்களினல் பிரகாசிக்காமல் உள்ள சூரியோ-
-தயத்தோடும் பிரீதிஜனகமான ஒருபகல்காலமுண்-
-டோ அதுபோலவும்

(தெள்ளுமதியிலா—எ-து-) நாள்களாகிய
அசுவதிமுதற்கு இருபத்தியேழு நக்ஷத்திரங்களும்
தெளிய கூடின ஆகாசத்தில் பூலோகமெங்கும்
நிலாவொளியை செலுத்தும் சந்திரோதயமில்லாத
ராத்திரியும் தேவுடன் தேவென்ற திவ்வியசை-
-தன்னியத்தினல் அனுர்த்தஜட துக்கமான சரீர-
-த்துக்கு தைவதன்மையான ஈசுவரானுக்கிர
-ஹத்தினல் அந்தர்பூதமாக நிலையில் நிற்க்கும்
இப்படி சரீரத்தை நிறுத்தாதென்ற

(உள்ளுறையுயிரிலா—எ-து-) சரீராந்தர்பா
-கத்தில் உறைந்து அதிவசித்து நிற்க்கும் பிராணன்
சரீராந்தர்பாகத்திலிருந்து மேல்தூரத்தி பிராணவா-
-யுவானது நசித்து சரீரியானவன் மிர்தியடைந்து ஜ-
-டவமாக பரிணமித்தால் எந்தத்தன்மையோ அதுபோல்
ராஜாவாகிய சக்கரவர்த்தி இல்லாமலிருக்கிற
பூமண்டலம் சுரக்ஷிதாவஸ்த்தையைவிட்டு அம
-ங்கலமாய் அரக்ஷிதாவஸ்த்தையில் ஜீவன்போன
சரீரத்தைபோல் காலாந்தரத்தில் நசித்துபோகும்

கேட்டயோபரதா- கவி-

தேவர்தம்முலகிஞந்திமை செய்துழல்
மாவலியவுணர்கள் வைகுநாட்டினும்

ஏவவையுலகமென்றிசைக்குமன்னவை
காவல்செய்துளவரையின்மைகண்டிலம் (2)
(இ-ள்-) வாராய்பரதா சிஷியனே இப்படி பர-
-ணமென்றும் பரிக்கப்படுவதென்றும் உண்டான
விவஹாரமானது விசேஷமான புத்தியோடு
கூடின மனுஷியராகிகளில் மட்டும் இந்தபூமண்-
-டலத்தில் மாத்திரமாக நடத்தப்பட்ட வியாபாரந்-
-திரமே என்றுவோசனைசெய்தாலல்லவேயல்ல-
(தேவர்தம் உலகினும் — எ-து-) தேவர்களென்ற
புண்ணியாவ்மாக்களான திரயத்திரம்சகோடி
தேவர்கள் அதிவசிக்கும் சொர்க்கலோகத்திலும்
தீமையாகிய பொல்லாத கர்ம்மங்களை செய்
ததினல் அதோகதியான நிரையபுவனமென்ற பா-
-தாளாதிகளான கீழுலகங்களில் அதிவசிக்கும்
(மாவலியவுணர்கள் — எ-து-) அறுபத்தாறுகோ-
-டி அபாரமான சக்தியாற்சிக்காறன்ற அசுர
-வர்க்கங்களை பாதுகாவல் செய்வதற்க்கும் அந்த
பாதாளாதிகளான கீழுலகங்களிலும் இப்படி
(ஏவவையுலகம் — எ-து-) அதல, விதல, சுதல, ரசா-
-தல, தலாதல, மஹாதல, பாதாளாதிகளான கீழுலக
ங்களிலும் இப்படியே மத்தியவர்த்தியான பூலோகம்
முதல் புவர்லோக, சுவர்லோக, மகர்லோக ஜனர்லோ-
-க தபலோக, ஸத்தியலோகாதிகளான, ஊர்த்தலோ-
கங்களிலும் உலகமென்று விவஹரிக்கப்பட்ட
ஏதுபிரவிசைகளைன்றுவதாலும் ஆனதுகளையெல்லாம்

(காவல்செய் — எ-து.) காவலென்னும் பாதுகாவல் செய்யகூடின ஆதிகாரித்துவமுள்ள ஒருதலைவனென்னும் ராஜாவானவருண்டும் சொர்க்காதிபதியாக தேவேந்திரன் பாதாள ராஜாவான மஹாபலி, அசுரசக்கரவர்த்தி இப்படி ராஜாவில்லாமல் ஒருவிடமும் ஒழிந்து அராஜகத்துவமடைந்து காணவில்லையே பரதா. கவி.

முறைதெரிந்தொருவகை முடியநோக்குறின்
மறையவன் வகுத்தன மண்ணில் வானிடை
நிறைபெருந்தன்மையினிற்ப செல்வன
இறைகளையில்லனயாவை காண்கிலம் (3)

(இ-ள்.) ராஜாவென்றமுறை இந்தபிரபஞ்சத்தில் அந்திகாலம்முதற்க்கு ஈசுவரேச்சையினால் வரகூடின ஒன்றுதானோ என்று ஆலோசிக்கிறபோது அது ஈசுவரனுடைய கல்பனசக்தியாகிலும் அந்த ஆந்நியா சக்தியான ஆவேசம் எதிலெல்லாம் பாதிக்க கூடினதென்று ஒன்றிலொன்றுண்டோ என்று கவேஷணஞ்செய்யுங்காலத்தில்.

(மறையவன்வகுத்தன — எ-து.) மறையவனென்ற பிரம்மதேவரால் விபஜித்து மண்ணாகிய பூமண்டலத்திலும் சொர்க்கலோகத்திலும் பாதாளத்திலும், அஷ்டதிக்குகளிலும் சப்தஸாகரங்களான சலனசைத்திய தாவள்ளியங்களோடுகூடி சேரபிக்கும் நிறைந்து பரிபூரணமாக நில்க்காநின்ற

லவணம், இச்சு, சுர, சர்ப்பி, ததி, க்ஷீரம், சுத்தோ-
-தகமென்ற

(நிறைபெருந்தன்மை—எ-து.) நிறைந்துநிற்கும்
ஜலாசயத்துக்கும் நிலையில் சலனமில்லாமல் நி-
ல்க்கும் பர்வதங்களுக்கும் நடந்து ஸஞ்சரிக்காநி-
-ன்ற சராசரங்களாகிய உறும்புமுதல் ஆனைபரியந்த
முண்டான ஜீவராசிகளுக்கும் நிறக்கப்பட்ட ஸ்தாவ-
-ரங்களுக்கும் செல்வன விஸேஷமதிப்பினால் கைமா-
-ற்றஞ்செய்யபட்ட நவரத்னங்கள் முதலான
ஜங்கமங்களுக்கும் எல்லாற்றிற்க்கும் ரா-
-ஜாத்துவமுண்டும் என்று ஆலோசிக்கிறபோ-
-து மனுஷியர்களுக்கும் ராஜாவுண்டும் தேவ-
-ராஜனுக இந்திரன் பக்ஷிவர்க்கங்களில் கருடன்
மிருகங்களில் சிங்கம் பர்வதங்களில் மஹாமேரு
விர்க்ஷங்களில் அச்சுவத்தம் ரத்நங்களில் மா-
-ணிக்கம் இப்படி இந்த பிரபஞ்சத்தில் எதைான்றி-
-லும்

(இறைகாணயில்லன—எ-து.) இராஜாக்களில்லை
என்றுசொல்ல யாதொன்றில்பார்க்குமாயிரு-
-ந்தாலும் யாதொரு கூட்டத்தையும் காணவில்லை
யேபாதா.

கவி.

பூத்தநாண்மலரயணதிபுண்ணியர்
ஏத்துவான் புகழினைநின்றுசொறுங்கூ
காத்தனர் பின்னொரு கணை கணின்மையால்
நீத்தநீருடை கல நீரதாகுமால் (4)

(இ-ள்.) தாமரைமலரில் அதிவசிக்காநன்ற பிரம்ம
தேவர்முதல் சகலமானபேர்களும் இந்தசூரியகோத்-
-திரத்திலுண்டான ராஜாக்களையும் அவருடைய ஸத்-
-திய தர்மங்களையும்

(ஏத்துவரான் — எ-து.) புண்ணியால்மாக்களான
பேர்கள் இட்சுவாகுமுதல் உன் பிதாவுபரியந்த
முண்டான மஹாராதர்களை ஏத்திஸ்துதித்தும்
கீர்த்தித்தும் இந்த ராஜ்ஜியத்தை பரிக்கப்பட்டது

(காத்தனர்—எ-து.) அந்தவிதமாக காவல்
செய்த மஹாராஜாக்களுடைய வம்சத்தில்
ஒரு ராஜாவினுடைய அபாவகாலத்தில் மற்-
-றொரு ராஜாவ பரிக்கப்படாமல் ஊன்றுவடிபோல்
பிரஜாவிர்ந்தங்களை தாங்காமல்

(நீத்தநீருடைகல — எ-து.) எல்லாகாரியங்க-
-ளையும் உபேக்ஷிதமாக செய்தால் அந்த ராஜ்ஜியவும்
செல்வங்களும் பிரஜைகளும் சாகரமத்தியத்தி-
-ல் அகப்பட்டு தகர்ந்த கப்பலும் திரவ்வியங்களும்
சரீரிகளும் நசித்து அந்தஜலத்தில் லயித்து நாமா
வசேஷமாகும் தன்மையைபோல் ராஜாவில்-
-லாமலிருக்கிற அயோத்தியாபட்டணமும் பிர-
-ஜைகளும் நசித்துபோகிறதில்லையோ பரதா-

கவி-

உந்தையோவிறந்தனனும்முனீத்தனன்
வந்துமன்னுதன் வரத்தின்மைந்தநீ
அந்தமில்பேரரசளித்தியன்னது
சிந்தனையெமக்கிது தெரியக்கூறினேன்- (5)

(இ-ள்.) உந்தையாகிய உனதுபிதாவும் அறுப-
-திநாயிரத்தில் பரம் ஸம்வல்சரகாலம் பிரஜா

விர்ந்தங்களை பரிச்சு புத்திரவியோக ஜன்னிய
துக்கமென்றுண்டான ஒரு காரணவசால் மரண
மடைந்தது அந்தபிதாவானவரும் தனது ஸ்ரீமந்த
குமாரனுக்கு பட்டாபிஷேகமானதை நிச்சயித்து
அதை உன் தமையனும் உபேக்ஷிக்கபட்டன

(வந்ததுமன்னைதன் — எ-து-) இந்தவிதமா-
-ன அனிஷ்ட சம்பவங்களெல்லாம் இவிடத்தில்
வந்துசேர்ந்தது உன் அன்னையான மாதாவான-
-வள் வரத்துயவங்களை நிர்ப்பந்தரூபமாக பி-
தாவினிடத்திலிருந்து வாங்கினதினாலாகிலும்
மாதுருபித்ருரோராந்நியயால் ராமன் வனத்தில்
போய்விட்டது- புத்திரசோகம் நிமித்தமாக பிதா-
-வும் மரணமடைந்தது- பதிநாலு ஸம்வல்சரம்
கழிந்தாலல்லாமல் அந்த ராமனும் வருகிறவ-
-னல்ல- மைந்தனென்னும் எனது அருமை
சிஷியனை ஹே பரதகுமாரா ஆனதினால் மாதா
பிதாக்களுக்குவேண்டியும் பூர்வஜனுக்குவேண்டி-
-யும் நீயொருவன் செய்யவேண்டின கிர்த்தியம்
எதென்றல்

(அந்தமில்போரசனித்தி- எ-து-) அந்தபரிதியி-
-ல்லாத இந்தபாரதகண்டத்தின் சக்கரவர்த்தி
ஸ்தானத்தை எற்றெடுத்து இதர ராஜாக்களிட
த்திலிருந்து இறை, வரி, யேழை, கோழை, அங்கம்
சுங்கம் முதலான காணிக்கைகளை சுவீகரித்து
ஆறிலொன்று குடியிறைவாங்கி அசையாமணி
கட்டி கொடுங்கோல் மாற்றி செங்கோல்செ-
-லுத்தி பிரஜாவிர்த்த பரிபாலனமும் என்றுண்டான

கிர்த்தியத்தை நிறவேற்றவேண்டும்-

(சிந்தனையெமக்கிது—எ-து.) அனந்தர காரியமாகசெய்யவேண்டின கிர்த்தியங்க-ளை எல்லாம் உன்னிடத்தில் உனக்கொரு கர்த்தவியபோதம் வர உபதேசித்தேன். குருவா-க்கியத்தை தியஜிக்காமல் நான் சொன்ன மரியாதையை செய்வாய் பரதகுமாரா

கவி-

மூன்றுலகினுக்குமோர் முதல்வனாய்முதல்
தோன்றினனிருக்கயான் மகுடஞ்சூடுதல்
சான்றவருரைசெய தருமமாதலால்
ஈன்றவன் செய்கையினிழுக்குண்டாகு-மோ- (6)

(இ-ள்.) சரணம் குருவே தேவரீர் சொல்லாநின்ற வார்த்தைகளை யடியேன் சிரத்தாபூர்வமாக கேட்டு அந்த விஷயங்களை கௌரவமாக சாங்கோபாங்கம் ஆலோசனைசெய்து உம்முடைய உப-தேசம் சுவீகாரயோக்கியம் தானோ தியஜிக்க வேண்டினதோ என்று ஆலோசனைசெய்யுங்-காலத்தில் தேவரீர் சொல்லப்பட்ட ராஜபட்ட-த்தையும் பரமாதிகாரத்தையும் மிகுண்டான சௌபாக்கியங்களையும் இந்த தினம்முதற்கு ஒருபதினாலு ஸம்வல்சரகாலம் க்ஷமாபூர்வம் செய்ய எண்ணப்போவுண்டான ஒருவனுக்கு ஸாத்தியமல்ல- நிஷேதரூபமாகிய இந்த

ராஜபதவியை அடியேன் சுவீகரிக்கிற ஒருவனு-
-மல்ல. ஏதினாலென்றால் என் சுவாமியானவரும்
கேவலரான ஒருவரல்ல அவருடைய வைபவத்தை
ஆலோசனை செய்தால்

(மூன்றுலகினுக்கொரு—எ.து.) தேவரீர் சொல்-
-லாநின்ற இந்த உத்தர கோசல அயோத்தியென்னும்
நமது புண்ணிய பூமியான பாரதகண்டமென்னும்
கர்மபூமியை மட்டும் ஏகசத்ராதிபதியாய்
பரிக்கும் யோக்கியதையில் மாத்திரம் உட்ப-
-டவரல்ல- அந்தரம் அவனி பாதாளம் என்ற தி-
-ரிலோகங்களில் உட்படாநின்ற ஈரேழுபதி-
-னாலுலோகங்களையும் தேவமனுஷ்ய திரியக்
யோனிஜங்களான சகலஜீவராசிகளையும் மூர்-
-த்திபேதங்களான ஹரிஹர பிரம்மாதிகளையும்
அஷ்டதிக்பாலகர்களையும் எல்லாம் ஸம்ரக்ஷணை
செய்து யாவரும் ஸ்மரிக்கப்படும் ஒரே
ஒரு ஈசுவரனைக்கொண்டு பரமாத்மாவா-
-ய் ஸச்சிதானந்தமென்னும் சைதன்னிய
மூர்த்தியாய் தாசரதிராமனென்னும் நாம
-த்தோடுகூடி லோகரக்ஷணைக்காக அவதா-
-ரஞ்செய்து முதற்மூர்த்தியாய் பிறந்த என்
சுவாமியானவரோவென்றால் யாதொரு அயோ-
-க்கியதையும் தன்னைசேராமல் ஸமஸ்தங்களி-
லும் தன்னியனாய்

(தோன்றினனிருக்க—எ.து.) என்பூர்வஜனாக

பிதாவுக்கு ஸீமந்தகுமாரனாக அவதரித்து யதோ-
-சிதமாக மாதுருபித்ருஶுச்ரூஷணியமென்னும்
நிபந்தனை ஹேதுவாக வனவாசஞ்செய்யுமொ-
-ருவனென்றுவந்தாலும் யாதொரு குற்றங்குறை
பாடுகளுமில்லாமலிருக்கிற அந்தசுவாமியான-
-வர் இந்த காலத்தில் தம்பியான பரதனென்னும்
பாணெருவென் பவித்திரமான சுவாமியானவரு-
-டைய ஸ்தானமானங்களில் ஆரோஹணஞ்-
-செய்து அவருடைய சிரசில் தரிக்கவேண்டின
தான நவரத்ன கசிதமான கிரீடத்தையும்
தரித்து ராஜ்ஜியபாரஞ்செய்யுமாயிருந்தா-
-ல் ஒருகாலத்திலும் அடியனைப்பேரவுண்டா-
-னதொருபக்தனுக்கு அதுபூஷணைமல்லே-
குருத்ரோஹமாய்பரிணமிக்கும் அந்தபதவியை
நீயே சுவீகரிக்க வேண்டுமென்று நிர்த்தேசித்தால்
அது

(சான்றவருரைசெய — எ.து.) சான்றவரை-
-ன்னும் உபதேஷ்டாக்களான பண்டிதர்கள் ஒரு
ராஜாவானவன் அனுஷ்டிக்கவேண்டினதான ரா-
-ஜதர்மங்களில் உள்ப்பட்டதாகவருமோ குருவே-
நமது குலகூடஸ்தனாகிய வைவஸ்வதமனுவான-
-வர் நிர்த்தேசிக்கப்பட்ட ராஜதர்மங்களில் உ-
-ள்ப்படுமோ உள்ப்படாது. ஒருவிதமாக தேவ-
-ரீர்சொன்னபிரகாரம் பரதனை அடியேன் க்ஷமா-
-பூர்வமாக இந்தராஜ்ஜியபாரத்தை நிறவேற்-
-றினால்

(ஈன்றவள் — எ-து-) ஈன்றவளென்னும் இந்தகை-
கேயியான என்மாதாவானவள் தனதுபர்த்தாவு
மிர்த்தியு அடையவும் மாதாக்களுக்கு வைத-
-வியம் வரவும் பிரஜைகளுக்கெல்லாம் அ-
னுதாவஸ்த்தை வரும்படி ராஜ்ஜியத்தை அரா-
-ஜகத்துவபடுத்தி எல்லாம் அமங்களமாக
கடோரகிர்த்தியத்திற்கும் தமையனுடையப-
-ட்டாபிஷேகம் முடங்கும்படி வரத்துவயங்களை
சுவீகரிக்கிறதென்ற அந்த அபராதகிர்த்தியத்-
-திற்கு ஒருகுற்றம் கல்பிக்க வேண்டுமோ
குருவே- எல்லாற்றிற்கும் அவரே குற்றவா-
-ளியாயிருக்க அதற்க்கனுகிறுதமாக அ-
-டியேனுஞ்செய்யுகிறவனுமல்லேன். கவி.

அடைவருங்கொடுமையென்னன்னைசெய்
கையை-நடைவருந்தன்மைநீர்நன்றிதென்றி
ரேல்-இடைவருங்காலமீண்டிரண்டுநீத்தது
கடைவருந்தீநெறிக்கலியினாட்சியோ (7)

(இ-ள்-) இப்போதுதேவரீர் வெளிப்படுத்தும்
இந்த காரியங்களுக்கெல்லாம் காரணபூதை
யானவள் என்மாதாவாகிலும் மாதாவினுடை-
-ய வரத்துவயமாகிலும் இப்பிரகாரம் வருத்தி-
-னதென்றும் தேவரீர் சொல்லிவிட்டீரே - ஆனல்
ஒருவிதமாக இந்தபிரகாரம் வருத்தினதென்று
மாத்திரமல்லை அடியேன் ஹேதுகமாக மாதா-
-வானவள் செய்யாதென்ற இந்த இராதகிர்த்தி-
-யம் மறைத்தான ஒருபாபமாகிலும்

விசுவாசவஞ்சனையென்றும் சுவாமித்துரோக
மென்றும் பிதுருஹத்தியென்றும் பலவிதத்திலு
ள்ள நரகவாதனைக்கு ஹேதுகமான பாபகர்ம
மாகிலும் என் மாதாவானவள் செய்தது. அந்த
பாபகர்மத்துக்கு ஒருபிராயச்சித்தமாகக்கொ
ண்டு அடியேன் செய்யாமல் எல்லாம் சரியாக
நமக்கு வேண்டினதாக ஸந்தோஷித்து ராஜப-
-ரணைமென்றுண்டான கிர்த்தியத்தை

(நடைவருந்தன்மை — எ.து.) நடக்கையாகிய
கீழ்வழக்கங்களில் உள்படாதென்ற ஒன்றிலு-
-மென்று பெருந்தன்மைவாய்ந்த மஹாத்மா
வென்ற ஆதரவை அங்கீகரிக்காதென்ற கநி
ஷ்ட தாபஸரானதேவரீரும் பரதனை அடியேன்
செய்தால் நன்றியாகவரும் அவசித்தியமாகி
லுமென்றே சொல்கிறதுவாரீர்குருவே.

(இடைவருங்கால — எ.து.) இந்த திரேதாயுக
காலத்தில் தமையனிருக்க தம்பியானவன் ரா-
-ஜ்ஜியபாரம் வஹிப்பது அற்புதமாகிலும்-இது
லௌகிகமாகிலுமென்று வரவேணுமானால் ம-
த்திய காலங்களாகிய திரேதாயுகம் துவாபர-
-யுகம்முதலான காலங்களையும் உபேக்ஷித்து
விஞ்சைகாலமென்றுண்டான கலிகாலம் அந்த

(கடைவருந்நெறி — எ.து.) கடையென்-
-னும் அதிகாரத்துக்குவேண்டி பலவான் துர்
பலனைக்கொன்று அதிகாரம் கைப்பற்றுகின்ற

தீநெறியான துராசாரம் மண்ணாசை பெண்ணாசை
திரவியகாமனை, முதலான காரியம் கலியானதி-
-னுடைய தர்மமல்லவோ குருவே - ஆகையினால் இந்த
ஸமயம் அந்த கலிகால துராசாரத்தை மாறுநுறி-
-த்துக்கு வேண்டி நான் செய்யமாட்டேன் குருவே-

கவி.

வேத்தவையிருந்த நீர் விமலனுந்தியில்
பூத்தவன் முதலியபுவியுட் டோன்றினர்
மூத்தவரிருக்கவே முறைமையாணிலம்
காத்தவருளரெனில் காட்டிக்கொண்டிரால் (8)

(இ-ள்.) வேத்தவையாகிய இந்தராஜ்ஜியசபை-
-யில் எனது பிதாவ பரியந்தம் பூர்வீகர்களான ஸ-
-கலராஜாக்களுக்கும் சக்கரவர்த்திகளுக்கும்
ஆசாரியராயி உபதேஷ்டாவாய் ஞானவிர்த்த-
-ராய் அதிவசிக்கிறாநின்ற தேவரீர் உம்முடைய
காலபழமையினால் அதவா உமது பிரபரிசயங்களான
ஓர்மையினால் அடியனிடத்தில் சொல்லவேண்டின-
-து ஏதென்றால் நிர்ம்மலனாய் பரமாத்மாவாய் சோ-
-பிக்கிறாநின்ற நாராயணஸ்வாமியானவருடைய நா-
-பிகமலமென்று சொல்லாநின்ற ஜீவேஸ்வரஜகத்
தென்றுண்டான சக்தியினால் தனது நாபியிலிருந்து
உத்பவிக்கிறாநின்ற

(பூத்தவன்முதலிய-எ-து.) பூத்து உத்பவிக்கா-
-நின்ற யாதொரு சிருஷ்டிகர்த்தாவண்டோ பிரம்-
-மதேவர் அந்த பிரம்மதேவரே யாவருக்கும் பி-
-தாமகன் பிரம்மபுத்திரனான மரீசி - மரீசிபுத்திரனை

காசிபர் காசிபபுத்திரனை விவஸ்வானென்னும்
சூரியதேவர் முதல் வைவஸ்வதமனு இக்ஷ்வாகு
முதலானமஹாராஜாக்கள் அவர்களுடைய
ராஜ்ஜியபாலனகாலத்தில்

(மூத்தவரிருக்கவே—எ.து.) மூத்தவனென்னும்
ஒருநாழிகை ஸமயகாலம் பிராயாதிக்குமுள்ள
பேர்கள் ஜேஷ்டபிராதாக்கள் பிராணபாலனம்
செய்து உஜ்ஜீவிக்காநின்ற காலத்தில் முறைமை-
-யென்னும் தர்மமார்க்கபிரகாரம் க்ஷத்திரியத-
-ர்மத்தை பரிகணித்து தன்னுடைய அதிகாரபரி-
-தியில் உள்ப்படாநின்ற ராஜ்ஜியத்தை அந்த
ஜேஷ்டபிராதக்களை ராஜ்ஜியத்திலிருந்து பு-
-றந்தள்ளி

(காத்தவருளரெனில்—எ.து.) தம்பியான ஒரு-
வன் தமையனை உபேக்ஷித்து ராஜியத்தை பாது
காவல்செய்ததான வல்லராஜாக்களும் இன்னு-
-ன் இனியான் என்று பேரெடுத்துசொல்லத்தக்கதாக
பூர்வோக்தமாக சொன்ன சூரிய கோத்திரமான ம-
-னுகுலத்தில் உண்டென்றிருந்தால் இந்த சபை-
-யோர்கள் கேள்க்க அடியேனிடம் வெளிப்படுத்-
-தினால் குற்றமில்லையே குருவே. அண்ணனிருக்க
தம்பிராஜியம் பரிச்ச சரித்தாம் யிந்த சூரி-
-யவம்சத்தில் பூர்வகாலத்தில் நடந்துண்டோ
குருவே.

கவி.

நன்னெறியென்னினுநானிந்நானில
இன்னுயிர்ப்பொறைசுமந்திருந்துவாழ்கிலேன்

அன்னவன்றனைக்கொண்டார்ந்த லங்கண்மாமுடி
தொன்னெறிமுறைமையில் சூட்டிகொண்டிராகி
(9)
(இ-ள்-) சீரணம் குருவே ஆபல் காலத்தில்
அனாத்தங்களை பரிகரிக்க ஆபல் தர்மமென்று
-ண்டான ஒருதர்மம் புண்ணிய பாப மிசிர கர்ம-
-ங்களை ஆலோசனை செய்யாமல் கீழ் வழக்கங்-
-களை ஆலோசிக்காமல் செய்யலாமென்று மனுஸ்-
-மிர்தியில் உபதேசிச்சது இந்தஸமயம் செய்தால்
உனக்கு குற்றமில்லை பாபமல்லவென்றுயிது
(நன்னெறி— எ-து-) நல்வழியாகிலுமென்று
புரோஹிதஞான தேவரீர் சொன்னாலும் உமது
சிஷியனாகிய அடியேன் விசாலமானயிந்த பு-
-ண்ணியபூமியை
(இன்னுயிர்— எ-து-) இன்னுயிராகிய ஜீவனு-
-க்கும் ஜீவகோடிகளினுடைய பொறையென்னும்
ஸமாதானத்துக்கும் திரவியங்களுக்கும் ஒரு
ரக்ஷைக்கு வேண்டி அதிபதியாகிலுமென்றுண்-
-டான கர்த்தவியத்தை ஏற்றெடுத்து பிரசாவஹி-
-த்து ராஜாவென்றும் அதிகார புருஷனென்றும்
எல்லாற்றிலக்கும் பரமாதிகாரியேயானனென்றும்
உண்டான அபிமானமுள்ளவனாயி எனது சரீ-
-ரத்தில் பிராணனுள்ள காலம் வரைக்கும் அடி-
யேன் அதிவசிக்கமாட்டேன் குருவே. இப்படி
காமக்குரோத லோப மோஹங்களென்று சொல்லா-
-நின்ற துஷ்ட விகாரங்களாகிய அஷ்டராகங்

-தலையும் வெடிந்து ஏதோ இந்த இறைபதங்களில்
செய்யாநின்ற பாபம் என்னைவிட்டு நீங்குவதற்க-
-காக இந்த ராஜ்யத்திலிருந்து நானும் பிரயாணஞ்-
-செய்து-

(அன்னவன்றனை - எ.து.) அன்னவனையென்னும்
என் சுவாமியானவர் இடத்தில் வார்த்தை சொ-
-ல்லத் தக்கதாக அடியேன் ஆரம்பிக்கா நின்ற கிரி-
-த்தியத்திற்கு தடஸ்தமாக சொன்னதும் அந்த
சுவாமியான அவதாரபுருஷன் அவர் எங்கே
யெங்கேயென்று அனுவேஷணஞ்செய்வதற்காக
பாதசாரணை நடந்து நடந்து அவர்வனவாசஞ்-
செய்யாநின்ற விதூரபிரதேசமான விடுதியில் சென்று
என் சுவாமியானவனை நேரில் கண்டு அவருடைய
பாதங்களில் தீர்க்கதண்ட நமஸ்காரமாக வி-
-ழ்ந்து சரணம் ராமசந்திரபிரபோ சுவாமின்
அடியேன் செய்யப்பட்ட ஸமஸ்த்த அபராத-
-ங்களையும் பொறுக்க வேணுமேயென்று சொல்லி
எனது ஸங்கடங்களையெல்லாம் அவரிடத்-
-தில் சொல்லி மனசா, வாசா, கர்மணா, அடியன்
குற்றவாளியல்லையென்று போதியப்படுத்தி
என் விஷயத்திலும் ராஜ்ஜியபாரஞ்செய்யா-
-நின்ற காரியங்களிலும் அந்த ராமசுவாமி
யானவனை ஸமாதானப்படுத்தி இந்த ராஜ-
-தானியில் கொண்டுவந்து பூர்வாதிகம் அலங்கார-
-மாய் மாலைசூடிய கிரீடத்தை பூர்வீகர்களுடைய

நியமானுசிருதமாக கொண்டு அபிஷேகஞ்செய்
யவேணும். அதை உமக்கும் காணுவதற்க்காக
அடியேன் செய்யபோகிறேன் கேட்டீரோகுருவே-

கவி.

அன்றெனிலவனொடு மறியகானிடை
நின்றினி திருந்தவ நெறியினூற்றுவென்
ஒன்றினியுரைப்பினை யென்னுயிரை நீக்குவென்
இன்றுயான் செய்வது இதுவலாதுண்டோ (10)

(இ-ள்.) சதணம் குருவே வாரீர் வஸிஷ்டாசாரியரே
தமையனை சுவாமியானவரிடத்தில் அபிமுகமாக
ஸம்பாஷணைங்களையும் நடத்தி என்னுடைய
ஆகமனோத்தேசம் அவரிடத்தில் சொல்லி சுவாமி
யானவரும் என்னை பார்த்து நாமெல்லாபேர்களும்
மாறுபித்ருரோந்நியை அனுஷ்டிக்கவே-
-ண்டினபேர்களென்றும் சொல்லி எனது அபே-
-க்ஷைகளை அதவா உபேக்ஷிக்குமாயிருந்தால்
நான் அந்த சுவாமியை விட்டுவராமல் அவரோ-
-டு கூடி வாதாசிதாதபங்களிலும் பிரயாச
மேறின தானவனவாசகாலத்தை அந்தசு-
-வாமியானவரோருமித்து அரும்பிரயாசமேறி-
-ன அனுஷ்டானங்களை அவர்காணத்தக்க-
-தாககொண்டு நெறியென்னும் ஸன்மார்க்க
மாக செய்துகொண்ணுவேன்
(ஒன்றினியுரைப்பி—எ-து.) சதணம் குருவே
இனி இதற்க்கு விபரீதமாக மற்றென்று என்-
னிடத்தில் சொல்லபோகிறீரென்றுவந்தால்

அதுகளை செவிக்கொள்ளுதபடிக்கு எனது
சோத்திர சக்ஷுசுகளையடைத்து அக்கினியில்
சாடி ஆல்மாகுதியை செய்வன். இப்படி தமைய-
-னைக்கொண்டுவந்து அபிஷேகஞ்செய்வதோ.
அல்லாமல் அவரோடுகூடி வனவாசஞ்செய்வதோ

(இன்றுயான் — எ-து-) இதல்லாமல் பரதனை
அடியேன் செய்யபோகிறது மற்றொருகாரியமுமி-
-ல்லை- அதிகமாக சொன்னல் தேவரீர்சொல்-
-லும் தர்மோபதேசம் ஹேதுவாக உமது பு-
-ரோபாகத்தில் அடியேன் பிராணனை தியசி-
-த்துவிடுவேன் குருவே. அவதாரிகை.

என்றிப்படி பரதன் நீங்கள் ஒன்றும்
பேசலாகாதென்று சொல்ல சபையிலிருந்த
அரசர்கள் சொல்- கவி.

ஆழியையுருட்டியுமறங்கள்போற்றியும்
வேள்வியையியற்றியும் வளர்க்கவேண்டுமோ
ஏழினோடேழனுமுலகமெஞ்ஞான்றும்
வாழிய நின்புகழ் வாழவாழியே. (11)

(இ-ள்-) சரணம் பாதரான்வாரே தேவரீருடைய
யோக்கியதையை ஆலோசனைசெய்தால் உம்மு-
-டைய கீர்த்தியானது சுவாமிபக்தியினல் மு-
-ன்னேறி முன்னேறி தேவரீர் வர்த்திப்பிச்சு
விட்டீர்- உமது மூதாதைமார்களான பேர்கள்
சிற்சிலர் ஆஞ்ஞாசக்கரத்தை சரியான

படிக்கு நடத்தியும் சிற்சிலபேர்கள் அறங்-
-களென்ற ஆதுலர்சாலை ஓதுவார்க்குணவு
அறுசமையத்தோர்க்குண்டி முதலாகிய முப்-
-பத்திரண்டுவகையான தர்மஸ்தாபனங்-
-ங்களையும் நிலைநிறுத்தியும்

(வேள்வியை—எ-து-) வேள்வியாகிய அசுவமேதாதிகளான யாகங்களை தான் சிர்த்திரவாக நிறைவேற்றி அனைசரமாகிய கீர்த்தியை உமது பூர்வீகர்கள் வர்த்திப்பிச்ச தன்மையைபோல் உமக்கு கீர்த்தி வர்த்திப்பிக்க இனி தேவரீர் ஒன்-றுஞ்செய்யவேண்டியதில்லையே பரதராஜாவே

(ஏழினோடேழு—எ-து-) புண்ணியபாப மிஸ்ரங்களான கர்மத்திரயங்களினால் லபிக்காநின்ற சொர்க்கமத்தியபாதாளாதிகளாகிய மூன்று உலகமும் அதில் உள்பட-டாநின்ற பதினாலு உலகமும் ஒருகாலத்தில் நசித்துபோனாலும்

(வொழியாதின்—எ-து-) ஸ்ரேஷ்டதா-பியாகிய பரமசுத்தாத்மாவான உமது கீர்த்தி எக்காலமும் நியேஸ்துதிக்கப்பட்டவ-ர்கேட்டீரோ பரதராஜாவே.

அவதாரிகை.

என்றிப்படி சகலமானபேரும் வாழ்த்தவும் அப்போது பரதன் தம்பியோடு படைகூட்ட

வேணுமென்று சொல்லி அறுபதினாயிரம் அக்ஷோகிணிபடையோடும் மாதாக்களோ-
-டும் வசிட்டனுடனும் கூடபுறப்பட்டு அஸ்த-
-மானகாலத்தில் ராமன் தங்கியிருந்த சோ-
-லையில் த்தங்கி பரதன் அந்தபொடியிலே
தானே கிடந்து மறுநாள் கால்நடையாக
கங்கைக்கரையில் வரவும் அப்போது குகன்
சுவாமியை க்காட்டிலும் மிகக்கவொட்டா-
-மல் உபத்திரவஞ்செய்யவோ வருகிறானென்-
-று கண்சிவந்து ஆவேசமணிந்துகொண்-
-டு யுத்தகோலம் அணைந்து தன்படை-
-களிடத்தில் சொல்.

குகப்படலம். கவி.

அஞ்சனவண்ணன் என்ஆர்உயிர்நாயகன் ஆளாமே
வஞ்சனையால் அரசெய்தியமன்னரும் வந்தாரே
செஞ்சரம் எனபன தீஉமிழ்கின்றன செல்லாவோ
உஞ்சிவர்போய்விடில் நாய்குகன் என்றெனை ஓதா-
-ரோ. (1)

(இ-ள்.) வரவராய் மனசே என்சுவாமியானவரும் தேவியும் இளையசுவாமியும் போகாநின்ற வனமா-
-ர்க்கத்தைதேடி பரதசத்துருக்கினதிகளும் பரி-
-வாரங்களும் தக்ஷிணமுகர்களாக கங்காதீர-
-த்தினுடைய உத்தரபிரதேசத்திலல்லவோ வந்து
சேர்ந்தது வாராய் மனசே. நாட்டிலிருந்து துரத்-
-தப்படாநின்ற சுவாமியை காட்டிலிருந்தும்

ஓட்டுவதற்க்காக படைசமுஹைத்தார்களுடகூடி வரகூடினவன்தானே இந்தபரதன் வாராய் மனசே என்சுவாமியானவரோவென்ருல்

(அஞ்சனவண்ணன் — எ·து·) அஞ்சனவண்ணன் என்னும் நீலமேகசியாமளவண்ணனயிருக்கிற சுந்தரன். எனதுஆருயிரென்னும் பிராணனுக்கும் பிராணனுயி எனது சேஷ்டபிராதாவென்னும் ருத்துவாதிக்கியமுள்ளவராய் எல்லாபேர்களு-க்கும் மேலாகக்கொண்டுண்டன நாயகனய் சோ-பிக்காநின்ற அந்தராமசுவாமியானவருடைய ஆஞைகையாகியபாரணத்துக்கு அவசரங்கொடுக்-காமல்

(வஞ்சணையால் — எ·து·) வஞ்சணையென்னும் கபடசூத்திரம் மாதாவை கொண்டுசெய்யிப்-பித்து வரத்துயவம் ஹேதுகமாக சுவாமியை நாட்டிலிருந்து துரத்தி ஸிம்ஹாசனத்தை கையேறின அந்தபரதன் என்னும் பொய்மன்னர் களும் பரிவாரங்களும் எடா எனது திர்ஷ்டி-யில் காணுவதற்க்காக இந்த கங்கையைக்கட-ந்து போகவேண்டி இங்கேயும்வந்து சேர்ந்-தார்களோ மனசே

(செஞ்சரமென்பன — எ·து·) ரத்தம்சொரி-யப்பட்ட பாணகணைங்கள் எண்கரத்தில் தீ-யைப்போல் சுவலிக்கின்ற இதை நாண்தொ-டுத்தால் வேடண்பாணங்களைன்று சொல்லி பரதன் லட்சியப்படாதுபடிக்கு நிஷ்பறயோ

சமமாக வருமோ மனசே எனது பாணத்துக்கு
இணையாய் இவரெல்லாம் பிறந்து போகாமல்
(உஞ்சிவர்பேரய்விடில்-எ.து.) இந்த பரதனும்
பரிவாரங்களும் பிழைத்து இவிடம் விட்டுச்செ-
-ன்று சுவாமியானவரை உபத்தரவிக்கும்மாயி-
-ருந்தால் நாயென்னும் சுவான துல்லியனயிரு-
-க்கிற குஹன் நான் வனவாசம் வருகிறபோது
என்னையும் பாராட்டி இப்போது என்னை
ஜயிப்பதற்காக வரும்படி பரத சத்துருக்கி-
-னதிகளையும் இந்தவிடத்துக்கனுப்பி அவரு-
-க்கும் நாயைபோல் சஹாயங்கொடுக்காநின்-
-ற ஒருவன் என்று என்னை அந்த சுவாமியா-
-னவர் அவமதிப்பாரேவாராய் மனசே

இந்த பரதனையும் பரிவாரங்களையும்
சுவாமியானவருக்கு தாக்ஷண்ணியஞ்செ-
-ய்யாநின்ற தன்மையைப்போல நான் கட-
-த்திவிடமாட்டேன் வாராய் மனசே. ராஜா-
க்களை எனது சரங்கள் அவர் கழுத்தில்
ஏற்க்காதபடிக்கு தயாதாக்ஷண்ணியம்
செய்யமாட்டேன் வாராய் மனசே. குஹனு-
-ன அடுத்த தம்பியான நான் இந்தவிடத்-
-தில் உண்டென்று தெரியாமல் பரத சத்துரு
-க்கினதிகள் இங்கேயும் வந்துசேர்ந்தாரோ
வாராய் மனசே - கவி.

ஆழநெடும்புனல் கங்கைகடந்திவர் போவாரோ
வேழநெடும்படை கண்டுவிலங்கிடும் வில்லாளோ-
தோழமையென்றவர் சொல்லியசொல் ஒருசொல்-
அன்றோ-ஏழைமைவேடன் இறந்திலன் என்றெனை
ஏசாரோ (2)

(இ-ள்.) இந்த கங்கையோவென்றால் அகாதமாயும் விஸ்தீர்ண்ணத்தோடுகூடியும் உன்னதங்களான உல்லோலகல்லோலங்களான திரைமாலிகளினாலும் பிரவஹிக்கிறதான இந்த நதியை கடந்து அடா ஏனது சுறாயமில்லாமல் இவர்கள் தென்பால் போவார்களோ வாராய் மனசே

(வேழநெடும்படை — எ-து.) வேழமென்னும் முன்னணியில் நிரைநிரையாக நிக்கிறதான ஆனைப் படையை தொடர்ந்து நிக்கிறதான அசுவப்படை காலாள்ப்படை ரதவாஹினிகளாகிய பாதுகாவலாளிகளைக்கண்டு அவரிடம் போர்தொடுக்காமல் விலகி வழிமாறிகொடுக்கும் ரணவீரனான ஒருவில்லாளியாககொண்டு இறைஞ்ஞனதான் வரலோவேணுவோ வா-ராய் மனசே

(தோழமையென்றவர் — எ-து.) தோழமையென்-னும் என்னுடைய பிராணனைப்போலுண்டான ஒருதம்பியே நீயென்றும் பாதாதிகளானபேர்கள் உனது தம்பிமார்களாய் உனது அதீனதையில் அடங்கானதபேர்களாகிறுமென்று அந்த சு-வாமியானவர் திருவாய்மொழியாக சொல்லானதன்ற வார்த்தையானது அனுசைதத்தியமான ஒருவார்த்தையல்லயோ வாராய் மனசே

(ஏழமைவேடன் — எ-து.) அந்தசுவாமியான-வர் சொல்லப்பட்ட வார்த்தை ஒருவேதகுக்கும் போல்சுவீகரிக்கானதன்ற என்னையும்மறிகடந்த பாதனும் பரிவாரங்களும் சென்றால் ஒன்றுக்கும்

பிடியாதவனேகுறேன் அவன் இந்த பரதாதிக-
-ளினுடைய புரோபாகத்தில்ப்பட்டு இறந்து நாயை
போல் மிர்த்தியடைந்தது என்று எண்ணலகுவாக அவ-
-மதிப்பார்களே வாராய் மனசே அப்படி வராமல்
பிராணனோடு இருந்தாலும் மிர்த்துல்லியனு அவ-
-ரவில்லையோ வாராய் மனசே கவி.

முன்னவன் என்று நினைந்திலன் மெய்புலி அண்ணன்
ஓர் - பின்னவன் நின்றனன் என்றிலன் அன்னவை
பேசானேல் - என் இவன் என்னை இகழ்ந்ததிவ் எ-
-ல்லை கடந்தன்றே - மன்னவர் நெஞ்சினில் வேடர்
விடும்சரம் வாயாவோ - (3)

(இ-ள்.) இந்த பரதன் எனது அண்ணனாகிய சுவாமி-
-யானவரை ஒருத்துவாதிக்கயத்தோடு கூடின ஒரு
பூர்வஜனாகியுமென்று நினைக்கக்கூடினவனுமல்லெ-
பராக்கிரமசாலியாயி புலியை போலுண்டான சு-
-வாமியை அனுகமிச்சுவாரதென்ற லச்சுமண சுவா-
-மியானவரையும் ஸ்னேஹிக்காமல் ஒரு.

(பின்னவன் நின்றனன்—எ-து.) தனது கூடபிற-
-ப்பாகிய ஒரு தம்பியாகியுமென்று நினைக்கக்கூடி-
-னவனுமல்லெ. இப்பேர்பட்டவனாகிய மேல்
கீழ் தன்மைகளை நினைக்காமலிருக்கும்
ஒருமூர்க்கனென்று வந்தாலும்

(என்னிவன் என்னை—எ-து.) குறனை என்னை
இகழ்ந்து பராஜயப்படுத்தி எல்லையான இ-
-ந்த சிறுங்கிவேரபுரத்தையும் கடந்து அவர் அ-
-பேக்ஷித்து அப்பால் சென்றதல்லவோ ஒரு

விபரீதமாக வெருக்கிறது வாராய் மனசே.

(மன்னவர் — எ-து.) மன்னவராகிய ராஜகுமாரர்களிடத்தில் வேடர்களென்னும் கீழ்சாதியில்ப்படாநின்றபேர்கள் தொடுத்தால் அவருடைய மார்பை துளைத்து அவரை ஸம்ஹரிக்காமல் உயர்ந்த ஜாதியில்ப்பட்ட ராஜகுமாரர்களென்று சொல்லி அந்த சாயகங்களும் அவரை கொல்லாமல் பிரத்தியங்முகங்களாக அவருடைய காலில் வீழ்ந்து அவரை சரணம் பிராபிக்குமோ வாராய் மனசே.

கவி.

அருந்தவம் என்துணை ஆள இவன் புவி ஆள்வனென
மருந்தெனின் அன்றுயிர் வண்புகழ் கொண்டு பின்
மாயேனே - பொருந்திய கேண்மை உகந்தவர் தம்-
-மொடு போகாதே - இருந்தது நன்று கழிக்குவென்
என்கடன் இன்றேடை. (4)

(இ-ள்.) குரோதம் சொல்லிக்கிறதில்லை. அருட் பெரிசான பதினாலுஸம்வத்ஸரமென்ற நீர்க்க-காலம் வனவாசம் என்னுடைய ஸ்வாமியானவர் நடந்து இங்கே துணையிருந்தால் பெருமையென்று சொல்லி அந்த சித்திரகூடமான வனத்தில்சென்று தபசை செய்யாநின்ற இந்த ஸந்தர்ப்பத்தில் இவனுக்கு புவியென்னும் புண்ணிய பூமியாகிய அயோத்தியை ஆண்டு பரிபாலனஞ் செய்ய தகுதி அர்ஹதையுண்டோ வாராய் மனசே

(மருந்தெனின் — எ-து.)

மருந்தான அமிர்தம்போல் பிராணிகளுக்கு உத்-
-தமமான ஒருஸல்கீர்த்தியை ஸம்பாதித்து அந்த
கீர்த்தியாகிய புகழே தனக்கு ஸ்வாஸ்வதப்ப-
-ட்டது என்று கீர்த்தியை நிலைநிறுத்தாமல்
ஸ்வாமியானவருக்கு சத்துருவானவன் வரா
-நின்ற காலத்தில் சத்துருக்கள் முன்னேறிப்-
-போவதற்க்காக நான் பின் வாங்கி இவரு-
-டைய திருஷ்டியில் படாதபடிக்கு நணமிரு-
-வைபோல் ஒளித்தோடிப்போவனோ வாராய்
மனசே- (பொருந்திய — எ.து.) ஸ்வாமி
-யானவரும் என்னிடத்தில் பொருத்தமாக
வைக்கின்ற சிநேஹாதிக்கியத்தின் ஆ-
-வேசமடைந்தவனாய் அதே உளக்கத்தினல்
ஸ்வாமியானவருக்கு பரிசரணஞ்செய்வ-
-தற்கு அவரோடுகூடிப்போகாமல் ஸ்வாமி
-யானவர் என்னிடத்தில் சொன்னவார்த்-
-தை எடா குஹனே நீ எனது தம்பி உனது
கோத்திரம் எனது கோத்திரம் என்றுண்டா-
-ன சிநேகபந்தத்தில் இருக்க இந்த ஸமுதா-
-யத்தார்களை வேர்பாடுசெய்து உன்னைஎ-
-ன்னோடுகூடி விநோதமான வனத்திற்க்கு
எனதுபரிசரணார்த்தம் கூட்டிக்கொண்டுசெ-
-ன்று உனது சஹாயமில்லாமல் இந்த ஸமுதா-
-யத்தார்களுக்குநாம்ஸங்கடம்வருத்தலாமோ. இங்-
-கிருந்து பிரஜாவிர்ந்தபரிபாலனசெய்தாலும்போரும்
அது என்பணிவிடையாகவரும் என்று (இருந்து-எ.து.)
அந்தசொற்படி

இருந்தது உபகாரமாக வந்தது. நான் சுவாமியானை-
-வருக்கு வரப்பட்ட சத்துருபாரத்தை ஒழிக்குவதற்க்-
-காக போர்செய்து அவர் எனக்கு தரும்படியான ஸ்-
-னேஹபந்தத்தின் கடமையை இப்போதே நிறவே-
-ற்றி கொள்வேன் வாராய்மனசே - கவி.

நின்ற கொடக்கை என் அன்பன் உடுக்க நெடுஞ்சீரை
அன்று கொடுத்தவன் மைந்தர்பலத்தை என் அம்பாலே
கொன்று குவித்து நிணம்கொள் பிணக்குவை கொ-
ண்டோடி தீன்று திரைக்கடல் கங்கை மடுத்திடை
தூராதோ. (5)

(இ-ள்.) எனது சுவாமியானவரும் சுபமுகூர்த்-
-தத்தில் சிம்ஹாசனாரோஹணஞ்செய்து பிர-
ஜாவிர்ந்தபரிபாலனஞ்செய்வதற்க்காக ரா-
ஜாவாக கிரீடாபிஷேகஞ்செய்து சுவஸ்தான-
-த்தில் இருக்கானென்ற காலத்தில் அந்த அபிஷேக
மண்டபத்தில் வந்து சேர்ந்து தன்னை ஆசீர்வ-
-திக்கும் பூதேவர்களுக்கும் அனுமோதிக்கும் மி-
-க்குண்டானபேர்களுக்கும் உதாரமான ஸம்பாவ-
-ணைகளை தானமாக கொடுக்கவேண்டிய காரங்-
-கிடத்தில் என் அன்பனாகிய சுவாமியானவ-
-ருடைய அந்த புண்ணிய தினத்தில் நெடுஞ்சீரை
நெடும் தீர்க்ககாலமாக கொடுக்க வேண்டின
வல்க்கலத்தை

(அன்று கொடுத்தவன்—எ-து.) அன்றய தினம்
பலபேர்களும் காணத்தக்கதாக கொண்டு
வந்து கொடுத்த பட்டுபீதாம்பரங்களையும்

உபேக்ஷைசெய்து நிர்த்தனனாகக்கொண்டு வ-
னயாத்திரைக்கு அனுப்பினவள் கைகேயி
அந்த கைகேயியானவளுடைய ஸந்ததி வி-
சேஷங்களான அவருடைய பலங்களாகி-
ய சைன்னிய சக்திகளையும் எனது தீக்ஷ்ண-
தையேறின பாணங்களை தொடுத்து சிரம்
வேறு கரம் வேறு கால்வேறு இப்படி சரீரா-
வயவங்களை சிதிலப்படுத்தும்படி ஸம்
ஹரித்து

(கொன்று குவித்து — எ-து.) கொன்று குவி-
யலென்னும் கூட்டமாக கூட்டி அந்த சவ கூட்ட-
த்தை வாரிக்கொண்டு சென்று அதிசீக்கிரமாக
கங்கைகடலில் சேர்க்க செய்யாதோ வாராய்
மனமே

சரணம் பரதான்வாரே அடியேனை உமது ஸ-
ன்னிதானத்திற்கு ஒருதூதுவனாக ஆளனுப்பி
னவன் யாரென்றால். கவி.

கங்கையிருகரை உடையன் கணக்கிறந்தநாவா-
யான். உங்கள்குலதனிநாதற்குயிர்த்துணைவன்
உயர்தோளான். வெங்கரியின்ஏறனையான்
வில்பிடித்த வேலையினான். கொங்கலரும் நறு-
ந்தண்டார் குகன் என்னும் குறி உடையான். (6)

(இ-ள்.) கங்கையான இந்த புண்ணிய நதியி-
னுடைய இருகரைகளான பிரதேசங்களுக்கு அதிபதி
யாகிய ஒருவனாகிலும்

(உங்கள்குல — எ. து.) உங்களுடைய வம்சத்தார்க-
-ளுக்கும் இந்த உலகவாசிகளான ஸமஸ்தர்களு-
-க்கும் தனி ஒப்பற்ற நாதனாகிய ஒருவரல்லவோ
ஸ்ரீராமஸ்வாமி அந்த ஸ்ரீராமஸ்வாமியானவர் இந்த
மார்க்கமாக வனவாசம் வருகிறபோது அவருக்கு
வேண்டின ஸேவனங்களைச்செய்து ஸ்வாமி மேலி-
-லும் உம்முடைய சேவனங்களைச்செய்து நிற்கலா-
-மென்று சொன்ன காலத்தில் அடா நீ எனக்கு வே-
-ண்டி இவிடத்தில் நின்று ஸஹாயஞ்செய்தால் போ-
-துமென்று ஸ்வாமியானவர் சொல்லி இன்றுமுதல் நீ
என்னுடைய ஸோதரனென்றுண்டான ஸ்தானத்-
-தையும் வஹித்து அவருடைய பிராண சகியாக
கொண்டு விளங்காநின்ற ஒருவனாகிலும்.

(வெங்கரியின் — எ. து.) அஹங்காரிகளாக
செல்லாநின்ற மத்தகஜங்களை தெயுடையவதற்க்-
-காக நாடனஞ்செய்து ஜயிக்காநின்ற சிங்கம்போல்
பராக்கிரமசாலியான ஒருவனாகிலும் - வில்லெக-
-த்தில் பிடித்த அனேகம் சைன்னிய ஸன்னஹ-
-ங்களோடுகூடினவனுமாகிலும் என்னை அனுப்-
பாநின்ற ராஜாவே

(கொங்கலரும் — எ. து.) கொத்துகளால் அலர்-
-ந்து விகசிக்காநின்ற தளங்களோடு கூடின புஷ்-
பமால்லியங்களை தரிக்காநின்ற குஹன் என்னும்
நாமதேயத்தோடு கூடின ஒருவன் கேட்பீரோ பரதா-
-ன்வரே.

கவி.

கூற்றாணும் திண்மையான் கரைகாணாக் காதலான்
அற்காணிற் கண்டனைய அழகமைந்த மேனியான்

மற்காணும் திருநெடுந்தோள் மழைகாணும் மணி
நிறத்தாய் - நிற்காணும் உள்ளத்தாள் நெறிஎதிர்
நின்றுநின்றே - (7)

(இ-ள்-) கல்லான பாஷாணத்தைபோல்
கடின காயமுள்ளவனாயி ஒருபேர்களிடத்தி-
-லும் பராஜயப்படாத சரீரமுள்ளவன். த-
-ன்னிடத்தில் நம்பிக்கையோடுகூடின
சுவாமிமார்களிடத்தில் கருணா ஸ-
-முத்திரம்போல் பக்தியுள்ள ஒருவனுமா-
-கிலும்

(அற்காணில் — எ-து-) அல்லென்னும்
அந்தகாரத்தை ஒன்று சேர்ந்து கண்-
-டாலெத்தன்மையோ அத்தன்மையான
சரீர காந்தியுள்ளவனாகிலும்

(மற்காணும் — எ-து-) பலம்பொருந்தி-
-ன தோள்களையும் கார்முகிலைபோலுண்-
-டான ஹேறராஜன்

(நிற்காணுமுள்ளத்தாள் — எ-து-) தக்ஷி-
-ணமுகனாய் பரிவாரஸமேதனாயி
வரும்படியான உம்மை எதிரேல்க்க
மார்க்கமத்தியத்தில் நிற்கிறது கேட்-
-டீரோ பத்ராள்வாரே-

இப்படி தூதுவன் சொல்லகேட்டு அந்-
-த ஹேறணை என்சமீத்தில் வரசொல்லஎ-
-ன்றுசொல்லி அனுப்ப தூதுவன் வார்த்தை
கேட்டு ஹேறன் விர்க்ஷேபதியில் ஆரோ-
-ஹணஞ்செய்து பத்ராள்வாரையும்

ஸோதரனையும் பார்த்து நிற்க்க பரதாழ்-
-வாரும் ஸ்ரீராம ராம என்று நாமோச்சா
ரணஞ்செய்து ஸ்வாமியானவருடைய
பூமிஸ்பரிசனமான பாதுகாஸ்தேலக்கா-
-நின்ற மண்பொடியானதை சிரஸின்
மேல் தரித்து நமஸ்காரஞ்செய்து தக்ஷிண
திசை-யை பார்த்து தொழுது வாரான்-
-தை கண்டு அந்த குஹனும் தன்மை
யாக சொல் கவி-

நம்பியுமென்னாயகனை யொக்கின்றனையனின்றான்
தம்பியையுமொக்கின்றான் றவவேடந்தரித்து நின்றான்
துன்பமொருமுடிவில்லை திசைநோக்கித்தொழுகின்றன்
என்பெருமான்பின்பிறந்தாரிழைப்பாரோபிழையின்றே (8)

(இ-ள்) அதோவாராய் மனசே இந்த கங்கை
கரையில் வந்துநிற்க்கும் பரதாள்வாருடைய
பக்தியையை பார்க்கும்போது என்கரத்திலுள்ள
வில்லும் அம்பும் நிலத்திலே போட்டுவிட்டேன்
இந்த உத்தமனை நான் என்ன நினைத்துவிட்டேன்
இவர்களை பார்க்கும்போது

(நம்பியுமென்னாயகனை—எ-து) சிரேஷ்டதாசி-
யாகமுன்நடந்து வாராநின்ற இந்த பரதாள்வார்
என்னாயகனான ஸ்வாமியானவருக்கு ஸமானப்ப-
ட்ட ஒருவனாகிலும் அயல்நின்றான் அவருடைய
ஸமீபத்தில் ஒருவனாகநிற்க்கிறான் ஒருவனை-
-ன்றால். (தம்பியையு— எ-து) தம்பியான
லக்ஷ்மண ஸ்வாமிக்கு ஸமானமான ஒருவன்

தவோவேடமென்ற தபோவேஷத்தையும் தரித்-
-து இதுவே தலைவிதியென்று மற்றுண்டான பாக்-
-கியங்களையெல்லாம் வெறுக்ககூடினபேர்கள்
போராய் மனசே

(துன்பமொரு — எ-து-) துன்பத்துக்கு ஹேதுவா-
-கிகொண்டு நானொருவன் பிறந்ததிலல்லவோ
ஸ்வாமியானவரும் தேவியும் ஸஹோதரனும் இந்த
மார்க்கமாக வனவாசத்துக்கு வரவேண்டி வந்தது
என்று பஸ்சாதாபித்து திசைநோக்கி ஸ்வாமி
யானவர் போனமார்க்கங்களை தொழுது பார்த்து
தரங்களைகூட்டி செல்லும் இவர்களை பார்க்கும்
காலத்தில்

(எம்பெருமான் —) எம்பெருமானான ஸ்வாமி
யானவருக்கு பின்பிறக்காமன்றி இவர்களும்
ஸ்வாமியானவருடைய ஸோதரர்களென்று ஜனி-
-த்தவென்றுண்டான யதார்த்தமாகிய ஜன்ம-
ஸாபல்லியத்தை உபேக்ஷிப்பார்களோவோராய்
மனசே யதார்த்த ஸ்வாமி ஸோதரத்துவம் இவ
ரிடத்தில் பிரதிபலித்ததல்லவோ காணுகிறதுவோ-
-ராய் மனசே.

அவதாரிகை

என்றிப்படி சொல்லி நான் போயறிந்து வரு-
கிறவரையில் கங்கையில் தோணியிறக்கலாகா-
தென்று பரதன் ஸமீபம் வந்து தொழுதான். அப்-
போது பரதனும் குகனைத் தழுவி நேசித்தான்.
அப்போது ஸ்வாமி வந்த காரியமென்னவென்று
குகன் கேட்க ராமனைத் திருப்பியழைத்து கொ-
ண்டுபோவதற்க்கு வந்தேனென்று சொல்ல பரதன்
பாதத்தில் வணங்கி குகன் சொல். கவி.

தாயுரைகொண்டுதாதையுதவியதரணிதன்னை
தீவினையென்னநீத்துச்சிந்தனைமுகத்திற்றேக்கிப்
போயினையென்றபோழ்துபுகழினேய்தன்மைகண்டால்
ஆயிரமிராமர்நின்கேழாவரோ தெரியிலம்மா. (4)

(இ-ள்.) சரணம் சரணம் பரதாழ்வாரே கிர்பைசெ-ய்யவேண்டும் உம்முடையவிசாலமாகிய பக்திபார-ம்மியத்தை அடியேனென்னென்று சொல்லுவேன்-

(தாயுரைகொண்டு—எ-து.) தாயானமாதாவானவரு-டைய வார்த்தையாகிய அபேக்ஷையானதை என்னி-ஷ்ட பத்னியான ஒருவிவேகருண்ணியதையி-ல் சொன்னதாகிலுமென்று ஸத்தியமாகிலு பெரி-சென்று ஆலோசனைசெய்து அவர் அபேக்ஷிக்காநின்ற வரத்துயவரங்களை கொடுத்து உமக்காக தரகூடின ராஜ்ஜியபரிபாலனத்தையும் பாக்கியங்களையும் மாதாவெக்குவேண்டி பிதாவு கொடுத்ததாகிலும் இது சுவீகாரயோக்கியமல்ல

(தீவினையென்னநீத்து—எ-து.) தீவினையான பொல்லாதகர்மங்களில் ஒன்றாகதான் செய்யாநின்ற ராஜ்ஜியபாரமும் உள்படும். இந்த அவிஹிதமான ராஜ்ஜியபாரத்தில் தனக்கு பழியல்லாமல் மதிப்பெ-ன்னவென்று அதை உபேக்ஷிதமாக ஆலோசனைசெ-ய்து தன்னுடைய ஜன்மமே இந்த விபரீதாவஸ்தை-களுக்கு காரணமாகத்தான் சம்பவித்ததென்றுண்-டான வியாகுலம் வர்த்தித்து அந்த மனோபீடையா-னது முகத்தின் வழியாக பிரதிபலித்து கண்ணீரொ-ழுகி பெருமூச்சடைந்து யாவருங்காணுவதற்க்காக தேவரீரும் வனத்துக்காக

(போயினையென்ற — எ-து-) எல்லாசெல்வபாக்கியங்க-
-ளையும் வொழிந்து வனவாசார்த்தம் போனானென்று-
-ண்டான அவசரம் தேவரீரும் ஸம்பாதித்தது புகழா-
-கிய கீர்த்தியையும் உம்முடைய ஸத்தியாவஸ்தை-
-யினால் பரிகணிக்குமாயிருந்தால் வனவாசார்த்தம்
செல்லாநின்ற ஒருராமசுவாமியோ பத்தோநூறே
ராமசுவாமிகள் மட்டுமோ உமக்கு சரிசமானர்க-
-ளாகவரவில்லை

(ஆயிரராமர் — எ-து-) ஆயிரம் ராமசுவாமிகள்
ஒன்றாகபெருக்கினாலும் உமக்கு ஸமானர்களாக
வரமாட்டார்கள் வாராய் பரதாள்வாரே. கவி.

என்புகழ்கின்றதேழையெயினனேன் இரவி -
யென்பான் - தன்புகழ்க்கற்றை மற்றையொளிகளைத்
தவிர்க்குமாபோல் - மன்புகழ்ப்பெருமை நுங்கள்
மரபினோர் புகழ்களெல்லாம் - உன்புகழாக்கிக்கொ
ண்டாயுயர் குணத்துரவத்தோளாய். (10)

(இ-ள-) அற்புதம் அற்புதம் அத்தியற்புதம் அதிவிசா-
லமனைஸ்கனாகிய உம்மை ஏதொருவிதத்தில் கீர்-
-த்திக்குகிறது ஏழையென்னும் ஒன்றுக்கும்பி-
-டியாத காட்டுஜாதியான வேட ஜாதியில் உள்ப்-
-பட்ட அடியேன் எந்தவிதத்தினாலே ஸ்துதிக்க
வேண்டும் இரவியென்ற சூரியதேவரானவர்

(தன்புகழ்க்கற்றை — எ-து-) தன்னுடைய ஐசு-
-வரியமாகிய ஆயிரகிரணங்களை கற்றையென்னு-
-ங்கூட்டமாக சேர்ந்து பிரபாதத்தில் உதயகிரியி-
-லிருந்து உதிக்கும் பிரகாசத்தினால் விளக்கொ-
-ளியையும் நிலாவொளியையும் மற்றுண்டான
பிரகாசவஸ்துக்களினுடைய கிரணங்களை

பிரகாசமிக்க நின் கிரணங்களால் துரத்தப்ப-
டும் அந்தகாரத்தை-

(மண்டிலத்தை பெருமை — எ-து) இந்த பூமண்டலத்தி-ல் ஏதேனும் கீர்த்திகளும் உம்முடைய பூர்வீகர்களை இக்ஷ்வாகு முதல் உமது பிதாவரையிலுண்டான சகலம் பேர்களுடையும் கீர்த்தி பிரதாபங்களை எல்லாம்

(உன் புகழாக்கி — எ-து) உன்னுடைய வம்சத்தில் ஜனிக்கிறவன் ஏற புஜபல பராக்கிரம சாலியான ஹே பரதாழ்வாரே உம்முடைய காபலத்தை வெளிப்படுத்தாதபடிக்கு கீர்த்திகளை மூ-டிக்கொண்டும் உம்முடைய கீர்த்திக்கு கீழ்ப்படுத்தின ஒருவர் கேட்டீரோ பரதாழ்வாரே-

அவதாரிகை.

அப்போது ஸ்வாமியிவ்விடத்தில் பள்ளிகொண்ட ஸ்தலத்தை காட்டென்று கேட்டு அவ்விடத்தில் விழு-ந்து புரண்டு ராமன் நித்திரை செய்கிறபோது தம்பியென்ன செய்தானென்று கேட்கக் குகன் சொல்

அல்லையாண்டமைந்தமேனியழகனும் அவளுந்துஞ்ச
வில்லையூன்றியகையோடும் வெய்துயிர்ப்போடும்வீரன்
கல்லையாண்டுயர்ந்த தோளாய் கண்கள்நீர் சொரிய
கங்குல் - எல்லைகாண்பளவெநின்றான் இமைப்பிலன்
நயனம் சற்றும் - (11)

(இ-ள்) வாரும் பரதாழ்வாரே இதோ பாரும் இந்த இடத்தில் அடியனால் செய்யப்பட்ட பசுமரங்கில் படு-க்கையான மஞ்சத்தில் கிடந்து.

(அல்லையாண்டமைந்த — எ-து) அல்லாகிய

அந்தகாரமெல்லாம் ஒருவிடத்தில் ஒதுங்கின தன்மை
யைபோல் நீலமேகஸ்யாமளவர்ண்ணமான அழகை-
-யுடைய ஸ்வாமியானவரும் அவரை அனுகமிக்கிற-
-ன்ற தேவியானவரும் அந்தமெத்தையில் நித்திரை
பிராபிக்க ஸோதரனான இளையஸ்வாமியானவர்

(வில்லையூன்றிய—எ.து.) வில்லாகிய தனது
கோதண்டத்தை நாண்முறுக்கிகெட்டி சத்துரு-
-க்கள் வந்தால் தொடுக்கப்படாநின்ற சாயகத்-
-தையும் அதில் கூடிப்பித்து ஐயயோ இந்த ராத்திரி
காலத்தில் இந்தவனபிரதேசத்தில் எனது ஸ்வாமி
யானவரும் தேவியும் சயிக்கவேண்டிவந்ததே
என்றுண்டான மனஸ்தாபத்தின் ஆதிக்கியத்தை-
-யினால் உளைறும் உளைறும் என்றுண்டான உஸ்வா-
சநிஸ்வாசங்களையுஞ்செய்து காவல்புரிந்து நில்-
-க்காநின்ற ஒருவராகியும்

(கல்லையாண்டுயர்ந்த—) கல்லாகிய மலைகள்
போலவொத்த வாமதக்ஷிணங்களான புஜபலபரா-
-க்கிரமசாலியான ஸௌபராதரான்வாரே. அந்த இளை
-யஸ்வாமிக்குண்டான மனப்பிரயாசத்தினால்
அந்தஸ்வாமியானவருக்கு நேரிடும் தௌர்பா-
-க்கியத்தை நினைக்கும் கண்டு சஹிக்க ஒண்-
-ணாமல் ஐயயோ எனது தமையன் இந்தவித-
-மாக எத்தின ராத்திரிகாலம்முடித்து எந்த
விதமாக இந்தபதிநாலு ஸம்வத்ஸரகாலம் வ-
-னதீக்ஷை நிறைவேற்றப்படும் என்றுலோசனை செ-
-ய்தவனாய் பெருமூச்சுவிட்டு கண்ணீர் கவிழ்த்த-
-டங்கள் வழியாக ஒழுக்கி ராத்திரியினுடைய

ஆரம்பமாகிய காலம்முதல்

(எல்லைகாண்பளவும் — எ-து.) ராத்திரியினுடைய அந்தியகாலமென்னும் பிரபாதம் வரைக்கும் சுவாமிக்கு பாதுகாவலாகநின்றன் அந்த அவசரத்தில் இளையசுவாமியானவர் நித்திரையில் பெட்டதோ அடியேன் ஜாக்கிரதை செய்யவேண்டுமோ வென்று பார்த்தபோது அந்த இளையசுவாமியானவர் லேசமாவதும் அந்த ராத்திரியினுடைய அந்தியயாமம் வரைக்கும் கண்ணிமைமூடாமல் நித்திராரஹிதனுயி சுவாமியானவருக்கு பாதுகாவல் நில்கப்பட்டவர் கேட்டிரோ பாதாண்வாரே - கவி.

ஏண்பத்தைகேட்டமைந்தனிராமனுக்கிளையா
நென்று- முன்பொரத்ததோற்றத்தேமில் யானென்று
முடிவிலாது - துன்பத்துக்கேதுவானேனைவைது
துடைக்கநின்றன் - அண்டத்துக்கெல்லையுண்டே
யழகிதென்னடிமையின்றே (12)

(இ-ள்.) அதோ வாராய் குஹனே நீர் சொல்லாநின்ற விவரங்களை கேள்க்காநின்ற காலத்தில் ஐயயோ ஸ்ரீராமசுவாமியானவருக்கு இளையபேர்களென்று

(முன்பொரத்த — எ-து.) முன்னேபேரெடுத்துசொல்லாநின்றபேர்களின் பாதஞனநானே ஒருவனென்றுசொல்ல அர்ஹதையில்லாதபடிக்கு யானெருவன் அந்த சுவாமியானவருக்கு ஒருகாலமும்முடியாத

(துன்பத்துக்கேது — எ-து.) துன்பமென்ற வினவாசம் பிதுர்மரண ஜன்னியதுக்கம் சத்துருபாதை

இப்படி பலவிதத்திலுண்டான துன்பங்களுக்கு ஹேதுபூதனாக நம்பியானவன் ஜன்மமெடுத்து தன்னிமித்தம் ஸ்வாமியானவருடைய ஸோதரவர்-க்கத்தினில் ஒருவனென்றபிமானிக்கவும் அர்ஹதை இல்லாமல் நான் ஸங்கடப்பட்டது "அவனது துடைக்-கிறேன்" அந்த லக்ஷ்மணன் என்னால் வரகூடின ஸ்வாமி ஸங்கடத்தையும் எனது மானஹானியை-யும் நிர்ம்மார்ஜ்ஜனஞ்செய்ய ஸ்வாமியானவரு-டைய ஸமீபமாக நிற்கிறான்.

'அன்பத்துக்கெல்லை — எ. து.) அன்பாகிய அவனி-டத்திலுள்ள பிரியம் மோதம் பிரேமம், பிரமோதமெ-ன்ற இஷ்டத்துக்கும் ஆதரவுக்கும் அந்த லக்ஷ்மண-னுக்குலபிக்கப்பட்ட எல்லையாகிய கைகண்-டோம்! அடிமையாகிய ஸேவனங்களுக்கு பண்ணத்துணை ஸேவகனுடைய ஸர்வலக்ஷணமும் லக்ஷ்மணனை சேர்ந்து விட்டது என்று நான் சொல்லவேண்டுமே ஒருதனை.

அவதாரிகை

என்றிப்படி சொல்லி அனுபவமாகயிருந்து மறுநாள் கெங்கை கடக்கிறபோது பல்லக்கில் போகப் பட்ட கௌசலையைக்கண்டு இவள்யாரென்று குகன் கேள்க்க பரதன் சொல்-

கவி.

சுற்றத்தார் நிமைக்கொண்டன்றான் படையெல்-லாம் கெங்கையில் சுழன்றிடாமல் - கொற்றத்தால-க்கரைகடத்தியெனக்குதவிசெய்த குகனே வெந்-தர் - முற்றத்தான் முதற்றேவி மூவருக்கு மீன்றாளை முன்னீன்றாளை - பெற்றத்தால் பெறும் செல்வம் யான் பிறத்தலால் துறந்த பெரியாளையா. (13)

அதோவாராய் குறைனே தணமயனைக்காணவேணும்
ராஜ்ஜியத்தில் கொண்டுசென்று கிரீடாபிஷேகஞ்
செய்யவேணுமென்றெண்ணி எனதுபரிவாரங்கள்
நகரமாந்தர்கள் அறுபதுகோடி அக்ஷௌஹிணி சைன்-
-னியங்கள் இப்படி ஒருவிதம் ராஜ்ஜியத்தில் ஒ-
ருபேர்களும் அபேக்ஷிக்காமல் ஸ்ரீராமபிரானு-
-டைய சந்நிதிக்கு பிரயாணஞ்செய்யாநின்ற கால-
-த்தில் இந்தவிஷயம் உனக்கும் ஸந்தோஷகரமெ-
-ன்றெண்ணி வேண்டின ஸஹாயங்களை செய்ய ஒ-
-ருவன் வெண்ணத்தங்கி நின்று

(சுற்றத்தார் தமை — எ.து.) சுற்றத்தார்களான
உன்னுடைய ஒருலக்ஷத்தி ஐயாயிரம் படன்மார்-
-களையும் மிக்குண்டான பந்துவர்க்கங்களையும்
எல்லாம் ஸங்கடிப்பித்து ஒவ்வொருபேர்களு-
-க்கும் விதம் விதமாகிய தோணி வங்கி முத-
லான தரணஸாதனங்களையும் ஆனைப்படை குதிரை
ப்படை தேர்ப்படை காலாள்ப்படை முதலான யா-
-தொன்றுகளையும் பாக்கியில்லாமல் இந்த ஸமுத்ர
யாத்திரையில் சேர்த்தி அத்தியந்தமான நீராக்ஷத்தோ
டு கூடின கங்காநதியில் இறக்கி உல்லோல கல்லோல
ங்களான திரைமாலிகளிலேயோ நீர்சுழிகளான
கயங்களிலேயோ உட்படாமல் யாதொருபேர்களுக்-
-கும் பயாசங்கைகள் வராத்தவிதம் எல்லாபேர்களு-
-ம் உல்லாசஸந்தோஷம் வரும்படி வாத்தியகோஷ
சங்கீதங்களினாலும் உனது.

(கொற்றத்தாலக்கை — எ.து.) கொற்றமென்னும்
பராக்கிரமமான ஆந்திரியாசக்தியினாலும்

நாவிகத்தொழிலின் வல்லமையினாலேயும் மனுதீர-
-த்தில் கடத்தி விட்டு பிரயாசமேறின உதவிகளை
பிரயத்நங்களை செய்து என்னை ஆதரித்து நிற்க்-
-காநின்றனை இறைனே. என்பக்கமாக ஆந்தோனி-
-ரவைனர்களால் வஹிக்காநின்ற முத்துபல்லக்கி-
-லிருந்து வரகூடின இந்துமாதாவெ உங்களில் யாரை
-ப்பெற்ற மறைதியாகிலுமென்றல்லவாந்கேள்க்-
-கிறது. வேந்தர்களென்ற மாகதாத்தியங்களை
ஐம்பத்தி ஐந்து ராஜ்ஜியங்களிலிருந்தும் தல-
-ஸ்தானநகரமான அயோத்தியாபுரிபட்டணமை-
-ன்னும் ராஜதானியில் வந்து இறை, வரி, கப்பம்
ஆங்கங்களை ஒருக்காநின்ற ராஜாக்கர்கள் வந்-
-து நிறைந்து நிற்க்காநின்ற அங்கணபிரதேசமு-
-ன்னவெனுயும் ராஜாதிராஜன் சக்கரவர்த்தியாயும்
சோபிக்கிற பிதாவான தசரதமஹாராஜாவு-
-க்கு

(முற்றத்தான் — எ-து-) எல்லாசௌபாக்கி
யங்களும் பரிபூர்ண்ணமாக கொடுக்காநின்ற
முதற்றேவியாகிய தர்மதாரங்களில் ஆத்திய
பத்ணியாகிய கௌசல்லியயென்றுண்டான ஒ-
-ருவரே இவர். ஜகத்திரயங்களையும் தண்ணிட-
-த்திலிருந்து உல்பாதனஞ்செய்யும் ஜகல்பிதா-
-வாகிய ஒருவரை எனதுபிதாவுக்கு சுந்தரியாக
முன்னே ஜணிப்பித்து

(பெற்றத்தாற்பெறும் — எ-து-) தீரண்பெற்றெ-
-டுக்கும் பெருஞ்செல்வமான அழேல்லியமாகிய சௌ
பாக்கியத்தை துஷ்டயான கைகேயியானவளுக்கு

பிதாவின் பீஜத்தில் இரண்டாம் ஸந்ததியாக
நான் ஜனித்ததினால் உபேக்ஷிக்கப்பட்ட பெரியா-
-ளென்னும் மறைதியான ஒருவரே இவர் எனக்-
-கும் உனக்கும் மாதாவாயும் நாம சுவாமியை பெ-
-ற்றெடுக்கா நின்ற ஒருவரே இவர் என்று தரித்து
க்கொள்வாய் குறனே

சரணமே சரணம் தாயே. அதோ வாராய் பரதா
என் பாதத்தில் வீழ்ந்து பாதாபிவாத்தியஞ்செய்-
-ப்பட்ட இவன் ஆனாகிலும் மகனே. தாயே கேளும்

கவி.

என்றவுமே வுனதடியில் நெடிதில் விழுந்தழுவா-
ணையிவனாரென்றய். குன்றுபிரிகராவின்றயரு-
-டைய கொடிவினவ கழுர்க்கால்வேடன். என்-
றுணவனிராகவர்க்கு பிணையவர்க்கு மிலக்
குவர்க்கு மெனக்கும்மூத்தோன் - இன்றுணய
திருநெடுந்தோள்குகனென்பாணிபயின்றுரிகில-
ம்மா-14 (இ-ள்-) சரணம் தாயே சுவாமியானவ-
-ருக்கும் பரதனனஅடியேனுக்கும் குறனை உன-
-க்கும் மாதாவைபோன்ற ஒருவரே தேவரென்-
-று உம்மைபரிசயப்படுத்தினபோது அந்தவா-
க்குகளை முழுவதும் கேள்ப்பதற்க்கு முன்னமா-
-கி தாயேஅம்மா ஸமஸ்தாபராதங்களையும் பொ-
றுக்கவேண்டுமென்று சொல்லி அடியற்றமரம்
போல் தீர்க்க தண்ட நமஸ்காரஞ்செய்து
இந்த ஸந்தர்ப்பத்தை நம்மைபோல்பாகபா
-க்கொக சிந்தித்து அழுது துக்காசுருக்களை பொழிந்து
மகனை என்பேரில் கிருபைசெய்யவேண்டும்

தாயேயென்று சொல்லிநின்ற இவன்யாரெ-
-ன்று பரிசயப்படாமல் என்னிடத்தில் கேள்க்கா-
-நின்ற தேவரீரும்

(கன்றுபிரிகாராவின் - எ.து.) கூட்டத்தை
விட்டுமா.ற்றுப்பசுவான தாய்ப்பசுவானவள்
தனது குழந்தையெங்கேயென்று கதறிக்கதறி
மணம்பிடித்து வெகுளியான பரிப்பிராந்தி-
-யோடுகூடி உழலும் தாயாகிய பசுவைபோல்
சேவிக்கப்பட்டபூங்கொடிபோன்றவளே தாயே.

வேடவம்சத்தில் ஜனித்தவனாய் பாதங்க-
-ளில் விரதண்டையைதரித்தவனும் வேடர்-
-களுக்கெல்லாம் ராஜாவாகிய இவன் நமக்கு
அன்னியன் பந்தமில்லாத ஒருவனைபோலயல்ல-
உமது புத்திரபந்தத்தில் அடியேனுடைய தமை-
-யனென்னும் பந்தத்தில் நம்மை ஸம்மந்தி-
-க்காநின்ற அடுப்பமுள்ளஒருவன். தமையன்
இந்த மார்க்கமாக வனவாசம் வருகிறபோது
அந்த ஒருராத்திரிகாலத்தில்

(என்றுணைவ - எ.து.) என்துணைவனை ஸ்-
-வாமிக்கு இனிமையான அனுஸரணத்தோடு-
-கூடி ஒருஸஹாயியாக இவன் நின்று ஆசார
உபசாரங்களினாலும் சஹாயஸன்னத்தை-
-யினாலும் ரகுகுலவம்சஜாதனான ஸ்ரீராம-
-ஸ்வாமிக்கு ரக்தபந்தமுள்ளவனைப்போல்
பிரியம்கரனாக ஸேவனஞ்செய்து சத்துரு-
-க்கினனுக்கும் லட்சுமணனுக்கும் என-
-க்கும் மூத்த அண்ணனைபோல் ஸ்வாமி-
-யானவரிடத்தில் அடுத்த பந்தம்

புலர்த்தாதன்ற ஒருவனே இவன்

(குன்றனைய — எ-து) குன்றன பர்வதத்தை போல் சலனமற்ற லட்சுமிவாசம்பொருந்தின கரங்களையுடைய குறைவனென்னும் ஒருவன் இவன் கேட்டீரோதயே. கவி.

நருவீர அல்லிர் மைந்தர் யினிதுயரால் நாடி
யுந்து காடுநோக்கி - மெய்வீரன் போந்ததுதா-
-ன் நவமாயிற்று மன்றேவிலங்கிற்றின்டோ-
-கைவீரக் களிறனைய காளையிவன்றன்றோ-
-டுங்கலந்துநீர்கள் - ஐவீருமொருவீருய் அகலி-
-டத்தை நெடுங்காலமளித்தீரின்றே. (15)

(இ-ள்) வாராய்மகனே வாராய் பரதா துக்கிக்கக்கூடாதேமகனே! பிதுருமரணம் பூர்வஜனுடைய வனவாசம் என்றுண்டான இத்திறயும் சொற்பமான துக்கம் ஹேதுகமாக தமையனுக்கு அதிகாரரூபமான நாட்டைதான் பரிக்காமல் காட்டில் சென்று தமையனை கூட்டிபோகலாமென்று எண்ணி

(மெய்வீரன்போந்தது — எ-து) ஸத்தியசந்தை வெளிப்படுத்தி நிரபராதியேயென்று உலகத்தார்கள் சம்மதிகொடுக்க நீராஜ்ஜியத்தை பிரிவு செய்து காட்டுக்கு பிரயாணஞ்செய்ததும் நவமான ஒரு சுபமாக விளங்கினது என்று ஸந்தோஷிக்கவேண்டும்

(கைவீரக்களிறனைய - எ-து) ஒருபேர்களும் தடுக்கவொண்ணாமல் உளக்கமேறின காளையை போலேயும் மத்தகஜத்தைபோலேயும் சோபிக்காநின்ற இவனோடுகூடியும் நீங்கள்

(ஐவீரும் ஒருவீராய் — எ-து.) ஐந்துபேர்களும் எனது ஸந்ததிகளாய் ஏகோதர ஸஹோதரர்க-ளாய் விசாலமான பூமண்டலத்தை தீர்க்ககாலம் ஸம்ரட்சிணை செய்து கொள்வீர் மக்களே.

பின்பு அமித்திரை [illegible] கண்டு யிவளாரென்றன்

அப்போதுபாதன் சொல். கவி.

அறந்தானேயெனநின்று ஆளமிருங்கங்கைக்கரை
யருகேயூரில் - நிறந்தானேயிங்கிருந்ததாயாரோ
வென்றணையே நீதியாக - இறந்தான்றனிளந்தேவி
யாவர்களும். தொழும் கழக்காலிராமன் பின்பு-
புறந்தாருமுளைதன்ன பிரியாதான்றனைப்பெற்ற
பெரியாணையா. (16)

(இ-ள்.) வாராய் குஹனே வீரா அறமென்ற சத்தியம் புண்ணியம் காருண்ணியம் தவசு என்ற நான்குபே-தங்களோடு கூடின தர்மதேவதை கரசரணாதிச-ரீரமெடுத்து வந்த தன்மையைபோல் கௌசலி யாதேவியின் பக்கமாக நிற்க்காநின்ற இவரை பா-ர்வைசெய்து அத்தியகாதமான கெங்கைக்கு அதிபதியாயும் சிறுங்கிபேரபுரமென்னும் ஊரு-க்கு நாதனையும் சோபிக்கப்பட்டவனே குகனே அன்பென்னும் தயாதாக்ஷிண்ணியத்தின்

(நிறந்தானே — எ-து.) நிறமாகுபிரகாசத்தோடும் தேஜஸியாகிய இவரை யாரென்றுபரிசயப்படுத்த வேண்டும் என்றல்லவோ கேள்க்கிறது. நெறியா-கிய சத்திய தர்ம்மாதிகளில் அனுபிரமாணமாவது கியசிக்காமல் தனது சத்தியஸத்ததையானது உலகம்

அவசானம் வரைக்கும் நில்க்கத்தக்கதாகசெய்து
பத்னியான கைகேயிமாதாவின் வரத்துயவரங்களை
கொடுத்துசத்தியத்துக்கொருமாதுருகாபுருஷரயி.

(இறந்தாண்றன் — எ-து.) இறந்துசொர்க்கா-
-ரோஹணஞ்செய்த எனது பிதாவானவருக்கு இளை-
-மையான பத்னியாயும் தேவமனுஷியாதிகளான யா-
வர்களுடையும் ஆதரவை சம்பாதிக்கிறான்ற ஸ்ரீரா-
-மசுவாமியானவருக்கு பின்பிறந்தவனுயும்

(புறந்தாருமுனைன்ன — எ-து.) அந்தராமசுவாமி
யானவருக்குபின்பிறக்கப்பட்டவனே இவன்
என்று யாவரும் கீர்த்திக்க வனவாசஞ்செய்-
-யாநின்ற லட்சுமணனுக்கும் எண்ணிபிரியாமல்
வராநின்ற சத்துருக்கினனுக்கும் மாதாவான ஒருமெ-
-ஹதியே இதோ வரப்பட்டவர் சுமித்திரையென்னும்
நாமதேயமுள்ள ஒருவர் இவர் கேட்பீரோகுஹனே.

அவதாரிகை.

இப்படிசொல்லகேட்டு சுமித்திரையை வணங்கி
பின்புகைகேயினையக்கண்டு அவன் யாரென்று
கேள்க்கபரதன்சொல். கவி.

படரெலாம்படைத்தாளைப்பழிவளர்க்கும்
செவிலியைத்தன் பாழ்த்தபாவிக்- குடரிலே
நெடுங்காலம் கிடந்தேற்க்கு உயிர்ப்பாரங்கு -
-றைந்துதேய- உடரெலாமுயிரிலாத்தனைத்-
-தோன்றும் உலகத்தேயொருத்தியாகி- இடரிலா-
-முகத்தாளை யறிந்திலையோயிவளாகுமென்னை
யீன்றாள்- (17)

(இ-ள்.) இன்னமும் கௌசலியை சுமித்திரை
யென்றுசொல்லாநின்ற மாதாக்களை துடர்ந்து

வராநின்ற மாதாவை பார்த்து இவர் ஆரென்றல்லவோ கேள்க்கிறது. இவன் விஷயத்தை சொல்லுவதற்க்கே வெட்கமாகிலும் ஏதிலனென்றால் இவன் படர் என்று சொல்லப்பட்ட பாபத்தை தனக்கு ஒரு சகியாக சேர்த்து வளர்த்து விகசிதமாக்கி துக்காவஸ்த்தைகளையெல்லாம் உண்டாக்கி செவிலிதாயென்று சொல்லாநின்ற மாதுர்த்துவமுள்ள மஹாபாபியின்

(குடரிலே நெடுங்காலம் — எ.து.) குடலாகிய மலமூத்திர பாத்திரமாய் கும்பீநரகமென்ற அந்த கர்ப்பத்தில் தீர்க்க காலங்கிடந்து அந்த நரகயாதனையாகிய துக்காவஸ்த்தையில் இருந்து விழுக்கஐய் பூமியில் பிறக்கிறதென்ற பாதகமாகிய எண்ணிடத்தில் உண்டான பிராணன் சரீரமெடுக்கிறதென்ற எனக்கே ஒருபாரமாகிலும் பிராணதாரணம் செய்திருக்கவே ஸாத்தியமல்லெ. பிராணன் போனாலும் குறைவில்லை என்றுண்டான ஸங்கடம் நான் அனுபவிக்க-

(உடைவராயிழந்த — எ.து.) உடலாகிய சரீரத்தில் ஜீவஸ்ஸற்ற தன்மையைபோல் லோகவாசிகளான பிரஜாவிர்ந்தங்களையெல்லாம் இவள் ஒரே ஒருத்தியே ஸங்கடப்படும்படி செய்த அநாஜகத்துவமாக செய்த அபராதங்களுக்கெல்லாம் காரணபூதமாய்

(இடரிலழுகத்தாளை — எ.து.) இந்தவிஷயத்தில் தனக்கொன்றிலும் அவமானமில்லாமல் தனது முகத்தில் சோகபாவனையில்லாமல் இருக்கிறதென்ற இவளை நெறித்ததில்லையோ இப்படி பிரசன்ன-

வதனையாயிருக்கும் இவளாகிலும் என்னை
பெற்ற கைகேயிமாதாவுகேட்கூரோ இறனே.

திணாகண்டு நீங்குபடலம்

கவி.

எடுத்தமாமுடி சூடிநின்பாலியைந்
தடுத்தபேரரசாண்டிலை அய்யநீ
முடித்தவார்சடைக்கற்றையைமூசுதூ
சுடுத்துநண்ணுதற்குற்றளதியாதின்றே(1)

(இ-ள்.) சரணம் பரதீதுவராஜஇருக்கியே.
அதோவாராய் பரதா உன்னை பார்க்கும்போது
பரதன் என்ற அன்னுவர்த்தநாமதேயத்துக்
-கு நீவழிப்படாமல் ஸன்னியாஸ வேஷமெடு
-த்துவந்தாயே. இது என்ன ஆச்சரியம்

(எடுத்தமாமுடி-எ-து.) மாதுறுபித்தரோரா
-ஜ்ஜியபின்னல் நீ ஏற்றெடுக்கா நின்ற மறைத்
-தான ராஜகிரீடத்தை தரித்து உன்னிடத்தில்
அதிஷ்டமாகிய. (அடுத்த-எ-து.) உனக்கு அ
-னுயோஜ்ஜியமான பெரியகர்த்தவ்வியமாகிய
ராஜாங்கமான பூபாரத்தை நீசெய்யப்பட்டவன
-ல்ல- ஜயனைன்னும் சிரேஷ்டதாரியாகிய நீ ஒவ்வொ
-ன் ராஜசின்னங்களான வேஷவிதானங்களை
சுவீகரிக்காமல். (முடித்த-எ-து.) உன்னுடைய சி
ரசில் கேசபாரங்களையெல்லாம் ஜடையாகபிடித்து
பட்டுபீதாம்பரங்களையெல்லாம் தியஜித்தவ
ஞய்பூரேணுக்களினால் மலினங்களான வஸ்த்திரங்களை

(அடுத்துநண்ணுதற் — எ.து.) உடுத்துசரீரத்தில்
தரித்தவனாய் நீயும் இதே மார்க்கமாக பிரயாணஞ்-
-செய்ய காரணமென்ன? ராஜாவாயிருக்கவே-
-ண்டியநீ ஒருவன் இப்படியே ஜடாதாரியாய்
வரும்பொருட்டு ராஜ்ஜியத்தில் சம்பவிக்கா-
-நின்ற ஸம்பவவிகாசங்களைஞ் யாதோவெ-
-ன்று நான் தெரிந்தனல்லவே பாதா.

சரணம் பாரத்துவாச இருஷியே. கவி.

மறையின் கேள்வற்கு மன்னிளந்தோன்றல்
பின்- முறையினிங்கிமுடிநிலங்கொள்கிலேன்
இறைவன் காக்கிலனுமைனில் யாண்டெலாம்
உறைவன் கானத்தொருங்குடன் யானுமே.(2)

(இ-ள்.) மறைகளாகிய வேதங்களுக்கெல்லாம்
இருப்பிடமாய் வேதாந்தவேத்தியனாய் வேதாந்தஸார
மூர்த்தியாய் சோபிக்கும் என்பூர்வசனை ஸ்ரீராமஸ்வா-
-மிக்கு என் பிதாவானவர் தனது அதிகாரத்தில்
உள்ப்படாநின்ற பூபாரத்தையெல்லாம் வழக்குமே-
-மாக கொடுத்தவராகிலும் உமது அபிஷ்டப்படி ஸே-
-வனஞ்செய்ய அடியேன் ஸன்னத்தனாகிலுமென்று
சுவாமியானவர் பிதுருவாக்கியத்தை சுவீகரி-
-த்து ததநந்தரம் பிதாவானவரும் பட்டாபிஷே-
-கத்துக்குண்டான முகூர்த்தம் நிஸ்சயித்து அடுத்-
த சுப்பரபாதத்தில் அபிஷேகத்துக்கொருங்-
-கின காலத்தில் என் மாதாவானவள் பூர்வகால-
த்தில் வாங்கின வரத்துவயங்களை கேட்டு ஸதி-
தியஸந்தனை பிதாவானவர் அதைகொடுத்து

(முறையினீங்கி-எ·து·) முறையென்னுங்கிரமத்துக்கு
விபரீதமான மாதாவானவளுடைய ஆக்ஞயா சக்-
-தியினால் என்பூர்வஜனன சுவாமியானவர் தனது அ
திகாரமாகிய ராஜ்ஜியபாரமான பதங்களையும்
பதிநாலுஸம்வல்சரகாலம் உபேக்ஷைசெய்தவனாய்
வனவாசம்போனவராகிலும் இப்படி தமையன்
உபேக்ஷிதமாகசெய்யாநின்ற முதுநிலமென்ற எனது
அதீனத்தில் உட்படாநின்ற கிரம விருத்தமான த-
-மையன் உஜ்ஜீவித்திருக்க தம்பிராஜாவாயிருக்-
-கும் என்றுண்டான அனீதியாகிய ராஜ்ஜியபாரண-
-த்தை நான் அங்கீகரிக்கபோகிறவனல்ல· அங்கீகரி-
த்தவனுமல்ல இதேவேஷமாக தமையனை தர்ச
னஞ்செய்து எனது ஸங்கடங்களையெல்லாம் அ
வரிடத்தில்சொல்லி அவரைராஜ்ஜியத்தில் கொ
-ண்டுவந்து கிரீடதாரணைசெய்யிப்பிக்கவேண்டும்
என்றுண்டான உத்தேசத்தோடுகூடி அவர்போ-
காநின்ற தக்ஷிணமார்க்கமாக வந்தது எனது
அபேக்ஷைகளை உபேக்ஷைசெய்து மாதுருபித்த
-ரோராஜ்ஞியா செய்யுமாயிருந்தால் அவிடத்தில்
சென்று அந்தபதிநாலுஸம்வல்சரகாலமும் சுவா-
மிராஜ்ஜியத்திற்கு வருகிறமட்டும்
(உறைவன்-எ·து·) வனவாசியாககொண்டு
சுவாமியானவரைப்போல் வானபிரஸ்தா-
சரமம் அங்கீகரித்துகொள்வன் என்றுண்டான
திடநிஸ்சயஞ்செய்து நான் வரப்பட்டவன்
கேட்டீரோ பரத்துவாச இருஷியே எனது
ஆகமன பிரயோசனம் அகமாக வர அ
னுக்கிரிஹித்து மேன்மேலும் ஆசீர்வதிக்க

வேண்டும் பரத்துவாச இருஷியே. அவதாரிகை.
இப்படி சொல்லி அந்தவிடத்திலிருந்து விருந்துண்டு
மறுநாள் இருஷியை வணங்கி சித்திரகூடத்தருகில்
செல்லுகிறபோது ராமன் இலக்குவனை அழைத்து வ-
-டதிசையில் அரவம் கேள்க்கிறதை கவனிக்க
சொல்ல உடனே வரப்பட்ட படைகளை கண்டு கோ-
-பித்து கவசமணிந்து சுவாமியினிடத்தில்
இலக்குவன் சொல். கவி.

இருமையுமிழந்தவப்பரதனேந்துதோட்-
பருமையுமன்னவன்படைத்தசேனையின்-
பெருமையும் நின்னொருபின்புவந்தவன்
ஒருமையுங்கண்டினியுவத்தியுள்ளம் நீ. 3)

(இ-ள்-) சரணம் தமையா ராமசந்திரா அதோபா-
ரும் பாரும் உம்மை ராஜ்ஜியப்பிர்ஷ்டனாக்கி கா
ட்டுக்கனுப்பாநின்ற கைகேயிபுத்திரனும் பரிவா
-ரங்களும் படைசமுறைத்தார்களோடுகூடிவந்து
ஜேதவர்ர் செய்யாநின்ற மாதுருபித்தத்ரோஹனி
யயானவனைவாசவிர்தங்களையுங்கெடுத்து
நம்மை நசிப்பிக்க லட்சியமாக்கி வருகிறது
அந்த பரதனென்னும் பாவி.
(இருமையும்-எ-து-) இருமையென்ற இஹத்தை
யும் பரத்தையும் வெறுக்கப்பட்டவனாய் நரகவாதை
க்குமட்டும் கர்மங்களை நடத்தாநின்ற அவன் காரங்க
-ளினுடைய பலங்களையும்-(பருமையும்-எ-து) சைசன்-
-ணியன்னங்களையும் அவைராலுண்டான பின்
பலங்களையும் (பெருமை-) என்னுடைய பாணங்களை
தொடுத்து ஒருதம்பியான-

வன் செய்யாநின்ற சத்துருவதையானதை மற்றொரு
தம்பியானவன் நசிப்பித்துவிட்டது என்றுண்-
-டான யோக்கியதையானதை தம்பியுடையா-
-ன் படைக்குஞ்சான் என்றுண்டான கீர்த்தியை
லட்சுமணனை நாம் ஸம்பாதிக்கப்படாநின்ற

(ஒருமையுங்கண்டினி — எ-து.) உம்மிடத்தி
லுள்ள ஒருமையாகிய யோக்கியதையும் சத்துரு
க்களை நிக்கிரகின்ற ஸேவனத்தையும் அதில்
அடியேன் செய்யும் ஸஹாயத்தையும் தேவரீர்
கண்டு ஸந்தோஷமடைந்திருக்க வேண்டுமையா-

படரெலம்படப்படும்பருமையானையின்
திடரெலாமுருட்டின தேருமீர்த்தன
குடரெலாந்திரைத்தன குருதியாறுகள்
கடரெலாமடுப்பன பலவுங்காண்டியால் (4)

(இ-ள்.) படைதன் கொண்டுவாராநின்ற ஸைன்னிய ச-
-ஞ்சாரங்களில் முன்னிடையாக நில்கிறாநின்ற ஆ-
-னைப்படை குதிரைப்படை காலாள்படை ரதவாஹி
னிகளான அங்கரக்ஷகர்கள் என்றிப்படி படர்ந்து
விகஸிதமான சமுத்திரர்களையெல்லாம் இந்த
பாணங்களினால் கொலைசெய்து பெரியபெரிய கர-
-ங்களோடுகூடின எல்லா சத்துருக்களையும் நசி-
-ப்பித்து அவருடைய

(திடரெலாமுருட்டின — எ-து.) திரண்டு பூரித்து-
கிடக்கிறாநின்ற சவசரீரங்களையெல்லாம் அவரது
ரக்தார்ணவத்தில் ஒழுக்கி அதேரக்தத்தில் அந்த
ரதங்களையும் ஒழுகசெய்து-

(குடரெலாந்திரைத்தன — எ-து.) குடல்மாலைகள்
அஸ்திமாம்ஸம் கபாலாதிகளாகிய எல்லாம்

ரக்த பிரவாஹத்திலொழுக்கி

(கடரெலாம்-எ-து.) வருஷாகம காலத்தில் அருவியாறு முதலானதுகள் ஜலாசயமான ஸமுத்-திரத்தில் சேராநின்ற தன்மையைப்போல் இவ-ரைக்கொன்று மிர்தசரீரிகளாக்கி ரக்தார்ண-வத்தில் ஒழுக்கி கடலில் தள்ளாநின்ற எனது ச-க்தியையும். மற்று பராக்கிரமங்களையும் நேரில் காணவேண்டும் தமையா. இரேதம் சஹிக்கிறதில்-லை ஆயுதபாணிகளாய் லட்சியமாக்கி வராநின்ற யோத்தாக்களின் கரத்திலுண்டான, வாள், வேல், வளை, தடி, முத்தடி, சூலம், சுரிகை, ஈட்டி, தண்டு, முதல் எதேது வித உபகரணங்களுண்டோ அந்த-

கவி.

கருவிங்கைகளும் கவசமார்பமும்
உருவினவுயிரினொடுதிரந்தோய்வில
திரிவனசுடர்க்கணை திசைகிகையாணைகள்
வெருவனச்செய்வன காண்டிவ்ரநீ (5)

(இ-ள்) கருவிகளான யுத்தோபகரணங்களையும் அதைவஹிக்காநின்ற கரங்களையும் லட்சுமண-ஞனநான் தொடுக்காநின்ற பாணங்களேல்க்கா-தபடிக்கு சுரட்சிதமாக போகலாமென்றெண்ணி அவாவர் தரிக்காநின்ற போர்ச்சட்டைகளையும் பேதித்து அவர்களினுடைய மார்புகளையும் பிராணன் போகும்படி- (உருவினவுயிரி-எ-து.) பாணங்கள் உளரு-ருவத்தக்கதாக தொடுத்து அதோடுகூடி பிராணனும் போய்விட்டு பலசவசரீரிகளும் ரக்தத்தில்

முழுகி - (திரிவன அடர்க்கணை - எ-து-) திரிந்து கா-
-கதவென்று சப்தித்து ஆவர்த்தன ரூபமாக திரியாநி-
ன்ற பாணங்கள் ஐராவதம் புண்டரீகம் வாமனம்
குமுதம், புஷ்பதந்தம், சார்வபௌமம் சுப்ரதீபம்
அஞ்சனம் என்று சொல்லாநின்ற அஷ்டதிக்கசங்கள்
எனது பாணங்களாகிண்டு

(வெருவன — எ-து-) வெருவி பயப்பட்டு ஓடி ஒ-
-ளிக்கும்படியானதையும் தேவரீர் இத்தருணத்தில்
காணவேண்டும் அண்ணா. கவி.

ஆளற வலங்கு தோளழிய வாடவர்
வாளற வரிசிலை துணிய மாக்கரி
தாளற த்தலையற புரவி தாரைசெடும்
தேரற வடிக்கணை தொடுப்பக்காண்டியால் (௭)

(இ-ள்-) அந்தபாதகனுடைய ஆள்களாகிய அங்க
ரக்ஷகர்கள் ஒன்றும் அவசேஷிக்காமலும் அலங்கிர்த-
-மாகிய ரதங்கள் நிலபிரமாணம் தகர்ந்தும் புருஷ-
-ர்க்கங்களான எல்லா காலாள்படைகளும் அவருடைய
(வாளற வரிசிலை — எ-து-) வாள்கள் முறிந்தும் வரி-
ந்து கெட்டமைந்த வில்லுகள் நசிந்தும் மதயானை
களினுடைய (தாளற — எ-து-) தாளுகளாகிய
கால்கள் முறிந்தும் தலையற்றும் குதிரைப்படைக-
-ளின் கடிவாளங்கள் அற்றும் துண்டு துண்டாகசெ-
-ய்து மாக்கரிகளெல்லாம் கஜவீரர்களின்
(தாளறத்தலையற — எ-து-) காலற்று தலையற்று
பிரதியடைந்து வீழத்திக்காகசெய்து இந்த
பாதகனால் கூட்டிவரப்பட்ட கஜரததுரகபட
பதாதிகளெல்லாம் சதுரங்கசைன்னியங்களின்

(தோளறவடி — எ-து) தோள்கள் அற்றுபோகவும்
பயாசங்களைக்கப்படைகளின் வைபவங்கள் எல்லாம்
போகக் கூர்முனையோடுகூடின பாணங்கள் பலவித-
மாகத்தொடுப்பான் இப்படி பலவகைகளும் அடியன்
உமக்கு வேண்டி செய்யானென்ற அவஸ்த்தைகளை
காணவேண்டும் தயைமா- கவி.

ஒருமகள் காதலினுலகைநோய்செய்த
பெருமகனேவலில்பாதன்றன்பெறும்
இருநிலமான்கைவிட்டின்றெனேவலால்
அருநரகான்வதுகாண்டியாழியாய் (7)

(இ-ள்) ஒருபெண்ணாகிய கைகேயியென்றவள் பேரில் மட்டும் பிரேமாத்திக்கியமானதை வைத்து வரத்துய-வங்களைக் கொடுத்து தன்னிமித்தம் ராஜ்ஜியத்தில் அராஜகத்துவமானதை வருத்தி உலகவாசிகளுக்கெல்லாம் ஸங்கடத்தை வருத்தானென்ற

(பெருமகனேவலிற் — எ-து) பெருமகனென்னும் பெருந்தன்மை வாய்ந்த பிதாவானவருடைய ஏவலென்னும் ஆஞ்ஞயினால் பரதனென்னுண்-டானவன் ஸம்பாதிக்கானென்ற ராஜாவென்ற ஸ்தானத்தில் அவனுக்கிருக்க ஒருநிமிஷமாவது அவசரம் கொடுக்காமல்

(இருநிலமான்கை — எ-து) இந்த பாதனுக்கு பூமண்டலத்திலோ அதவா எண்ணிடத்தில் போ-ர்களத்தில் வைத்து யுத்தஞ்செய்து வீரியசொ-ர்க்கம் பிராபிக்கானென்ற சொர்க்கத்திலோ ஆள்கையென்னும் ஆதிபத்தியம் கிடைக்காமல் இ-ன்றயத்தினம் லட்சுமணனை என்னுடைய ஸாஸனையினால் அவனை எவிடத்தில் இருத்துவனென்றல்

(அநுநாகான்வது — எ.து.) இருபத்தெண்கோடி நரக
ங்களான நரகத்தில் அநுபவரூபியாக அந்த நரக
வாதனை அநுபவிக்க என துஸ்வசனையில் நான் உன்
ப்படுத்தும் தன்மையை ஆஜ்ஞியானென்னும் சக்க-
ரவர்த்தியாகிய தேவரீர் இத்தருணத்தில் காணவே-
ண்டும் அன்றோ - கவி-

வையகந் துறந்து வந்தடவி வைகுதல்
எய்திய துணைக்கெனை நின்னையின்றவன்
நெருதல் கண்டுவந்தவனை வையினோங்கிய
கைகயன் மகள் விழுந்தாற்றக்காண்டியால் - (8)

(இ.ள்.) சரணம் ராமசந்திரப்ரபோ சுவாமின்
தேவரீருக்கு பட்டாபிஷேகம் நிஸ்சயித்ததான
அபவார்த்தையை கேட்டு உமது மாதாவான கௌ
-சல்லிய மாதாவானவரும் யுவராஜாவான உம-
-க்கு ஆயுர் ஆரோக்கியங்கள் வரவேண்டுமென்-
-று பிரார்த்தனை செய்து ராஜதானியில் அதிவ-
-சிக்கா நின்ற தருணத்தில் கூனியோதையால்பரம்
அந்தகைகேயியானவள் வார்த்தை கேட்டு பிதா-
-வினுடைய ஸத்தியத்தை நிறவேற்றுவதற்க்-
-காக தேவரீரும் வனயாத்திரை செய்ய நிஸ்சயித்து
ராஜதானியும் விட்டு உம்மை பெற்றுவளர்த்தாந-
-ன்ற மாதாவின் சமீபத்தில் சென்று நமஸ்காரஞ்-
-செய்யாநின்ற காலத்தில் மாதாவானவரும் உம்-
-மை எழுப்பாற்றி கேசாதிபாதம் பார்வை செய்து
ராமா ராகவா உனது சிரசில் கிரீடம் தரித்து
காணவில்லையே - உம்முடைய கேசாதிபாதம்
மஞ்சை நீராடியும் அபிஷேகஞ்செய்தும் கா
ணவில்லையே - இந்த தினத்தில் நீஸ்நானவும்

செய்யாமலிருக்கிறயே. உனக்கு பிதாவானவர்
நிச்சயிக்காநின்ற கிரீடாபிஷேகத்துக்கு
முன் நிச்சயமான முகூர்த்தம் வல்ல ஸங்கட
த்திலும் விக்கினமடைந்துவிட்டதோ என்று
தோன்றாநின்ற காலத்தில் தேவரீரும் மாதா-
வை பார்வைசெய்து தாயே தேவரீர் ஸ-
-மாதானப்படவேண்டும்-ஸத்தியஸந்தரான
பிதாவானவர் கைகேயி மாதாவுக்கு வேண்டி
பூர்வ காலாபேக்ஷிதமான வரத்துவயங்களை
கொடுத்து ஒருவரத்தினால் பரதனுக்கு ரா-
-ஜ்ஜியபாரத்தையும் மற்றொருவரத்தினால்
பதினாலு ஸம்வத்ஸரம் அடியேனுக்கு வ-
-னவாஸத்தையும் நிச்சயித்ததினாலே எ-
-த்தனையோ கர்த்தவியமேறின பூபாரத்தை
அடியேன் தியஜித்து
(வையகந்துறந்து — எ-து-) வைகமான
இந்த உத்தரகோசல அயோத்தியென்றுண்டான
நகரவாசத்தையும் வெடிந்து வனவாசம்போக-
-லாமென்று நிச்சயித்தவனாகிலும்-அந்தவனவா-
-சம் சுகமாகவரவேண்டுமென்று உம்மிடத்தில்
ஆசீர்வாதம்பெற்றுபோகலாமென்றெண்ணி
வரப்பட்டவனாகிலும் என்று சொன்னகாலத்தில்
(எய்தியதுணைக்கை — எ-து-) உமதுமாதாவா-
-னவள் ஐயயோ என்னுடைய அருமைமகனுக்கு
இப்பேர்ப்பட்ட ஒருஸங்கடமானது வந்துசே-
-ர்ந்ததோ ராமா நீ எங்களைவிட்டுபோககூ-
-டாது என்னையும் கூட்டிபோக என்றும் உன்-
-னுடைய விரஹவாசம் என்னால் ஸஹிக்கமுடியாது

என்று பலவிதமாக சொல்லி தேவரீர் வனவாசம் போகுமென்ற உம்முடைய திட நிச்சயத்தை கண்டகாலத்தில் அந்தபெற்றமாதாவானவளுக்கு பொறுக்காமல் வாயிலும் வயிற்றிலும் அடியடியென்றடித்து சுபோதம் நசித்தவளாயிரோதனஞ்செய்து

(நைதல்கண்டுவந்தவள் — எ-து.) சங்கடமடையும் அந்தமாதாவினுடைய ஸங்கடாவஸ்தையை தனதுமணிமாளிகையிலிருந்து பார்வை செய்து ஹாசியரூபமாக உமது மாதாவை நிந்தித்தும் பரிஹசித்தும் கைகொட்டி சிரிக்கும் கைகேயியான ஒருவியல்லவோ பரதனை தொடர்ந்து வருகின்றது வாரீர் அண்ணா? ஒரேதும் சஹிக்கிறதில்லை. அந்தகைகேயியின் முன்னில் பரதனாவன் எனது பாணமேற்று புரண்டு வீழ்ந்து மிர்தியடைந்து அதை

(கைகயன்மகள் — எ-து.) கேகைய புத்திரியான கைகேயியானவள் நேத்திர திருஷ்டாந்தமாகக்கண்டு பூர்வகாலத்தில் உமதுமாதாவானவள் வாயிலும் வயிற்றிலும் அடித்து துக்கித்த தன்மையைப்போல் வாயிலும் வயிற்றிலும் அடியடியென்றடித்து பூமியில் போதங்கெட்டு வீழும் அவஸ்தையையும் தேவரீர் இந்த ஸமயம் காணவேண்டும் அண்ணா. கவி.

அரஞ்சுட வழனிமிரவங்கள் வெலிநெய்
விரைஞ்சொரு நொடியிலிவ்வணிகவேலையே-
உரஞ்சுடுவடிக்கணையொன்றில் வென்றுமுப்
புரஞ்சுடுமொருவனிற்பொலிவென் யாணின்றே (௭)

(இ-ள்.) ராமசந்திரபிரபோ சுவாமின். பிரதிகாரத்-
-துக்கு இந்த ஸமயம் அடியேன் இச்சைகெட்டி சி-
-லாபாண பாணியாய் யுத்தகோலம் சமைந்து உம-
-து சம்மதியாக போர்செய்வேன்.

(அரஞ்சுட — எ-து.) அரமாகிய ஆயுதத்தினல் சு-
-டைந்து கொள்ளிபோல் மின்னும் வேலாயுத பா-
-ணியான ஹேசுவாமின்

(விரைஞ்செரு — எ-து.) திமரென்னும் ஒரே
யொரு நிமிஷத்துக்குள்ளாக நம்மிடத்தில்
பயங்கரமாக சப்தித்து வராநின்ற சைன்னிய-
-ஸமூஹங்களினுடைய

(உரஞ்சுடுவடிக்கணை — எ-து.) உரமாகிய ஸர்வப-
-லங்களான வைபவங்களையும் நசிப்பித்து வடி-
-க்கணையென்னும் கூர்முனையோடு கூடின பா-
-ணத்தினல் இவரை விஜயித்து

(முப்புரஞ்சுடு — எ-து.) ஆதிகாலத்தில் முப்புரங்-
-களென்று பிரசித்தியார்ச்சிக்காருன்றதும்
உலகநிர்ம்மிதமான மூன்று கோட்டைகளையும் அ-
-தினுடைய அதிபதிகளான தாருகாக்ஷன் கமலாக்ஷ்
வித்துன்மாலியென்னும் மூன்றசுரர்களையும் அ-
-றுபத்தாறுகோடி அசுரவர்க்கங்களையும் கூட்ட
-க்கொலையாக ஸம்ஹரித்து தீயில்ப்பட்ட சலபங்க-
-ளைப்போல தஹிப்பிச்சு தேவோபத்திரவம் சஜ்-
-ஜனோபத்திரவம் தீர்த்து அருளாநின்ற திரிபு-
-ராந்தகனென்னும் ஸம்ஹாரருத்திரனைப்போல்
இந்தபாதராதிகளுக்கு நான் ஒரு ஸம்ஹாரருத்திர-
-னக சமைந்து உம்மை ரக்ஷப்படுத்துவதைகாணவேண்-

-டுமே அண்ணா- கவி-

இலக்குவனுலகமோரேழுமேழும்நீ
கலக்குவனென்பது கருதினலது
விலக்குவதரிதது விளம்பல் வேண்டுமோ
புலக்குரித்தொரு பொருள் புகலக்கேட்டியால். (10)

(இ-ள்.) வாராய் தம்பி வாராய் லட்சுமணா உனதுயுத்த கோலத்தை எனது புரோபாகத்தில் நீ பிரதர்சனமாக செய்து விஜயத்துக்குவேண்டி நமஸ்காரஞ்செய்து போர்வீரனைபோல் நிற்க்கின்ற உனது புருஷ லக்ஷண பூர்ண்ணமான சரீராகிர்த்தியையும் வார்த்தைகளையும் முகத்தில் ஸ்புரிக்கின்ற மனோபாவணைகளையும் பார்க்குங்காலத்தில் ருத்திரமூர்த்தியானவனைபோல் இவனை ஸம்ஹரிக்க இவனுக்கு ஸம்ஹாரருத்திரனாக வருவேனென்று நீ சொல்லுமாயிருந்தால் இலக்குவனென்னும் எனது தம்பியான லட்சுமணனே நீ இந்த பாதாதிகளை மட்டுமல்ல- இந்த உலகத்திலுள்ள பிரபஞ்சங்களான ஈரேழு பதினாலு லோகங்களையும் நீ

(கலக்குவனென்பது—எ-து.) நீ கலக்கிமதனஞ்செய்து எனது சத்துருவாதிகளான சர்வகளையும் நசிப்பித்து மித்திரங்களை ரக்ஷைசெய்து விஜயமென்றுண்டான வெற்றிக்கொடியை அபிமானகரமாக அமிர்தைபோக ரகுதமாக்கும் அதற்க்கு என்னுடைய ஸம்மதமே போதும் என்று மனதில் நீ உத்தேசிக்குமாயிருந்தால் அது

(விலக்குவதரிதது—எ-து.) அந்தவிஷயத்தை ஒருவராலும் தடுக்கபிரயாசமேறின ஒன்றிலும்

விளம்பவேண்டுமோ அதுந்தான் சொல்லவேண்டுமோ
(புலக்குறித்தொரு—எ-து) என்றிருந்தாலும் நீ
ஏதோவிதமாக சிந்தித்து சொல்லாநின்ற வார்த்-
-தைக்கு ஸமாதானமாக என்னுடைய அறிவாகிய
மனசினில் ஆலோசனைசெய்து ஒருபொருளைவி-
ஷயத்தை பிரதானமாக உன்னிடத்தில் சொல்-
-லுவேன். அதை ஸஸ்ஸர்த்தம் ஸமாதானபூர்வ
மாக கேட்கவேண்டும் தம்பி ஏதென்றால்

கவி.

நங்குலதுதித்தவர் நவையுள்நீங்கினர்
எங்குலப்புறவர்களெண்ணில் யாவரே
தங்குலத்தொருவருந்தருமம் நீங்கினர்
பொங்குலத்திரளொடும்பொருததோணியும் (11)

(இ-ள்.) நமதுகுலமாகிய கோத்திரம் ஆதியகோத்திர
மென்னும் களங்கமில்லாமலிருக்கிற ராஜவம்சம்
அந்தராஜவம்சத்தில் பூஜாதராய் ராஜ்ஜிய
பரணம் நடத்தப்பட்ட பூர்விகர்கள் இக்ஷு-
-வாகுமுதல் நமது பிதாவு பரியந்தமுண்டான
சர்வர்களும் யாதொரு குற்றமில்லாமல் அபரா
தங்கள் யாதொன்றுஞ்செய்யாமல் ஸன்மார்க்கி-
-களாய் யதாபராத தண்டர்களாய் யதாகால
பிரபோதிகளாய் ஆஸமுத்திர க்ஷிதீசுவராய்
ஆபலோதைய கர்மாக்களாய் லோகாவ-
-ஸானம் வரைக்கும் தாந்தாங்களினுடை-
-ய கீர்த்தி நிலைநிறுத்த பிரயத்திக்காநின்-
றபேர்கள்- கர்மதிரயங்களிலிருந்து பாபகர்ம-
-ங்களை தியஜிக்காநின்றபேர்கள் அவரில் ஒ
ருபேர்களும் குற்றமுள்ளபேர்களல்ல-

(எங்குலப்புருவர்கள்— எ.து.) சந்திரவம்சமென்-
-ற வம்சத்தில் சிலசில அபராதங்களை செய்யாநின்ற
பேர்களை காரணமாம் அப்ரசித்தியென்னும் துஷ்கீ-
-ர்த்தியை ஸம்பாதிக்காநின்ற பேர்களை காரணமாம்
அதுகளை சந்திரகளங்கம்போல் ஸாமான்னியமாக
பரிகணிச்சு குற்றமல்லாதபடிக்கு சரித்திரம் சொல்-
-லிவந்தாலும் நமது வம்சத்துக்கு குற்றம் வரகூடா-
-தென்று மஹால்மாக்களான வைவஸ்வதமனு முத-
-ல் நமது பிதாவை பரியந்தம் நிர்ப்பந்த பூர்வமாக
நீதியையும் புலர்த்தாநின்ற பேர்களாகிலும்

(தங்குலத்தொருவரும்— எ.து.) அந்த ராஜாக்கர்-
-களுடைய வம்சத்தில் சனாதன தர்மமாகிய ஸத்-
-தியம் புண்ணியம் காருண்ணியம் தவசு என்று-
-ண்டான தர்மத்தை ஒருபேர்களும் உபேக்ஷை
செய்தவர்களல்ல. "அஹிம்ஸாபரமோதர்மம்"
என்றுண்டான தர்மத்தை சுவீகரித்து "தர்ம-
-மேவ ஜயதே" என்றுண்டான ஆப்தவசனத்தை
சுவீகரித்த பேர்களல்லவோ லட்சுமணா

(பொரங்குலத்திரனோரும்— எ.து.) பொரங்கிஅ-
-வுன்னித்தியமேறின சிலாஸ்தம்பங்களிலும் பொ-
-ருதும் புஜபலபராக்கிரமசாலியான ஹைஸோதரா
இவரிடத்தில் நீயுத்தகோலமெடுத்த தன்மை அதர்-
-ம்மமல்லவோ தம்பி. இப்படி மனதினாலும் சரீரத்-
-தினாலும் ஒருபாபகர்ம்மஞ்செய்ய ஒருங்காநின்ற
காரியம் உனக்கு பூஷணந்தானோ லட்சுமணா
எனது சம்மதமுண்டென்றுவந்தால் இவரை
யெல்லாம் நாமாவசேஷம் நசிப்பிப்பேன்

என்று உன்வாயினால் வீரவாதமாக சொன்னதும் உன்னைப்போலுண்டான பேர்களுக்கு பூஷ-
-ணமல்லவே தம்பி. கவி.

பெருமகனென் வயிற் பிறந்த காதலின்
வருமென நினைகையு மன்னையென்வயின்-
திருமென நினைகையுந் தவிரத்தானையால்
பொருமென நினைகையும் புலமைப்பாலதோ. (12)

(இ-ள்.) பெருந்தன்மை வாய்ந்த என் தம்பியான பரதனைவென் பௌராவலிகளான ரா-
-ஜ்ஜியவாசிகளோடும் நமது பந்துமித்திராதிக-
-ளையும் சைன்னிய சமூகங்களையும் சேர்த்து இ-
-ந்த சித்திரகூட பர்வதத்தின் ஸானுபிரதேச-
-மாக நமது ஆசிரம பிரதேசத்தைதேடி வரும் வரவை உனைபோறை ஸமர்த்தனா நீ க-
-ருதின தன்மையைபோலல்லாமல் மற்றொரு பிரகாரமாகிலும். பெருமைகளில் எல்லாம் பூர்த்தியடையாநின்ற மஹால்மாக்களில் வை-
-த்தொருவனாகிய என் தம்பியானபரதன் ராச-
-ரதிராமனை என்னிடத்திலுண்டான அளவற்ற பக்தி சிரத்தை பஃமான ஸ்னேஹ வினயா-
-திகளோடுகூடி

(வருமெனநினைகையும் — எ-து.) என்னைகா-
-ணுகிறதற்க்கும் என்னிடத்தில் ஸம்பாஷணங்-
-களை செய்வதற்க்காகவும் பூர்வகால சம்பவங்-
-களில் தான் நிரபராதியாகியுமென்று சொல்லி என்னை ராஜ்ஜியத்திற்க்கு கொண்டுசென்று மன்னனபூமண்டலத்தை பரிக்கும் ராஜாங்கத்தை

என்னிடத்தில் பாரமேற்பிக்கத்தக்கதாகவும்

(தருமனநினைகையும்—எ·து·) பிறகு உன்னைப்போல் நிரந்தரஸேவனகிர்த்தியங்களைசெய்து தருமமென்ற ஆலோசனையினுலாகிலும்மென்றும் உணஹறிப்பது அல்லாமல் மற்றொருவசமாக ஒருவிபரீத புத்தியோடுகூடி நிதாதனை செய்ததும் சரியல்ல அந்தபாதாதிகள் நம்மிடத்தில்

(பொருமைனநினைகையும்—எ·து·) பொருதியத்தமானதைசெய்யும் வனவாசமென்றுண்டான கிர்த்தியத்தைமுடக்கும் என்ற ஒருதாதனை உனக்கு வந்தது உன்னுடைய புலமைமையென்ற அறிவிற்க்கு தகுந்ததல்ல· உன் அந்நியானத்தினுல் வந்த விவேகஞுன்னியதையல்லவோதம்பி இப்பேர்ப்பட்டதான அந்நியான விபரீத சந்தேஹங்களான விஷயங்களை நியசித்து மனஸ்ஸாதிய புத்தியை சாரந்தவிசாரம் ஸாதுஸங்கம் ஸத்தோஷமென்னும் நியானதிர்ஷ்டியில் மனசை செலுத்தலட்சுமணு

கவி.

சேணுயர் தருமத்தின்றேவை ச்செம்மையின்
ஆணியை யன்னது நினைக்கலாகுமே
பூணியன்மொய்பினய் போந்ததீண்டனைக்
காணியநியிது பின்னும் காண்டியால். (13)

(இ·ள்·) சேணை அந்தரிக்ஷமென்னும் ஆகாசத்தைபோல் பரிதிக்கத்தமாய் சோபிக்கான்ற ஒன்றே தர்மம்· அந்த தர்மத்தை காத்தருளும் தர்மமதேவதைபோலுண்டான ஒருவனே பரதன் செம்மை-

யாகிய ஸண்மார்க்கங்களுக்கெல்லாம்
(ஆணியையன்னது - எ-து-) அச்சுவாணி
யைபோல் தர்மம் சலிக்காமல் ஊன்றுகோல்போ-
-லநில்க்கிறானென்ற ஒருவனாகிய அந்த பரதனை
எனது சத்துருவாக கொண்டு பாவனை செய்யலா-
-மோ தம்பி-
(பூணியன்மெய்பினை - எ.து.) பூணென்னும் ஆப-
-ரணங்களான கடககங்கணபூஷிதனை புஜபலப-
-ராக்கிரமசாலியான வேறு ஸோதரா- அந்த பரத-
-னைவன் ராஜ்ஜியத்தை உபேக்ஷை செய்து எத்-
-தினையோ துர்க்கடங்களான மார்க்கங்களையும்
தரணஞ்செய்து இவிடத்துக்காக பிரயாணஞ்செ-
-ய்து என்ன உத்தேசத்தினலாகிலுமென்றுபாரு
(காணியநீயிது - எ.து.) என்னை காணுவதற்-
-க்காக வரப்பட்டதொரு உத்தேசார்த்தமாகி-
-லுமென்று நீ ஒரு தரவும் கூடி கண்டு யதார்த்த-
-த்தை தெரிந்து வருவாய் ஸோதரா. அப்போதல்-
-லவா அவ ஆகமனத்தின் யாதார்த்தியம் உனக்-
-கு வெளிப்படுகிறதுவாராய் தம்பி.

அவதாரிகை.

இப்படி சொல்லி நிற்கிறபோது பரதனும் தம்-
-பியும் புழுதியிலே புரண்டு தொழுதனைகயும் அ-
-ழுதகண்ணுமாக வரப்பட்ட சமையத்தில் லட்சு-
மணனையழைத்து சொல். கவி.

கார்பொருமுகிற்கினிகல்விகாட்டிய
ஆர்ப்புறுவரிசிலையினையனைவயநீ
தேர்ப்பெருந்தானையால் பரதன் சீறிய
போர்ப்பெருங்கோலத்தைப்பொருந்தநோக்கென (14)

காரமேகவர்ஷம்போல் அளவற்ற பாணங்களை சொரியப்பட்ட வில்லைப் பிடித்து புஜபலபராக்-கிரமங்களை எனது புரோபாகத்தில் நின்று நீ செய்யும் யுத்தத்தின் வகைபேதங்களான ஆலீடம் பிரத்தியாலீடம் சமபதம் வைசாகம் என்றுண்டான யுத்தமுறைகளை செய்து பர-துணையும் பரிவாரங்களையும் இன்னின்ன வித-மாக செய்யும் என்று சொல்லி யுத்தபராக்கிரம-த்தின் வைபவத்தை கல்வியான சாஸ்த்ர ரூ-பமாக எனது புரோபாகத்தில் காண்பித்து அபிநயிக்கிறான்

(ஆர்ப்புறு வரிசிலை – எ.து.) ஆர்த்து சப்திக்-கிறதன்ற வரிந்துகட்டமைந்த வில்லையும் வீர-தண்டைகளையும் அணிந்து முன்கால் பின்கால் இடம் வலமாக அவடுவைத்து நிற்கின்ற ஸோ-தராதம்பி

(தேர்ப்பெருந்தானையால் – எ.து.) ரதாதி சதுரங்-கங்களான அறுபதுகோடி அக்ஷௌஹிணி சைன்னி-யங்களோடுகூடி நம்மை லட்சியமாக்கி பரதன் கோபிஷ்டனாயி யுத்தகோலமெடுத்து வரப்பட்ட-வனே கச்சையும் தூணியும் கவசமும் ஆயுத-மும் இல்லாமல் சாதாரணனாக ஸஞ்சரிக்கும் என் பக்தனைப்போல் பாதசாரேண நடந்து வரப்பட்டவனே என்றும் அவனுடைய-

(போர்ப்பெருங்கோலத்தை – எ.து.) யுத்தஸ-ன்னாஹத்தோடுகூடின போர்க்கோலத்தோடு வரப்பட்டவனேயென்றும் திர்ஷ்டியில்

படாநின்ற ஏதொரு பதார்த்தங்களினுடையும்
லச்சிய லட்சணங்களை தெரிந்து நிர்ணய-
-ஞ்சொல்லும் ஸமர்த்தனை லக்ஷஞன்னிதனை
ளை லட்சுமணா நீ அவனுடைய ஆகமனத்தை
ஒன்றுங்கூடி உற்றுபார்த்து யதார்த்தம் சொல்-
வாய் தம்பி. அவதாரிகை

இப்படி இலக்குவனுக்கு பரதனைக்காட்டி சொ-
ல்லுகிறபோது இலக்குவன் வில்லை நிலத்திலிட்டு
விழுந்தான் அப்போது பரதன்வந்துவணங்கி
துக்கித்துசொல். கவி.

அறந்தனைநினைந்திலை யருளைநீத்தனை
துறந்தனைமுறைமையை சுருதிநீதியை
மறந்தனைமலரடிவணங்கிலாதயான்
இறந்தனன் பிழைத்தனனென்சொல்லுவேன்- (15)

(இ-ள்.) சரணமே சரணம் தமையா. அபயம் அபயம்
அடியேனை ஆள்கொண்டு ரக்ஷை செய்யவேண்டும்.
சுவாமி உம்மை பிரதக்ஷிணபூர்வம் நமஸ்காரஞ்செ-
-ய்து நிற்கிறாநின்ற அடியேனை ஆஸ்லேஷஞ்செய்-
-து தம்பி உனக்குக்ஷேமந்தானோ என்று கேள்க்-
-காநின்றவரை அண்ணா ஐயயோ தேவரீர் என்ன
செய்துவிட்டீர்

(அறந்தனை நினைந்திலை-எ-து.) அறமான த-
-ர்மத்தை தேவரீர் சற்றேனும் ஸ்மரணை செய்-
-தவரல்லவே அண்ணா அருளான உம்மை ஆசிர-
-யிக்கிறாநின்ற பக்தகோடிகளிடத்திலுண்டான
தயாதாக்ஷிண்ணிய பூர்வமான அனுக்கிரகவி-
சேஷத்தையும் தியசித்துவிட்டீரே தமையா.

(துறந்தினைமுறைமையை—எ·து·) மேல்கீழ் என்றுண்-
-டான விதிநியஸ்தத்தையாகிய முறைகளான நிய-
-மங்களையும் தேவரீர் உபேக்ஷித்து விட்டீரே அண்-
-ணா சுர்திஸ்மறுதிரூபமாக கிரஹிக்காநின்ற நீ-
-திநியமங்களையும் தேவரீர் வெடிந்து விட்டீ-
-ரே அண்ணா

(மறந்தினைமலரடி—எ·து·) இப்படியெல்லாம்
மறந்தவனைப்போல தேவரீர் விதூரமான இந்த
வனத்தில் வந்து பதிநாலு ஸம்வல்சரமாக வன-
-தீக்ஷைசெய்ய அடியேன் ஒருவன் ஹேதுகமாக
மாதாவானவள் பிதாவினிடத்திலிருந்து வர-
-த்துயவரங்களை வாங்கினவள் என்று கேட்ட-
-போது பரதனை அடியேன் மிருதி அடைந்தது.
ஏதோவிதமாக ஒருஜீவசவம்போல இந்த வி-
-தூரமான வனத்தில் வந்து உம்முடைய பாத-
-பல்மங்களில் நமஸ்க்காரஞ்செய்து இந்த
ஸமயம் எடா உனக்கு க்ஷேமம் தானே என்று தே-
-வரீர் கேட்டபோது ஸல்குணஸம்பன்னனை
உம்முடையவாய்மொழிஹேதுகமாக

(இறந்தனன்பிழைத்தன—எ·து·) ஒருதரம் மி-
-ர்தியடையாநின்ற நான் மறுபடியும் புனர்ஜன்-
-மம் லபித்த ஒருவனைப்போல் பிராணனோடுகூடி
உஜ்ஜீவிக்கிறது கேட்டீரே அண்ணா

தம்பீ பரதா இந்தவிதமாக பூமியில் புரண்டு
வீழ்ந்து துக்கிக்கலாகாது தகப்பனுக்கு சுகந்-
தானே பரதா. சாணம் தனையா பிதாவின்

க்ஷேமத்தையடியேன் என்னவென்று சொல்ல
வேண்டியது.                இவி·

அரியமெய்ப்பொருள்தெரிந்தையவெய்யநின்
பிரிவெனும்பிணியினாலென்னைப்பெற்றவக்
கரியவள்வரமெனுங்காலனானக்
குரியமெய்த்துறவிப்போயும்பரானினர்          (16)

(இ·ள்-) பிதுர் துல்லியனான ஐயனென்னும்பெரு
மைபொருந்தியவரே அண்ணா பிராயசமேறின
எதொருவிஷயங்களினுடையும் யாதார்த்திய
மானதை தின்னந்தனியாக தெரியத்தகுந்த-
-திரன உனைப்போலே ஸமர்த்தனானவரே அ-
-ண்ணா ராமசந்திரா- பயங்கரமான மாதுவ-
-சனம் லேதுகமாக பிதாவுரைத்துயவங்க-
-ளைகொடுத்த தல்ஸமயம் முதல் சீமந்தகுமா-
-ரனை உம்முடைய தீர்க்ககாலமென்ற
பதிநாலு ஸம்வல்சரமென்ற காலவதியான
(பிரிவெனும் பிணியினால் — எ·து·)
பிதுபுத்திரபந்தமென்ற ஸரைகரிப்பான
வாழ்க்கையிலிருந்து பிரிவென்னும் வேர்-
-பாடான உம்முடைய வியோகசன்னியமெ-
-ன்ற பிணியென்னும் வியாதிரூபமாகிய ஸ-
-ங்கடத்தினால் பிதாவானவர் தீராவியாதிஸ்த-
-னாயி என்னைபெற்று வளர்மை செய்யாதென்ற
(கரியவள்வரமெனும் — எ·து·)
கரியவளென்னும் கடோரமனஸ்கையாய்
மஹாபாபிகளில் அக்கிரகண்ணியயான
கைகேயிமாதாவானவளுடைய வரமென்று
சொல்லப்பட்ட வாசகம் அதுவே தனக்கொரு

மிர்த்தியுதேவதையான காலனைப்போல் பா-
-தித்து தன்னுடைய சரீரத்தை விட்டு பிராணை-
(உறியமெய் நிறுவி—எ-து) தனக்கு யோனிப்-
-பாகிய சரீரம் அனர்த்தஜட துக்கமாகிய இந்த
பொய்யுடம்பல்லவோ சுவதும்- ஸச்சிதானந்த-
-மாகிய புகழுடம்பாகிலும் மெய்யென்று சொல்லி
தான் ஸத்தியத்தை நிறைவேற்றி உம்பரென்னும்
திவ்வியமாய் சொர்க்கம் பிராபித்தது கே-
-ட்டீரோ அண்ணா. கவி.

ஐயோ ஐயோ பிதாவேநீர்-
நந்தாவிளக்கனைய நாயகனே நானிலத்தோர்
தந்தாய் தனியறத்தின் றயே தயாநிலையே.
எந்தாயிகல் வேந்தரேறே யிறந்தனையே.
அந்தோ இனி வாய்மைக் காருளரே மற்றின்றே (17)

(இ-ள்) ஐயோ ஐயோ பிதாவே அடியேன் கெட்டேன் கெட்டேனே பிதாவே. நந்தா கெடாத விளக்கென்னும் பத்திர தீபம் போல் பிரகாசித்து பிரஜைகளான ஸர்வர்களுக்கும் அஞ்ஞானத்துவமென்ற பிரகாசவஸ்தையானது வராமல் அல்லும் பகலும் தெளிந்து சுவலிக்கிறதென்ற கெடாவிளக்கைபோல் சோபிக்கிறதென்ற ஒருவரல்லவோ பிதாவே. நானிலமென்னும் அயோத்தியாநகரத்துக்கும் இந்த கர்மபூமியான பாரதகண்டத்திற்கும் அந்தேவாசிகளாகிய பிரஜைகளுக்கும்

(தந்தாய் தனியறத்தின்—எ-து) தந்தையென்னும் ஒரு ரக்ஷாகர்த்தாவாகிய பிதாவைப்போல்

ரக்ஷை, சிக்ஷை, பிரேணம், சிக்ஷணம், என்றுண்டான
காரியங்களை நிர்வஹித்து உலகவாசிகளு-
-க்கெல்லாம் ரக்ஷாகர்த்தத்துவமுடைய பி-
-தாவைபோல் விளங்குப்ய ஒருவரும் தேவரீர-
ல்லவோ பிதாவே. தனியென்னும் சாம்பியதை-
யில்லாமல் சோபிக்காநின்ற தர்மத்தை போற்றி
வளர்த்தும் மாதாவைப்போல் விளங்கும் பொ-
ருளாயி முப்பத்திரண்டு வகை தர்மஸ்தாபனங்-
-களையும் ஸம்ரக்ஷணஞ்செய்யாநின்ற ஒருபொருளும்
தேவரீரல்லவோ பிதாவே. தயையான ஜீவகாரு-
-ண்ணியத்துக்கு இருப்பிடமாக சோபிக்கப்பட்ட
(எந்தாயிகல்வேந்தே — எ.து.) யுத்தபராக்ர-
-மசாலிகளான ராஜாக்களுக்கெல்லாம்
சக்கிரவர்த்தியாய் சிங்கம்போல் பராக்ரம
சாலியான ஒருவரும் தேவரீல்லவோ பிதாவே.
இகல்வேந்தர் மண்ணாசை பொண்ணாசை பெண்-
-ணாசை ஹேதுகமாக பரஸ்பரம் யுத்தஞ்செ-
-ய்யாநின்ற ராஜாக்கர்களுக்கு அண்ணியோண்-
-ணியபந்தமில்லாமலிருக்கிற வண்ணியமிருகங்-
-கள் பரஸ்பரமாக சண்டைசெய்யாநின்ற கா-
லத்தில் சிங்ககர்ச்சனங்கேட்டால் சண்டை
செய்யாமல் ஓடி ஒளிக்குந்தன்மை போல்
பராக்கிரமிகளென்று பாவனைசெய்து பதி
க்காநின்ற ராஜாக்கர்கள் யுத்தங்களைவெ-
-டிந்து உம்முடைய ஆண்ணியாசக்தியான சி-
ங்கநாதத்தைகேட்டு அதாதுராஜதானியில்
சென்றுசேர்ந்துநிவஸிக்க ஆண்ணியாசக்கரத்தை

நடத்தாநின்ற ஒருவரல்லவோ தேவரீர் பிதாவே.
தேவரீரும் இறந்து விட்டீரோ

(அந்தோ இனிவாய்மை—எ.து.) ஐயயோ தேவரீர் மரணமடைந்தால் பாரியில் இந்த உலகத்தில் வாய்மையான ஸத்தியத்திற்கு ஆதாரமாயி ஸத்தியத்தை நிலை நிறுத்துவதற்க்கு ஆரிருக்கிறார்கள் பிதாவே. உலகத்தில் அசத்தியவாதிகளை எல்லாபேர்களையும் உன்மூல நாசஞ்செய்து தேவரீருடைய வேலாயுதத்தை உறையான தூணீரத்தில் சூட்சிக்காநின்ற ஒருவரல்லவோ தேவரீர் அந்த ஸத்தியதர்மங்களை நிலை நிறுத்த யாரிருக்கிறார்கள் பிதாவே. கவி.

மண்ணுயிர்க்கு நல்லுரிமை மண்பாரம் நான்சுமக்க
பொன்னுயிர்க்குந்தாரோய் பொறையுயிர்த்த வா-
றிதுவோ - உண்ணுயிர்க்கு கூற்றுயுலகாளவுற்றேனே
மின்னுயிர்க்குந் தீவாய் வெயிலுயிர்க்கும் வெள்-
வேலோய்- (18)

(இ-ள்.) பூலோகத்திலுள்ள ஜீவகோடிகளை பேர்களுக்கு பாதுகாவலாயி பாரத்தை உரிமையென்னும் எத்தனையோ பூர்ணமாக செய்யும் பொருட்டு நான் பூபாரந்தாங்க

(பொன்னுயிர்க்குந்தாரோய் —எ.து.) பொன்மயமாமான பிரகாசம் ஜொலிக்கும் பொன்னரிமாலையான மந்தாரமாலையை தரிக்காநின்றவரே பிதாவே. என்னைபோலுண்டான ஒரு புத்திரனை பிறப்பிக்கும் பொறுப்பு இந்தவிதமாக கொண்டுவந்து சேர்ந்ததோ பிதாவே ஐயோ ஐயோ யானென்வென்

(உண்ணுயிர்க்கு கூற்றுயுலகாள — எ.து.)

உம்முடைய உயிரான பிராணனுக்கு ஒருகாவலாக
கொண்டோ அடியேன் வந்தது வரீர் பிதாவே-
பிதாவைக்கொன்றவனாய் பூபதிபாலனாகச்செ-
-ய்யபிறந்தவனோநான் வரீர் பிதாவே-

(மின்னுயிர்க்குந்தீவாய் — எ-து.) மின்ன-
-லைப்போல் வித்துல் பிரகாசமாயும் தீயைபோ-
-லயும் சூரியரஸ்மிபோலவும் தினங்காநின்ற
வேலாயுதபாணியான வேறு பிதாவே. கல்லாலடித்
தாலும் சாகாமலிருக்கிற தேவரீர் புத்திரனை அ-
-டியேனுடைய பிரிவாற்றாமையினால் இறந்து
விட்டானே பிதாவே. தனி.

வேண்டுதிறத்தாரும் வேண்டாவரசாட்சி
பூண்டிவ்வுலகுக்கிடர்கொடுத்த புல்லனேன்
மாண்டுமுடிவதல்லால் மாயா உடம்பிதுகொண்
டாண்டுவருவதினியார்முகத்தே நோக்கவே (19)

(இ-ள்.) தனக்குதான் ஸர்வஸங்கதனக
கொண்டு வேண்டிய சக்தியார்ச்சிக்கிறா-
-ன்றபேர்களுக்கும் தன்னியர்களானபேர்களு-
-க்கும் நிக்ஷேதால்மகமான ராஜாங்கத்தை

(பூண்டிவ்வுலகு — எ-து.) பூண்டு நான் உம-
-க்கு வேண்டி ஒற்றைகுத்தினால் இந்த உலக
வாசிகளுக்கு ஸங்கடம் வருத்தும் என்னால்
என்ன பிரயோஜனம்

(மாண்டுமுடிவதல்லால் — எ-து.) பிரஜைகளு-
-க்கு ஸங்கடம் வருவதற்க்காக ஜனிக்கிறா-
-ன்ற நானொருவன் மரணமடைந்துபோவதே
யல்லாமல் இனி ஒருஜன்மம் வராதபடிக்குவா

புண்ணியபாப மிஸ்ரங்களாகிய கர்ம்மத்தி-
-ரயங்களுக்கு விதேயமாகிய சரீரத்தை வஹி-
-த்து பிராணபரணஞ்செய்து

(ஆண்டுவருவதினி — எ-து-) இந்தவனதீக்
ஷையையும் அவதிகாலம் வரைக்கும் நிற-
-வேற்றி நகரத்தில் வந்து எனது ஸர்வஸ்வமா-
-கிய உம்மிடத்தில் கர்த்தவ்விய நிர்வ்வ-
-ணஞ்செய்தேனென்று சொல்வதற்க்கு
உம்மை தர்சனஞ்செய்தல்லாமல் யாரொ-
-வருடைய முகத்தை காணவருவேன்பிதா-
-வே. இந்தமாயா உடம்பை விட்டுபோவதே
யல்லாமல் மற்றொன்றும் தேவையில்லையேபிதாவே

கவி.

தேனடைந்தசோலைத்திருநாடுதனைவிட்டு
கானடைந்தேனென்னத்தறியாதுகாவலநீ
வானடைந்தாயின்னமிருந்தேனென்வாழ்வக-
ந்தே. ஊனடைந்ததெவ்வுயிரடைந்தவெ-
ண்வேலோய். (௨௦)

(இ-ள்-) தேனைமகரந்தங்களை புஜிக்கும் வண்டு-
-கள் சுருதிமதுரங்களான சுவரங்களை பாடா-
-நின்ற உத்தியானங்களுடனும் பூஞ்சோலைகளு-
-டனும் சோபிக்கப்பட்ட திருநாடென்னும் அ-
-ஷ்டலட்சுமி நிவாசயோக்கியமாகிய சுகஸ-
-மிர்த்தமான நாட்டையும் விட்டு ஸ்ரீமந்த குமா-
-ரனை அடியேனொருவன்

(கானடைந்தேனென்ன — எ-து-) கானகமெ-
-ன்னும் காட்டுக்கு சென்று சேர்ந்தேனென்று

கேட்டநிமிஷம் அதை ஸஹிக்க ஒண்ணமல் பூ-
-பாலனுகிய தேவரீர் எல்லாவற்றிற்கும் உபரியான
புத்திர ஸாமீப்பியமென்றும் அதைவிட்டால் ம-
-ரணமே சரணமென்றும் சொல்லி

(வாணடைந்தாயின்னம் — எ·து·) ஊனை
சரீரத்தில் இருந்து பிராணனை தியசிச்சு திவ்-
-விய உலகம் பிராபித்துவிட்டீர். இதை கே-
-ட்டும் மரணமடையாமல் பூமியிலுண்டான
ஒருவன் ஸத்தியம் திக்ஷிக்காமல் மிருதி அடை-
-ந்தால் உமது பாதேதால்மாவுக்கு சாந்திகிடை-
-யாதென்றெண்ணி பிராண பாணஞ்செய்ய தொ-
-ல்பரியமடைந்தேன் பிதாவே

(ஊனடைந்த —— எ·து·) ஊனென்னும்
மாம்சம் தங்கிய சரீரத்தையுடைய தெவ்வராகி
ய சத்துருக்களினுடைய உயிரான பிராணனை
பருக அவருடைய மர்மஸ்தானங்களில்
உமது வேலாயுதத்தை அனுப்பி சத்துருஸம்
ஹாரஞ்செய்ய பிரகாசம்பொருந்திய வே
லாயுதபாணியானவரே பிதாவே. ஐயனே
அடியேன் சத்தியத்தை திக்ஷித்து அவதியான
தை நிறைவேற்றி உமது ஸமீபம் வருவேன் பிதாவே

கவி.

துறத்தலு நல்லறத்துறையுமல்லது
புறத்தொரு துணையில்லை பொருந்துமன்
னுயிர்- இறத்தலும் பிறத்தலு மியற்கையெ
ன்பதை- மறத்தியோ மறைகளின் வரம்
பு கண்டநீ. (21)

(இ-ள்-) வரதாய் ராம வரதாய் ராகவா.

ஓஹோ நீ ஒருவனும் பாமரபுருஷனை ஒருவனை
-ப்போல பிதுர்மரணத்தைக் கேட்டு வாயிலும் வயி-
ற்றிலும் அடித்து துக்கிக்கிறயோ ராம.
சுகதுக்கங்களுக்கிருப்பிடமாகிய புண்ணியபாப
மிஸ்ரங்களான கர்மத்திரயங்களுக்கு விதேயப்-
-படாநின்ற அனுர்த ஜட துக்கமான சரீரம் மாது-
-ரு பிதுர் சுக்ல சுரோணித ஸம்ஸர்க்கமாய் கர்-
-ப்பாசயத்தில்ப்பட்டு அஸ்த்தியென்ற உற்பவம்
மாதாபிதாக்களினுடைய பிராணவாயுக்களி-
-ல் கௌஞற்மாவென்ற பிரிவ சம்போககால
-தில் சுக்ல சுரோணிதம் வழியாக கலந்து நீர்க்
-குமிழிபோல் அந்தர்ப்பாகமாக கௌஞற்மா
-வென்னும் பிராணன் இந்துமணிபோலுண்டான
பீஜத்தில்ப்பட்டு சலித்து நின்றதினால் ஜாயதே
யென்றும் கர்ப்பத்தில் சிசுபமாக ஜன்மமெடுத்து
ஜனித்து வளராநின்ற இந்த சரீரம் மலமூத்திர
பாத்திரமாயும் நவத்துவாரபஞ்சரமாயும் அனுர்
-த ஜட துக்கமாயும் நசுவரமான ஜடமாகிலும்
மனோபுத்திசித்தாஹங்காரங்களாகிய அந்தக்கர-
-ணங்களினுடைய விர்த்திகளான சலன நிச்சலசா-
-ஞ்சல்லியாபிமான விர்த்திகளிலேயானென்றும்
என்னுடையதென்றும் உண்டான அஹம்மமதா
போதங்கிலை உண்டான ஒன்றே இந்த துக்கம்
“எத்ரயெத்ரா சரீரபரிக்ரஹ தத்ர தத்ர து-
க்கமிதிம் வியாப்தி” எவ்விடெவ்விடங்களி
ல் சரீரமமதா போதமுண்டோ

அவிட விடங்களில் துக்கமும் வியாபிக்கும்
ஆனதினால் சரீரமாத்திரங்களு துக்கஸாதனம்
சரீரமென்றுண்டான போதமே துக்க
காரணம் திரஷ்டாந்தமேதென்றால் ம-
னோபுத்திகளோடுகூடின பேர்களுக்கு அ-
வஸ்தாத்திரயங்களாகிய ஜாக்கிரத்-
தென்றும் சுஷுப்தியென்றும் காலபே-
தங்களில் ஜாக்கிரகாலம் புத்தியான-
து புண்ணியபாபஸம்ஸ்காரங்களை தான்
செய்யாநின்ற கர்மங்களில் செல்லும்ப-
டியாகசெய்து அசுவஸ்த்தமாயி சலித்த-
-தினால் ஸங்கடத்தை சரீரிகளுக்கு கொ-
-டுக்காநின்ற ஒன்றே ஜாக்கிராவஸ்த்தை-
அந்த சரீரமானதை சலிப்பிக்காமல் ச-
லனமற்றவனாய் சையயில் சயித்து நித்தி
ரையாக கிடக்காநின்ற பொழுது மனோபுத்தி
யானது சலித்து சொப்நபிரபஞ்சமென்று
ண்டான பிரபஞ்சம் தோன்றி துக்காவஸ்த்தை-
யில்பட்டு உண்டான ஸொப்நாவஸ்த்தையும்
விட்டு அந்தக்கரண தர்மங்களான மனோபுத்தி
சித்தஹங்காரங்களான இந்திரியங்கள்
சலநிஸ்ச்சல சாஞ்சல்லிய அபிமான விர்த்
திகளை செய்யாமல் ஒன்றாக சேர்ந்து ஜாக்-
கிர சொப்நாவஸ்த்தை காலத்திலுண்டான
விர்த்தியானமயன் மனோமயன் என்றுண்டான
பிரம்மாந்திரமான விடத்தில் இருந்து
ஆனந்தமயனில் சேரும் அப்போது சுபம்
ஏது அசுபம் ஏது புருடனேது ஸ்த்ரீயேது
தானேது அபரனேது என்று விஸ்மரித்து

சுஷுப்தியாக சயிக்கும். அக்காலத்தில் லபிக்-
-கின்ற சுகதுக்கத்துக்கு காரணம் சரீரபோ-
-தமில்லாமையாகிலும் ஆனதினால் எவிடத்தில்
சரீரபோதமான அகமமதாபோதமுண்டோ
அவிடத்திலெல்லாம் துக்கமாகிலும் -
ஆனதினால் ஜடரூபமாயி பாவரூபமான
இந்த துக்கத்தை நாசஞ்செய்ய மார்க்கமே-
-தென்றல்லவா நாம் காணவேண்டியது

(துறத்தலும் நல்லறத்துறையுமல்லது.)

துறத்தல் என்று சொல்லாநின்ற விஷயவிரக்-
-திகளாகிய தியாகம் சஹிஷ்ணதை காமக்ரோ-
-தலோப மோஹாதிகளாகிய விகாரங்களை நி-
-ர்மார்ச்சனஞ்செய்து பக்தியென்னும் சிரத்தை
யென்னும் உண்டான உணர்வினால் தீர்த்தமாடல்,
ஹிம்சை, பரித்தியாகம், தசேந்திரியநிக்ர-
-ஹம் நிவ்வியாசம் முதலானதுகளைப் பிடித்து
நல்லறத்துறைகளான வேதசூக்தங்களான
வேதபாடம் தேவபூஜை அக்நித்துவம் சித்தம்
மகிழ்ச்சி ஆதியான நியமபாரங்களான மா-
-ர்க்கங்களை அங்கீகரித்து ஸத்குருவான சா-
-துஸங்கஞ்செய்து அவரால் நிர்த்திஷ்ட-
-டமானவிடத்தில் சரீரத்துக்கனுயோச-
-சியமான ஆசனேபரியிலமர்ந்து பிரத்-
-தியாஹாராதிகளை செய்தும் பிராண-
-யாமங்களை செய்தும் ஜீவால்மா பர-
-மால்மாவென்னும் வகைபேதங்களில்
ஜீவால்மாவே பரமால்மாவென்றும்

பரமால்மாவே ஜீவால்மாவென்றும்
உண்டானபோதத்தோடுகூடி ஆல்மஸா
க்ஷால்க்காரம்மாயிருக்கும் பரமாத்மாவிட
த்தில் லயிக்காநின்ற அத்துவயிதமாயி
ஸச்சிதானந்த பரமானந்தமாகிலும்
அல்லாமல்

(புறத்தொருதுணையில்லை — எ-து.)

அன்னியதா மற்றொருவஸ்துவாக மற்-
றொரு காரணத்தினால் துக்கித்தது
என்றுசொல்ல காரணமில்லை. சரீரம்
வர ஒண்ணுமல் செய்வதே அல்லாதபடிக்கு
துக்கநிவர்த்திக்கு மற்றொருவிதத்திலுண்-
டான துணைக்காரணமுமில்லை.

“நைனம், சின்னுவந்தி, ஸஸ்த்ராணி,
நைனம், தஹதி, பாவக,
நசைனம், க்லேதயந்தியாபோ,
ந: ஸோஷயதி மாருத:

தானாகக்கொண்டு விளங்காநின்ற ஒன்-
று பரமால்மாவின் பிரதிபிம்பமான
ஜீவால்மாவைக்குறித்தாகிலும் ஜீ-
வால்மா பரமால்மாவின் வகைபேத-
மாகிலும் இரண்டும் ஒன்றாகிலும் அத்து-
வைதமாகிலும் அப்பேர்ப்பட்டதான ஆ-
ல்மாவை ஸஸ்த்ரமான ஆயுதத்தினா-
லே கண்டிப்பது சாத்தியமல்ல. பாபக
னை அக்கினியினால் தஹிப்பிக்க ஸாத்திய-
மதையில்லை. அம்பஸானஜலத்தினால் நனைக்க

ஸாத்தியதையில்லை-வாயுவினால் சோஷிப்பி-
-க்க ஸாத்தியதையில்லை-அயம்புவாக தி-
ளைக்கறதென்ற பிரபஞ்சமான பரமாத்மா-
வின் பிரக்கிருதியகளாகிய ஜீவாத்மா
க்கள் மூவகை ஜாதிநால்வகையோனி
எழுவகை தோற்றம் உத்தம மத்திம
அதமிர்த்தவர்க்கங்களாகிய எம்பத்திநா-
லுலட்ச பேதம் ஜீவராசிகளான உளர்வ-
ன நீர்வாழ்வன ஸ்தாவர ஜங்கமங்க-
-ளான பிராணிவர்க்கங்களின் ஜீவாத்
மக்கள் கவர்ந்து அஸ்த்திஜாயதே வர்த்-
தே பரிணமிதே க்ஷீயதே நஸ்யதே யெ-
ன்றுண்டான ரூபாந்தரப்படும்படியான
(இறத்தலும் பிறத்தலும்—எ-து)

ஜனனம் மரணம் என்றுண்டான இயற்கை-
-யாகிய காழ்ச்சையானது பிரகிர்தியாகிய
பஞ்சபூதபௌதிகமான பிரபஞ்சத்தின் பி-
ராகிர்தாவஸ்த்தையல்லாமல் மற்றொன்றி-
-லுமல்லவேயல்லவெ என்றுண்டான தத்துவபோ-
-தத்தை

(மறத்தியோமறைகளின்—எ-து) இந்தஸம-
-யம் பிதுர்மரணமான துராந்தராவஸ்த்தையை
கேட்டு மனுஷியவிக்கிரஹமவலம்பிக்கிறந-
-ன்ற நீயும் விஸ்மரித்துவிட்டாயோ ராகவா-
மறைகளான வேதங்களினுடைய பரிதியான
வியக்தியை மூச்சூடும் கிரஹிக்கிறன்ற நீ

வேதாந்தஸாரமூர்த்தியாகிலும் அப்படி உற்புத்த-
-ஞன உமக்கு இந்த விஸ்மிர்தி வரகாரண மென்ன
ராகவா. கவி.

பெறுவதன்முன்னுயிர் பிரிதல் காண்டியால்
மறுவறுகல்பினில் வையம் யாவையும்
அறுபதினாயிரமாண்டு மாண்டவன்
இறுவது கண்டவற் கிரங்கல் வேண்டுமோ (22)

(இ-ள்) தேஹமென்றும் தேஹியென்றும் உண்-
-டான, வியவஸ்த்தை, ஜன்மமெடுக்க கர்ப்பத்தி-
-லாவது உல்பத்தி ஸ்தானமான அண்டத்திலாவது
சுவேதஜத்திலாவது இப்படி உல்பவிப்பதற்க்கு
முன்னதாகவே அஸ்த்தியென்றுண்டான ஸ்தானத்-
-தில் வைத்து பிராணன் போகாநின்ற தன்மை ஸா-
-தாரணையாகிலும்

(மறுவறுகல்பினில்—எ-து) களங்கரஹித
மாகிய நீதியினலும் நியமகிரமங்களினலும்
வையகமாகிய பூமண்டலம் முழுதும் தன்னு-
-டைய ஸல்கீர்த்தியானது அனைசுவரமாக
நிலைநிற்க்க நிருத்தி பரிபாலனஞ்செய்யா-
-நின்ற உன்பிதாவேயாவென்றல் ஒருநாளல்ல
இந்த திரேதாயுகத்தின் ஆயுஷ்பரிதி காலம்-
-மட்டுமல்ல கிரதயுகத்தில் மானவாதிகளு-
-க்கு நூறுநூறு ஸம்வல்சரம் ஆயுஷ்காலமென்-
-றும் திரேதாயுகத்தில் முன்னூறென்றும் துவா-
-பரயுகத்தில் இருநூறென்றும் கலியுகத்தில்
ஒரு சதாப்தமென்றும் உண்டான காலபரிதியை-
-யும் அதிசயிக்க இந்த திரோதாயுக காலத்தில்

(அறுபதினாயிரமாண்டு — எ-து.) அறுபதினாயிரஸம்-
-வத்சரம் பூபரிபாலனம் நிர்வஹித்து பரலோ-
-கம் பிராபிக்கானென்ற உண்பிதாவை

(இறுவது கண்டவற் — எ-து.) மரணமடைந்து
போவதிற் அவர்பேரில் நீதுக்கிக்கவேணு-
மென்றுண்டோ ராகவா. கவி.

சீலமுந்தருமமுஞ்சிதைவில் செய்கையும்
சூலமுந்திகிரியுஞ்சொல்லுந்தாங்கிய
மூலம் வந்துதவியமூவர்க்காயினும்
காலமென்றொருவலை கடக்கலாகுமோ (23)

(இ-ள்.) சீலமென்ற சாத்துவீககுணமான
பரிசுத்தியும் ஜீவரக்ஷையென்ற பரிபாலனமு-
-ம். தர்மமென்ற உல்பாதனங்களும் புனர்
நிர்மாணமென்ற சிருஷ்டியும் சிதைவெ-
-ன்றுண்டான நாசமும் நசிப்பித்தல் என்ற
ஸம்ஹாரமும் இப்பேர்ப்பட்ட சிருஷ்டி
ஸ்திதி சம்ஹாரங்களென்ற தொழில்களு-
க்கும் உபகரணங்களாய் கருவிகளான

(சூலமுந்திகிரியும் — எ-து.)
சூலமென்ற ஆயுதமும் திகிரியான சக்கிராயு-
தமும் சொல்லான வேதங்களும் கரத்தில்வ
ஹித்தவராய்

(மூலவந்து தவிய — எ-து.) பாவசிருஷ்டி-
-தமான பிரபஞ்சத்துக்கு சிருஷ்டி ஸ்திதிநாச-
-மென்ற திரிவிதகரணங்களுக்கு உல்பவிக்கா-
-நின்ற சரீரதாரணைசெய்யும் சரீராவலம்பி-
-களாய் மூர்த்தித்திரயங்கள் அந்தமூர்த்தித்திர-
-யங்களான அரிஹரபிரம்மாதிகளும் கா-
-லமென்றுண்டான வலையில் வீழும் அந்த

(காலமென்றவெலெ — எ.து.)
திருமூர்த்திகளென்றிருந்தாலும் காலம் கா-
-லமென்று சொல்லாநின்ற அதீதமான வெலெயி-
ற்ப்பட்டு நசிப்பதேயல்லாமல் அற்புதங்களான
ஒன்றுக்கொன்று வித்தியஸ்தமான பிராணி
வர்க்கங்களை சிருஷ்டிக்கும் பிரம்மாவுக்-
-க்கும் எல்லா ஜீவகோடிகளையும் சத்திகளை-
-ப்போல் ஸம்ரக்ஷிக்கும் தர்மமூர்த்தியான விஷ்-
-ணுவுக்கும் அபாரமான சக்தியோடுகூடின பி-
-ராணிகளை சம்ஹரிக்கும் சிவபெருமானுக்கும்
அவரவர்களினுடைய காலமென்னுண்டான வெலெ-
-யைக்கடந்து உஜ்ஜீவிக்க சாத்தியதையுண்டோ
ராகவா                கவி.

புண்ணியநூனெறியில் பொருவில் காலமாம்
திண்ணிய திரியிணில் விதியென்றீயினில்
எண்ணிய விளக்கவை யிரண்டுமெஞ்சினல்
அண்ணலேயவிவதற்ஐயமாவதோ- (24)

(இ-ள்.) புண்ணியமென்ற "ஜாதஸ்யஹி துருவம்
மிர்த்திய துருவம் ஜன்ம மிர்தஸ்யச;"
என்னுண்டான நியமத்தினல் முன்னே மரண-
-மடைந்தவன் அனந்தரம் ஜன்மமெடுக்கிவது
நிச்சயமாகிலும். ஜனித்தவன் நிச்சயமாக ம-
-ரணமடையும் ஜன்மமென்ற பதம் ஜகார-
-த்தினல் ஜனனவும் மகாரத்தினல் மரணவும்
ஆகிலும் பூர்வகால புண்ணியபலம் ஹேதுமா-
-க ஜன்மமெடுக்கும்- அந்த புண்ணியமென்னும்
பாவனமாகிய நெய்யினல் லபிக்காரதன்ற ஜன்-
-மத்தில் பலமேறின பூரித்திராரதன்ற சரீரமென்ற

திரியை வைத்து விதியென்றுண்டான தீயாகிய
அக்கினியை கொளுத்தி பிரகாசிக்கப்பட்ட
தீபம் போலவுண்டான ஒன்றாக சரீரத்தை
நிச்சயித்து நாமரூபாத்மகமாகிய தேஹிகள்
உற்பவித்து புண்ணியமென்னும் நெய்யானது
வற்றி வரண்டு வறண்பட்டு காலமென்று
சொல்லாநின்ற சரீரம் படுதிரியாக குத்தி
யெரிந்து விதியென்று சொல்லப்பட்ட அக்-
கினியானது சரீரமான திரியிலிருந்து கெட்டு
போகும் அதற்க்கு சந்தேகமுண்டோ ராம.
தேஹியான ஆத்மாவுக்கு நாசமில்லை அது
மற்றொரு சரீரத்தை பிராபிக்கும்

"வாசாம்ஸி ஜீர்ண்ணானி யதாவிஹாய
நவாணிவஸ்த்ரணி நரோபராணி
ததாசரீராணி விஹாயஜீர்ண்ண
அண்ணியசரீராணி நிவாணிதேஹி.

என்ற சுருதிவாக்கியத்தினால் ஜீர்ண்ணிக்கா-
நின்ற வஸ்த்ரங்களை மாற்றி புதுமையான வ-
ஸ்த்ரங்களை சரீரிகள் தரிக்காநின்ற தன்மை-
யைப்போல் தேஹியான ஆத்மாவு ஜீர்ண்ணி-
க்காநின்ற ஜடரூபமான சரீரத்தை விட்டு நூத-
னமான சரீரத்தை பிராபிக்கும் ஆனதினால் உ-
னது பிதாவு மரணமடைந்தவரல்ல, தனது பு-
ண்ணியபலத்தினால், திவ்விய தேகம் பிராபித்தவர்
அவர் விஷயத்தில் நீ துக்கிக்ககூடாது. பிதாவு
க்கு வேண்டிய கடன்களை கௌதமீ தீர்த்தத்தில் செ-
ய்து நிர்வஹித்துகொள்வாய் ராகவ.

அவதாரிகை
இப்படி ஸமாதானஞ்சொல்லி சீதையையும்

ராமனையும் தேற்றி மறுநாள் யெல்லாவரும் ராம-
-னுடைய சமீபத்திலிருக்கிறபோது ராமன் பரத
னோடு சொல் கவி.

வாதநன்றுஞ்சினன் வையமாணையால்
சரதம் நின்னதே மகுடந்தாங்குவாய்
விரத வேடம் நீ யென் கொல் வேண்டுவான்
பரத வந்து தடங்குவாயின்றே. (25)

(இ-ள்.) அதோவாராய் பரதா வரதனென்னும் தர்மதல்பரனான மது பிதாவானவரும் எனது வனவாசமான வேர்பாடின் னேதுகமாக மரணமடைந்தவரல்லவோ - பிதாவினுடைய அபாவத்தில் பைதுருகமான அயோத்தியா பட்டணத்தை பிதாவின் ஆஞ்ஞைய பிரகாரம்.

(சரதம் நின்னதே — எ-து.) சரதமென்னும் நிச்சயமாயி நிர்ப்பந்தபேமாயி கிரீட தாரணையானைத்தை செய்து பிரஜாவிற் ந்தங்களை பாது காவல் செய்ய வேண்டினது உனது கடமையாயிருக்க நீ அதுகளை யாதொன்றும் அவீகரிக்காமல் ஒரு

(விரதவேடம் நீ — எ-து.)
விர்தானுஷ்டானத்தை ஏற்றெடுத்தவனைப்போல தியாகசீலனாயி தபோவேஷம் தரிக்க காரணமென்ன? என்னிடத்தில் வந்து சேர்ந்து ஆஸ்ரயிக்க காரணமென்ன?

(பரதவந்து — எ-து.) மாதுரு பித்ருக்களே ராஜ்ஜியயிலிருந்தல் ராஜ்ஜியபரிபாலனஞ்செய்ய வேண்டினது நீ விதூர பிரதேசமான இந்த

சித்திரகூடபர்வதத்தில் வந்துசேருவதற்க்கு காரணமென்ன? உன்னுடைய ஆகமனபிரயோ-ஜனம் இன்னதென்று சொல்லுவாய் தம்பி

அண்ணா ராமசந்திரபிரபோசுவாமின். அடி யேன் தபோவேஷமெடுத்ததையும் இவிடத்தில் வந்து சேர்ந்ததேயும் அற்புதகரமாக நினைக்கவே-ணுமென்றில்லை எதிலுமில்லையென்றல். கவி.

மனக்கொண்றதன வரத்தினின்னையும்
நினக்கொன்றிலை நிருவிரேமியான்
துணைக்கொண்டருந்துணையறுதலால்
எனக்கொன்றுதவ மடுப்பதெண்ணினல் (26)

(இ-ள்) என்மாதாவானவளுக்கு அவளுடை-யமனதில் ஸமதிக்கும்பொருட்டாகவும் கூடி யோகிக்காமல் இருக்கிற ஒரு ஸ்திரீ இர்தய-த்தில் தோற்றமடையாமல் இருக்கவேண்டின பார்த்துவு இறுதயமல்லாமலிருக்கிற நடவடி-க்குவேண்டி வரத்துயவங்களை சாட்டியரே-பேண பிதாவினிடத்தில் இருந்து சுவிகரித்து உம்மையும்

(நினக்கொன்றிலை—எ-து.) உமக்குயோ-சிக்காமலிருக்கிற வனவாசத்தில் இருத்தி நேமியென்னும் ஆஞ்ஞியசெங்கோல் நடத்தும் நமதுபிதாவான சக்கரவர்த்தியானவரை.

(துணைக்கொண்டரு—எ-து.) தனதுபிராணன் போககடோரவார்த்தையினால் நிக்ரஹிக்க கூடினவளேஎன்மாதாவு அவளுக்கு புத்திரனக

பிறக்கும்யானொருவன் பிறந்து இருந்ததினால்
யாதொரு பிரயோசனமுமில்லை. பிதுருமரணத்-
-துக்கும் உமது வனவாசத்துக்கும் காரணமான
பாபரூபியாய் ஜனிக்கிறேன்

(எனைக்கொன்றுதவ — எ-து.) பாதகனாகிய அடி-
யனுக்கல்லவா இந்த பாபகர்மங்களுக்கு பிரா-
-யச்சித்தரூபமாக பரிசுத்தமார்க்கமான தபோ-
-வேஷமும் வனவாசமும் அனுயோக்கியமாகி-
-றது ஆனதினால் நான் தபோவேஷமெடுத்து இ-
-விடத்தில் வந்ததினால் குற்றமுண்டோ என்று

கவி.

நோவதாக விவ்வுலகை நோய்செய்த
பாவகாரியிற் பிறந்த பாவியேன்.
சாவதோர்கிலேன்றவஞ்செய்வேனலேன்
யாவனாகியிப்பழி நின்றேறுவேன் (27)

(இ-ள்.) இன்னும் இந்தவிஷயத்தை சொல்லு-
மாயிருந்தால் உலகத்தார்களாகிய பௌரா-
-வலிகளுக்கும் அரண்மனையிலுண்டான
ஸகலமான பேர்களுக்கும் உமக்கும் பரதனெ-
-ன அடியேனுக்கும் அபாரமாகிய ஸங்கடத்தை
ஆக்கி தீர்த்து போனவளே என் மாதாவு இப்பேர்-
-ப்பட்ட அபராதியான அந்த

(பாவகாரியிற் — எ-து.) பாவமென்று சொ-
-ல்லாநின்ற ஒன்றை உற்பாதிப்பிக்கிறாளென்ற என்-
மாதாவான கைகேயியினிடத்தில் ஜனித்த நான்
ஒரு அபாரமாக புண்ணிய பூமியான அயோத்தியில்

இருந்தென்ன பிரயோஜனம்

(சாவதோர்கிலேன் — எ-து-) உத்தமமான காரியம் மரணமென்றிருந்தாலும் அதையும் காரியகாரணங்-
-களையும் நினைத்து செய்யத்தக்கவும் மனோதைரி-
-யப்பட்டவனுமல்ல. தவசை செய்ய யோக்கி-
-யதையுள்ளவனோ அதற்க்கும் யோசித்தவனல்ல.

(யாவனாகியிப்பழி — எ-து-) இப்பேர்ப்பட்ட அடி யேன் ஒன்றுக்கும் பிடியாத பிரேஷ்டனைப்போல் பழியான அபவாதத்தை சுமந்து நாசமடைந்து ஜன்மமெடுத்தவனாக வந்ததே அன்றே இந்த நசித்த ஜன்மமானதுக்கு பாவியில் பிராயச்சி-
-த்தஞ்செய்து நல்ல ஜன்மம் லபிக்கசெய்தால் இந்த தபோவேஷத்துக்கு குற்றமுண்டோ த-
-மையா- இன்னும் ராஜகிரீடம் தரிக்காமல் வ-
-ந்ததைபற்றி சொல்லலாம்- அக்கிரஜனை தே-
-வரீர் இருக்குங்காலத்தில் அடியேன் ராஜகிரீ-
-டம் தரிப்பது சரியல்ல ஏதிலையென்றல்

கவி.

நிறையினீங்கிய மகளிர் நீர்மையும்
பொறையினீங்கிய தவமும் பொங்கருட்
டுறையினீங்கிய வறமுந் தொல்லையோர்
முறையினீங்கிய வரசின் முந்துமோ (28)

(இ-ள்-) அச்சம் மடம் நாணம் பயிர்ப்பு முதலான வகைகளிலிருந்து நீங்காநின்ற ஸ்திரீகளினுடைய சௌந்தரியமும் ஸத்தி-
-யசந்தத்தையும்

(பொறையினீங்கிய—எ.து.) பொறையாகிய
தியாகசீலமில்லாமல் காம,க்ரோத,லோப,மோஹ
மத,மச்சர, ஈர்ஷிய, டம்ப, அசூயை, முதலான துஷ்-
-ட விகாரங்களுக்கு அதீனப்படாதென்ற யாவ-
-னொருவன் செய்யாதென்ற தவசும் பொங்கிபொங்கி
உயர்ந்து விகஸிதமாயி வராதென்ற தைவகடாக்ஷ
அநுக்கிரஹாசிசுகள் என்றிப்படி யுண்டானவ-
-தைபேதங்களுக்கு வேண்டி நிஷ்காமரூபமாக
செய்யும் தானதர்மங்கள்-
(துறையின்நீங்கிய—எ.து.) துறையென்ற அ-
-பிமானரூபமாயி செய்யதென்ற ஈசுவரார்ப்பண
மல்லாமல் பேர்பெருமைலபிக்கலபிக்க செய்-
யும் தானதர்மங்களும் தொல்லையோராகிய
பூர்விகர்களானபேர்கள் பாரம்பரியமாக
செய்யாதென்ற தர்மத்தை உபேக்ஷித்து
(முறையினீங்கிய—எ.து.)
முறையென்ற குருத்துவ லகுத்துவம் மூப்பிளை-
மை மேல்கீழ் என்றுண்டான வித்தியஸ்த
தைகளை ஆலோசிக்காமல் செய்யாதென்ற தா-
-னங்கம் இப்படி சொல்லாதென்ற மூன்று தர்மங்கள்
துணிசெய்தாந்தமான அபிப்பராயத்தினாற்
செய்தால் அது புரோகதிபிராபித்து வரு-
மோ அண்ணா . கவி.

உந்தை தீமையும் மூலகுருத நோய்
தந்த தீவினை த்தாய் செய் தீமையும்
எந்தை நீங்கமீண்டாசு செய்கைஞ்சு
சிந்தை பாவதும் தெரிய கூறினேன் (29)

(இ-ள்.) உந்தையென்னும் உமதுபிதாவான

தசரதமஹாராஜாவானவர் செய்யாநின்ற
ஸாஹஸமானபொல்லாப்புகள் உலகவாசிக
ளுக்கு ஒருநாளும் தீராமலிருக்கிற பரிபவமா
ண துக்கத்தை கொடுத்தும்
(நந்த தீவினை — எ-து.) தீவினைசெய்தன
மாதாவானவள் செய்யாநின்ற உபத்திரவ-
ங்களும்
(எந்தைநீங்க — எ-து.) எந்தையென்னும் என்
பிதாவுக்கு சமானனாயிசோபிக்காநின்ற
ஹே அண்ணா எல்லா சங்கடமும் தீரவேணு
மானால் எனதுமாரணத்தினாலேயோ தவசி
னாலேயோ வனவாசத்தினாலேயோ ஒன்றும்
தீரமார்க்கமில்லை ஆனதினால் இவ்விடத்திலி-
ருந்து அயோத்திக்கு மடங்கிவந்து உமக்
கதிகாரமான ராஜ்ஜியத்தையெடுத்து
ராஜ்ஜியம் பரிக்கவேண்டுமென்று என்
(இந்தையாவது — எ-து.)
இந்தையான என்னுடைய அபிலாஷங்கள்
ஆகமனபிரயோசனங்கள் எல்லாம் உம்மிட
த்தில் தெரியும்பொருட்டாக இதோ அடி-
யேன் சொல்லிக்கொண்டேன் லேசமும் கால
தாமஸம் செய்யாமல் நமக்கு அயோத்திக்கு
போகலாம் தமையா
அதோர் வாராய் தம்பி வாராய் பரதா உன்னு
-டைய ஆகமனத்தே சங்கினை ராமனுணர்ந்தா-
ன்தெரிந்தேன். நீ தவசை செய்தாலும் மர-
ணமடைந்தாலும் வனவாசஞ்செய்தாலும்
அபராதியாகவருவாயென்றும் இந்த
ஸம்பவங்களுக்கெல்லாம் காரணபூதனாக
நீ என்னை ராஜ்ஜியத்தில் கொண்டு சென்று

ராஜ்ஜியம் பரிக்கச் செய்து என்னுடையதாகிய
கிர்த்தியங்களைச் செய்தால் நிரபராதியாகவரு
வென்னும் ஆலோசனை செய்துவிட்டாயோ
உன்னுடைய ஆலோசனை ஒருநாளும் சரியல்ல
நீ மனசா வாசா கர்மணா குற்றஞ்செய்தவனு
மல்ல-                    கவி-

பரவுகேள்வியும் பழுதில் ஞானமும்
விரவு சீலமும் வினையின் மேன்மையும்
உரவிலோய் தொழற்குரிய தேவரும்
குரவரேயெனப் பெரிது கோடியால் (30)

(இ-ள்-) பரவிவிசாலம் பொருந்தினை கேள்
விகளான வேதசாஸ்திரங்களும் அதின் உபதே
-சங்களும் பழுதென்னும் பங்கமில்லாம-
-லிருக்கிற ஆத்மபோதங்களும்

(விரவுசீலமும் — எ-து-) கிரமமாகச் செய்-
-யாநின்ற தர்மங்களின் சிரேஷ்டதைகளையும்
விட்டுவிடாமல் அனுஷ்டிக்காநின்றவனே-
-தம்பிநீ (உரவிலோய் — எ-து-) கிர்த்திய நி-
-ஷ்டைகளில் பிரபலனானவனே சோதரா நாம்
தொழுது அபிவந்தியஞ்செய்யாநின்ற தேவர்-
களான ததீசகணங்களும்

(குரவரேயென — எ-து-) பூர்வோக்தமாகச் சொல்-
-லாநின்ற இவர்களிலும் நிஷேதிக்கப்படா-
-மல் அங்கீகரிக்க வேண்டின பெரியபேர்களெ-
ன்று நீ தரித்துக்கொள்வாய் தம்பி

கவி.

அந்தநற்பெருங்குரவராரெனச்
சிந்தைதேர்வுற தெரியநோக்கினல்
தந்தைதாயரென்றிவர்கடாமலால்
எந்தைகூறவேறெவருமில்லையால் (31)

(இ-ள்) அந்தன்மையான பெரியோர்களான பேர்களில் நாம் ஆதரிக்கவேண்டியபேர்கள் யாரென்று ஆலோசனைசெய்தால் வேதசூத்திரங்களை அப்பியஸிக்க ஸாத்தியதையில்லாமல் இருக்கிற நிரக்ஷரகுக்ஷியென்றிருந்தாலும் ஈசுவரனென்றோ உலகமென்றோ ஜீவனென்றோ விவகாரந்தெரியாமல் அஞ்ஞானியென்றிருந்தாலும்

(சிந்தைதேர்வுற-எ-து) சிந்தையான மனதில் ஆலோசனைசெய்து நாம் தினைந்தெடுத்து நமக்கு பிரத்தியக்ஷமாக பார்வைசெய்யுமாகல் நமது அனுபவத்தில் காணும் தெய்வமாகிய ஆராத்தியர்களானபேர்கள்

(தந்தைதாயரென்றிவர்-எ-து)
ஸோதரா தம்பிபரதா தந்தையாகிய பீஜ கிர்த்தாவானபிதாவும் பெற்றெடுத்தமாதாவும் பிரத்தியக்ஷ தெய்வங்களாகிலும் மாதா பிதாக்களான இவர்களையல்லாமல் (எந்தைகூறவேறெவருமில்லையால்)
எந்தையென்னும்

எனது பிதாவைப்போல் வால்சல்லியமுடைய ஜேஷ்டஸோதரா நமக்குவந்தணைசெய்து ஆத-ரிக்கும் தைவங்கள் மாதாபிதாக்களல்லா-மல் மற்றொருவருமில்லையே தம்பி.

கவி.

தாய்வரங்கொள தந்தையேவலால்
மேயநங்குலத்தருமமேவினேன்
நீவரங்கொள் தவிர்தனீர்மையோ
ஆய்வரும்புலத்தறிவுமேவினாய் (32)

(இ-ள்.) நீபாபியாகவர மாதாவும் குற்றப்பட்டவளல்ல. தந்தையான பிதாவும் குற்றஞ்செய்தவரல்ல. நானொருவனும் குற்-றமுள்ளவனல்ல

(தாய்வரங்கொள — எ-து.) தாயான மாதா வாணவள் வரத்துயவங்களை கேள்க்க தந்-தையான பிதாவின் ஆஞ்ஞியானுஸாரேண ராமனானும்

(மேயநங்குல — எ-து.) மேன்மையுடைய நம்முடைய சூரியகுலதர்ம நீதி பிரகாரம் வனவாசத்துக்கும் வேண்டி இவிடம் வந்து சேர்ந்தேன்

(நீவரங்கொள — எ-து.) நீயும் என்னை-ப்போல் மாதுரு பிதுரு வாக்கியம் பரிபாலனஞ்செய்யாமல் அதை உபேக்ஷைசெய்வது

சரியான தர்மமாகுமா

(ஆய்வரும்புல — எ-து) மனுபுத்தி களா-
-கிய விசேஷ புத்தியினுல் தர்மசாஸ்திரங்-
-களை யுக்தியுக்தமாக பார்த்து விதிநி-
-ஷேதங்களை தெரிந்து நியாமியாகிய நீ
உன்னுடைய அறிவினுல் சரியானமார்க்க-
-த்தை தெரியாமலிருக்கிறவனைப்போல
யோசனைய் தம்பி. மாதாபிதாக்களின்
வார்த்தையை லங்கிப்பது உனக்கு குற்றமா-
-ன அன்னியனதயாக தோவில்லையோபாதா.

கவி.

இம்மைபொய்யுரைத்திவறியெந்தையார்
அம்மைவெம்மைசேர்நரகமாளயான்
கொம்மைவெம்முலைக்குவையில்வைகிவாழ்
செம்மைசேர்நிலத்தரசுசெய்வனே (33)

(இ-ள்) இம்மையானபரிபாவனமாகிய த-
-னது இந்தஜன்மத்திலுண்டான அகுஜத-
-மானதை ஒருபொய்சொல்லி என்பிதா-
-வானவர் நகிப்பிக்காமல்

(அம்மைவெம்மை — எ-து) அம்மையெ-
-ன்னும்பரலோகத்தில் புகழுடம்பான கீ-
-ர்த்தியை ஸம்பாதித்து ஸாசுவதமான
சுகம் அனுபவிக்கவேண்டியது.

ஸத்தியலங்கனஞ்செய்து வெம்மையென்-
னும் பயங்கரமான நரகத்தில் வீழ்ச்செ-
-ய்து தாசரதீராமனை நானொருவன் ரா-
-ஜபோகங்கள்

(கொம்மை வெம்முலை— எ-து.) ஸ்தரீக-
-ளுடைய ஸ்தன சமூஹங்களின் போ-
-கங்களில் லயித்தவனாயி அதில் ஆகிர்ஷ-
-டனாயி (செம்மைசேர்— எ-து.) இதுவே
சுகமென்றெண்ணி மனப்பூர்வமாக என்
-பிதாவுக்கு நரகங்கொடுக்க ராஜவா-
-ழ்ச்சை செய்யவேண்டும் அதுவே தர்-
-மமென்றே சொல்லுகிறாய் தம்பி

கவி

முன்னர் வந்துதித்துலகமூன்றினும்
நின்னையொப்பிலர் நீபிறந்தபார்
எண்ணதாகில் யானின்று தந்தனன்
மண்ணபோந்து நீமகுடஞ்சூடுவாய் (34)

(இ-ள்.) முன்ன முன்னமாக உல்பவிக்கா-
ன்ற பேர்களில் இந்தசொர்க்கமத்தியபாதா-
-ளாதிகளான உலகங்களில்

(நின்னையொப்பிலர்— எ-து.) தம்பிபரதா-
உனக்கு ஸமத்துவமுள்ளபேர்கள் ஒரு
பேர்களும் பரதநிபுணர்களாக பிறந்த
பேர்களில்லை- அப்பேர்ப்பட்ட இந்தபரா-
ணையும் ராஜ்ஜியமும்

(என்னதாகில் — எ.து.) என்னுடைய
அதீனத்திலுள்ளதென்று நீ சொன்னால் இ-
-தோ இந்த பர்வதத்தில் வைத்து உனக்கா-
-க நான் கைமாற்றமாக கைமாறி தருகிறது-
என்னால் லபிக்கானின்ற இந்த ராஜ்ஜிய-
த்தை பரிக்கும் பொருட்டாக.

(மன்னபோந்துநீ — எ.து.) மன்ன
னென்னும் ராஜாவென்றுண்டானஸ்தா-
-னத்தில் உபதிஷ்டனாயி அவர்ன்ன
-கிரீடத்தையும் தரித்து பதிநாலு ஸம்-
-வல்சரம் அரசாட்சியை செலுத்த தம்பி

கவி.

மன்னவனிருக்கவேயுமணியணிமகு
-டஞ்சூடு-கென்னயாணியையந்த தன்னு
ளேயதுமறுக்கவஞ்சி- அன்னது
நினைந்து நீயென்னிணையை மறுக்-
-கலாமோ-சொன்னது செய்தியையய
துயருற்றந்தயரவிண்ணே- (35)

(இ-ள்.) மன்னவனென்னும் நமது பிதா
-வெ இருக்குங்காலத்தில் மணிகளானநு-
-வரத்னங்களால் பணிவிடை செய்யா
-நின்ற கிரீடத்தை நீயே தரிக்கவேண
-மென்றும் நீயே ராஜ்ஜியபாரம் நடத்த
-வேணுமென்றும் என்னிடத்தில் பிதா
-வெ சொல்லி

(தனையாளினையந்த—எ-து-) அதற்க்-
-குநான்சொற்பட பிதாவின் ஆஞ்ஞியயை
லம்ங்கிக்க பயந்த நீலவாகிலும் இந்த
தபோவேஷமானது அவலம்பித்தது
(அன்னதுநினைந்து—எ-து-) அதேபி-
-ரகாரம் நீயும் ஆலோசனை செய்து
என்னிடத்தில் பக்திபஃமானவனு
-ன்னவனென்றிருந்தால் எனது ஆஞ்-
-ஞியயை உனக்குலங்கிக்கலாமோ
எனதுகல்பனையை உபேக்ஷிக்கலா-
-மோ- தாசரதீராமனுன என்னிடத்தி-
-ல் வாத்சல்லியமுன்னவனென்றிருந்-
-தால்யான்
(சொன்னதுசெய்தி—எ-து-) நான்
சொல்லுன்றவார்த்தைகளை அனு
-ஸரித்து சோகதாபங்கள் ஹேதுகமாக
பரதைகாரியங்களில் குறைவுவருத்
-தாமல் இறுப்படாத.ராஜபரணஞ்-
-செய்துகொள்வாய் தம்பி.

அவதாரிகை

என்றிப்படிராமன் ஆஞ்ஞையிட்டுசொ-
-ன்னதற்கு பரதன் உத்தரஞ்சொல்லுகி-
-றதற்குமுன் தேவர்கள் ஆகாசத்தில்நி-
ன்றுசொல்

கவி-

ஏத்தரும்பெருங்குணத்திராமனிவ்வழி
போத்தருந்தாதைசொல்புரக்கும்பூட்சியான்
ஆத்தவாண்டேழிரண்டேழ்மண்ணிலம்
காத்தவுங்கடனது கருணையுள்ளத்தாய் (36)

(இ-ள்-) அதோவாராய்பரதா ஏத்திசிரத்திக்-
-கபிரயாசமேற்றின இணங்களில் சிலாக்கிய-
-ஞகிய ஸ்ரீராமசுவாமியானவர் இவ்வழியெ-
-ன்னும் உம்மிடத்தில் சொல்வாநன்ற தர்மமா-
-ர்க்கத்தில்

(போத்தருந்தாதை—எ-து-) தாதையென்னும்
பிதுர்வாக்கியப்படி வனதீட்ச்சைக்காக
வந்தது சத்தியம் நிறவேற்றவேண்டின-
-தினலாகிலும் சத்தியமேவஜயதே என்றிரு-
ந்ததினல்

(ஆத்தவாண்டேழிரே—எ-து-) வனம்வி-
-ட்டு மீண்டுவருவதற்க்கு அவதிநாளாக சொ-
-ல்லாநன்ற பதிநாலுஸம்வல்சரம் அவதி-
-காலமாகிலும் அந்தகாலபரிதிவருகிறமட்டும்
அயோத்தியாபட்டணத்தை

(காத்தவுங்கடனது—எ-து-) காத்து பரிபா-
-லனஞ்செய்யவேண்டின கர்த்தவியம் கரு-
-ணையில்மேன்மைவாய்ந்த உமது கடமையில்
உள்ப்பட்டது கேட்டீரோ பரதாள்வாரே

கவி.

ஆமெனிலேழிரண்டாண்டிலையநீ
நாமநீர்நெடுநகர்நண்ணிநாணிலங்

கோமுறைபுரிகில்லையென்றிற் கூர்எரி
சாமிதுசரதம் நின்றனைசாற்றினேன் (37)
வரதாய்பரதாதேவர்கள்சொல்லையும்
எனதுசொல்லையும்மறுக்கவேண்டாமென்று
அழுதகண்ணீருடன் சொல்லுகிறீரே அண்ண-
சரணம் ராமசந்திரா உமதுவாக்கியமும் தே-
வவாக்கியமும் எழிரண்டுபதினாலு ஸம்வல்ச-
-ரம்காலம் உமது கல்பனையை லம்கிக்காம-
-ல் ராஜ்ஜியத்திற்போகிறேன் அவதிகாலங்-
கழிந்து.

(ராமநீர்நெடுநகர்—எ.து.) சாநுதியான
சாயூர்நதியால் சூழாநின்ற அயோத்தியில்செ-
-ன்றுசேர்ந்து அந்தபரதகாரியங்களை அ-
-வதிமட்டும்செய்து அவதிநாள்கழிந்து பதினை-
-ந்தாம் ஸம்வல்சரம் பிறக்கும் சூரியோதைய-
-த்தில் தேவரீர் வந்து சேர்ந்து

(கோமுறைபுரிகில—எ.து.) முறையென்னும்
கிரமமாக அரசாங்கமான ராஜ்ஜியபரிபா-
-லன செய்தவரல்லையென்றுவந்தால் நல்ல
ணமே கத்தியெரியாநின்ற அக்கினியில்சாடி
பரதனைஅடியேன்

(சாமிதுசரதம்—எ.து.) மரணமடைந்து
போவேன் என்றுண்டான ஸத்தியவாசகத்தை
உமதுபுரோபாகத்தில்வைத்து பிரதிக்ஞையை
எடுத்துக்கொண்டேன் அண்ண

கவி.

அடித்தலம் இரண்டையும் அழுதகண்ணினன்
முடித்தலம் இவையெனமுறையிற்சூடினன்
படித்தலத்திறைஞ்சினன்பரதன்போகுறேன்
பொடித்தலம் இலங்குறுபொலங்கொள்மேனியா (38)

(இ-ள்.) சரணம் ராமசந்திர பிரபோ
சுவாமின் அடித்தலங்களான பாதுகாங்கள்
இரண்டையும் அழுத கண்ணீர்கணங்களால்
அபிஷேகஞ்செய்து
(முடித்தலம் — எ-து.) என்சிரசில்தரிக்கா
நின்ற கிரீடங்கள் இவைகளாகிலுமென்று
சொல்லி உம்முடைய பாதுகாங்களை ஏந்திக்
கொள்கிறேன் அண்ணா மறுபடியும் உம்முடைய
(படித்தலத்தி — எ-து.) பாதங்களில் தீர்க்க-
-தண்ட நமஸ்காரஞ்செய்து விடைகொள்கிறேன்
(பொடித்தலம் — எ-து.) இலங்கி பிரகாசிக்-
-கா நின்ற நீலமேகசியாமளனானவரே அண்ணா
அடியேனுக்கு விடைதாரும் சுவாமி.
அப்படியே நீ விடைகொண்டுவாய் பரதா.

கவி.

நந்தியம்பதியிடை நாதன்பாதுகம்
செந்தனிக்கோல்முறைசெலுத்தச்சிந்தையான்.
இந்தியங்களை அவித்திருந்தல்மேயினன்
அந்தியும்பகலும் நீர் அருதகண்ணினன் (39)

(இ-ள்.) அதோவாரீர் தேவர்களே பரதாள்வாரும்
தம்பியான சத்துருக்கினனிடத்தில் ராஜ்ஜிய
பாரமேற்பித்து நந்திகிராமமத்தியத்தில்
நாதனை சுவாமியானவருடைய பாதுகம்

சிம்ஹாசனத்தில் வைத்து
(செந்தனி கோண்முறை—எ.து.)
தான் செய்யும் பரணகிரமங்களையெல்-
-லாம் அதினிடத்தில் ஈ.சுவரார்ப்பணமா-
-க செலுத்தி
(இந்தியங்களை—எ.து.) பஞ்சேந்தி-
-ரியங்களும் ஏகாக்கிர மனஸ்கனாய்
சுவாமியானவரிடத்தில் செலுத்தி தவ-
-திருக்குந்தன்மையை பூண்டு
(அந்தியும் பகலும்—எ.து.) ராத்திரியும்
-பகலும் கண்ணீர் கணங்களான அசுறு-
-தாரைகள் ஒழுக்கி தவசை செய்யா-
-நின்ற மரியாதையை கண்டதில்லையோ
தேவர்களே
சித்திரகூடத்தில் அதிவாசஞ்செய்யும்
சுவாமியானவரும் தனது ஸமுதாயத்தா-
-ர்களையும் நேரில் கண்டு இவிடம்வன-
-வாசஞ்செய்வது சரியல்ல என்று சொ-
-ல்லி தெண்டகர் வனத்திற்கு பிரயா-
-ணஞ்செய்தார் தேவர்களே

அயோத்தியா காண்டம்.
முற்றிற்று.

